# சித்தர் பாடல்களில் வாழ்வியல் உண்மைகள்

பிஎச்.டி., பட்டத்திற்காகத்
திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்
**கி. பாண்டியன்**, எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்.,
முதுநிலைப் பட்டதாரி ஆசிரியர்,
நேரு மேல்நிலைப்பள்ளி,
புத்தனாம்பட்டி-621 007.



பாரதிதாசன் பல்கலைக் கழகம்
**திருச்சிராப்பள்ளி - 620 023.**
**மே 1996**

முனைவர். அ.இராமரத்தினம், எம்.ஏ.,எம்.ஃபில்.,
பிஎச்.டி., பி.டி.,
தலைவர் தமிழ்த்துறை,
பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி,
பழனிநகர்,
நாமக்கல் - 637 405.

## ஆய்வு நெறியாளர் சான்றிதழ்

'சித்தர் பாடல்களில் வாழ்வியல் உண்மைகள்' என்னும் பொருள் குறித்து பிஎச்.டி. பட்டத்திற்காக புத்தனாம்பட்டி நேரு நினைவுக்கல்லூரி, தமிழ்த்துறையில் க.பாண்டியன் (முதுநிலைப்பட்டதாரி ஆசிரியர், நேரு மேல்நிலைப்பள்ளி, புத்தனாம்பட்டி) அவர்கள் என் மேற்பார்வையில் ஆய்வு நிகழ்த்தி இவ் ஆய்வேட்டை உருவாக்கியுள்ளார். இவ்வாய்வு அவருடைய சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எப்பட்டத்திற்கும் இதனை அவர் அளிக்கவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

திருச்சிராப்பள்ளி,
நாள்: 23.05.96

(அ. இராமரத்தினம்),
நெறியாளர்.

கி. பாண்டியன், எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்.,
முதுநிலைப்பட்டதாரி ஆசிரியர்,
நேரு மேல்நிலைப்பள்ளி,
புத்தனாம்பட்டி - 621 007.

## ஆய்வாளர் உறுதிமொழி

புத்தனாம்பட்டி நேரு நினைவுக்கல்லூரி, தமிழ்த்துறையில் முனைவர் அ.இராமரத்தினம், தமிழ்த்துறைத் தலைவர் ஓய்வு அவர்களின் மேற்பார்வையில் "சித்தர் பாடல்களில் வாழ்வியல் உண்மைகள்" எனும் பொருள் குறித்து ஆய்வு நிகழ்த்தி, திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக் கழகத்தின் பிஎச்.டி. பட்டத்திற்காக அளிக்கப்பெறும் இவ் ஆய்வேடு என் முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எப்பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

புத்தனாம்பட்டி,

நாள்: 23.5.96

(கி. பாண்டியன்),
ஆய்வாளர்.

## நன்றியுரை

'சித்தர் பாடல்களில் வாழ்வியல் உண்மைகள்' என்னும் தலைப்பில் ஆய்வு (பகுதிநேரம்) மேற்கொள்ள அனுமதி வழங்கிய திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு என்நன்றி உரியது.

என் ஆய்வை நெறிப்படுத்தியும், ஆராய்ச்சி நெறி முறைகளை விளக்கிச் சொல்லியும், ஆய்வின் அனைத்துப்படி நிலைகளிலும் உதவிய ஆய்வு நெறியாளர், பேராசிரியர், முனைவர் அ.இராமரத்தினம், தமிழ்த்துறைத் தலைவர், பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி, பழனி நகர், நாமக்கல் அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றியுடையேன்.

புத்தனாம்பட்டி நேரு நினைவுக் கல்லூரி தமிழ்த்துறையில் இவ்வாய்வினை மேற்கொள்ள அனுமதியளித்த கல்லூரி முதல்வர், முனைவர். எஸ்.இராமலிங்கம் எம்.ஏ., பிஎச்.டி., அவர்களுக்கு என்நன்றி.

இவ்வாய்வை மேற்கொள்ள எனக்கு அனுமதி வழங்கியும் ஊக்குவித்தும் உதவிய புத்தனாம்பட்டி, நேரு மேல்நிலைப்பள்ளி, தலைமையாசிரியர் அவர்கட்கு நான் நன்றியுடையேன்.

ஆய்வுக் காலத்தில் அவ்வப்போது ஊக்குவித்து, ஆய்வுக்குத் தேவையான மூல நூலை வழங்கி, ஆய்வுக் கருத்துகளைக் கூறி அருளிய குருநாதர், தவத்திரு.ரெங்கராஜ தேசிக சுவாமிகள் திருவடிகளுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக்கு உதவிபுரிந்த முனைவர் திரு. பழனிவேலு அவர்கட்கு என் நன்றி.

என் ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கி உதவிய புத்தனாம்பட்டி, நேரு நினைவுக்கல்லூரி நூலகர், புத்தனாம்பட்டி நேரு மேல்நிலைப் பள்ளி நூலகர், திருச்சிராப்பள்ளி பிசப் ஈபர் கல்லூரி நூலகர் ஆகியோர்க்கும் என் நன்றி உரியது.

இவ்வாய்வில் பல்லாற்றானும் எனக்குத் துணைநின்ற என்னுயிர் துணைவி திருமதி. பத்மாவதி அவர்கட்கும் நன்றி.

இவ் ஆய்வுக்கு நேர்முகமாகவும், மறைமுகமாகவும் துணைபுரிந்த எல்லோருக்கும் மிக்க நன்றியுடையேன்.

சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ.ப. | - | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் |
| அழ.ப. | - | அழகப்பா பல்கலைக் கழகம் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| கே.ப. | - | கேரளப் பல்கலைக் கழகம் |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.இ. | - | பக்கம் இல்லை |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| ப.சி.பெ.கோ. | - | பதினெண் சித்தர்கள் பெரிய ஞானக் கோவை. |
| பா.ப. | - | பாரதிதாசன் பல்கலைக் கழகம் |
| ம.கா.ப. | - | மதுரை காமராசர் பல்கலைக் கழகம். |
| p | - | page |

# உள்ளுறை



---

சித்தர்கள் தெளிந்த அறிவுடையவர்கள். அவர்கள் தமிழ்நாட்டில் பன்னெடுங்காலமாக வாழ்ந்து வருகிறார்கள். மருத்துவம், சோதிடம், ஞானம் ஆகிய துறைகளில் அவர்கள் புலமையாளராய்த் திகழ்கின்றனர். அவர்களின் பல்வேறுபட்ட சிந்தனைகள் பாடல்களாக வெளிப்போந்தன. அவற்றுள் ஞானம் பற்றிய பாடல்கள் 'சித்தர் பாடல்கள்' என அழைக்கப்படுகின்றன. அப்பாடல்கள் எளிமையானவை. அவை மக்களுக்கு உண்மை அறிவை ஊட்டி விழிப்புணர்வைத் தூண்டுகின்றன. ஆதலின், அவை மக்கள் இலக்கியம் என போற்றப்படுகின்றன.

## ஆய்வு நோக்கம்

சித்தர் பாடல்கள் தமிழிலக்கியத்தில் சிறப்பிற்குரியன. அப்பாடல்களில் ஆன்மீக நெறிகள், சமுதாயச் செய்திகள், அறநெறிகள், இயற்பியல் உண்மைகள், இலக்கியச் சுவைகள், இசைத்திறன்கள் என பல கூறுகள் பொதிந்துள்ளன. அவற்றுள் மனித ஆக்கத்திற்குத் துணையாகும் வாழ்வியல் உண்மைகள் அப்பாடல்களில் பெற்றிருக்கும் பாங்கினைக் கண்டறிவதே ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுப் பொருள்

சித்தர் பாடல்கள் இயம்பும் வாழ்வியல் உண்மைகளைக் கண்டறிய முற்படுவதால் 'சித்தர் பாடல்களில் வாழ்வியல் உண்மைகள்' என்பது ஆய்வுப் பொருளாகிறது.

ஆய்வின் எல்லை

சித்தர்கள் பலராவர். அவர்கள் பாடிய பனுவல்கள் பலவாகும். ஆயினும் இவ்வாய்வில் பதினெட்டுச் சித்தர்களின் பாடல்களை ஆய்வின் எல்லையாகக் கொள்கிறது. அச்சித்தர்கள் வருமாறு.

1. அகத்தியர்
2. அகப்பேய்ச் சித்தர்
3. அழுகணிச் சித்தர்
4. இடைக்காடர்
5. உரோமரிஷி
6. கடுவெளிச் சித்தர்
7. கணபதிதாசர்
8. கருவூரார்
9. காகபுசுண்டர்
10. குதம்பைச் சித்தர்
11. கொங்கணர்
12. சட்டை முனிவர்
13. சிவவாக்கியர்
14. பட்டினத்தார்
15. பத்திரகிரியார்

16. பாம்பாட்டிச் சித்தர்
17. மதுரை வாலைசாமி
18. சிவானந்த போதம் என்னும் நூலை இயற்றிய சித்தர். இவர் பெயர் தெரியவில்லை;

ஆய்வு மூலங்கள்:

திரு.வா.சரவணமுத்துப் பிள்ளை அவர்கள் ஏட்டுப் பிரதிகளிலிருந்தும் அச்சுப் பிரதிகளிலிருந்தும் நாற்பத்திநான்கு அரிய நூல்களைத் திரட்டித் தொகுத்தார். அதனை சென்னை, இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ் எனும் பதிப்பகத்தார் 1986ஆம் ஆண்டில் சுத்தப் பதிப்பாக 'பதினெண் சித்தர்கள் பெரிய ஞானக்கோவை' என்னும் பெயரில் வெளியிட்டனர். அந்நூலின் மேற்காட்டிய பதினெண் சித்தர்களின் பாடல்கள் இவ்வாய்வுக்கான முதன்மை மூலங்களாகும்.

ஆய்வின் கருதுகோள்கள்

பின் வருவன இவ்வாய்வின் கருது கோள்களாகும்;

1. தமிழ் இலக்கியங்கள் சித்தர்களின் சிறப்புரைத்தல்.
2. சித்தர் பாடல்களில் சமுதாயச் செய்திகள் மிக்கிருத்தல்.
3. சித்தர் பாடல்கள் இறையுணர்வை உணர்த்தல்.
4. சித்தர் பாடல்களில் அறநெறிகள் மிக்கிருத்தல்.
5. சித்தர் பாடல்கள் பொய் ஆன்மீகத்தைச் சாடுதல்

தகவல் திரட்டிய முறை

பொதுவாக சித்தர்கள் பற்றி ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், சித்தர் பாடல்கள், அப்பாடல்கள் பற்றியத் திறனாய்வு நூல்கள் ஆகியவற்றை ஆழ்ந்து கற்று, தகவல்கள் திரட்டப்பட்டன. வரலாற்று நூல்கள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள், மலர்கள், ஆய்வுக் கோவைகள் முதலானவற்றிலிருந்தும் செய்திகள் பெறப்பட்டன.

முந்திய ஆய்வுகள்

சித்தர்கள் பற்றியும் அவர்கள் இயற்றிய பாடல்கள் பற்றியும் பல்வேறு கூறுகளில் பல்வேறு தலைப்புகளில் திறனாய்வுக் கட்டுரைகளும், நூல்களும், ஆய்வேடுகளும் வெளிவந்துள்ளன. அவற்றுள் பின்வருவன குறிப்பிடத்தக்கவை.

பிஎச்.டி. ஆய்வுகள்

1. க.இளமதி - 'ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் ஓர் ஆய்வு', அ.ப. 1981.
2. ச.மாடசாமி - 'சித்தர் பாடல்கள் ஆராய்ச்சி' ம.ஓா.ப.
3. சு.பாலகிருட்டிணன் - 'பட்டினத்தார் பாடல்கள் ஓர் ஆய்வு' அழ.ப. மே.1987.

4. சி.வேலுச்சாமி - 'திருமந்திரம் - ஒரு திறனாய்வு' ம.ஊ.ப. செப். 1984.

5. ஜெயா - 'சித்தர்களின் படைப்புகளும் தமிழ் இலக்கியத்தில் அவற்றின் இடமும்' கே.ப. 1976.

எம்.ஃபில் ஆய்வுகள்

1. மா.பிரேமா - 'பட்டினத்தார் பாடல்கள் ஓர் ஆய்வு' கே.ப.1978

2. ச.மாடசாமி - 'பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள்' ம.ஊ.ப.1980

3. ப.தங்கராசு - 'அகத்தியர் - தமிழக வரலாற்றுப் பண்பாட்டுக் கண்ணோட்டம்' அ.ப.1976

4. சி.பாண்டியன் - 'சித்தர் சிவவாக்கியர் பாடல்கள் - ஓர் ஆய்வு' பா.ப. 1989

அண்மையில் இவ்வாறாய்வும் ஒன்று. ஆயினும் புதிய நோக்கில் இவ்வாய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளது.

ஆய்வு முறை

இவ்வாய்வில் பகுப்பாய்வு அணுகுமுறையும் விளக்கமுறை அணுகுமுறையும் ஆய்வு முறைகளாகக் கையாளப் பெற்றுள்ளன.

**ஆய்வு அமைப்பு**

இவ்வாய்வு ஐந்து இயல்களைக் கொண்டது. முதலியல் சித்தர்களின் வரலாறுகள், காலங்கள், குறிக்கோள்கள், பெருமைகள், நூல்கள் ஆகியவற்றை விளக்குகிறது. சித்தர் குறிப்பிடும் இல்லறம், விருந்தோம்பல், புலால் மறுத்தல், சாதிசமய வேறுபாடுகளைக் களைதல், பசியாற்றுவித்தல், மயக்கவாழ்வு, மகளிர் நிலை ஆகியவற்றை இரண்டாவது இயல் கூறுகிறது. மேலும் இவ்வியல் மக்களின் மன இயல்புகள், பழக்க வழக்கங்கள் பற்றிய செய்திகளை எடுத்துரைக்கிறது.

மூன்றாவது இயல் குருவின் பெருமை, அகவழிபாட்டின் சிறப்பு, பஞ்ச பூதங்களின் தன்மை அறிதல், தலைவனை அறிதல், தன்னையறிதல், வினை அறிதல், தன்பிழை உணர்தல், காமத்தை வெல்லல், தவத்தின் சிறப்பு, தவசியின் உணவு முறை, உடல் உயிர் தன்மை, விந்து நிலை அறிதல், வாசி அறிதல், சுழுமுனை அறிவு, தசநாத ஓசை, சமாதி நிலை, காயசித்தி, குண்டலினி சக்தி, சோதி தோன்றல் அமிழ்துண்ணல், மரணம் தவிர்த்தல், அருபூமி நிலை, சீடர் தொண்டு, சன்மார்க்கம் ஆகியவற்றை விளக்குகிறது.

நான்காவது இயல் சித்தர்கள் எடுத்துரைக்கும் அறநெறிகளை ஆராய்கிறது. அவற்றுள் அன்பு செய்தல், அறம் செய்தல், ஞானியர் தொடர்பு கொள்ளல், மன உறுதி கொள்ளல் ஆகியன செய்யத்தக்கவையாக விளக்கப் பெறுகின்றன. பாவம், பொய்,

வெறுப்பு, கொலை, கொள்ளை, களவு, இகழ்தல், மது, கஞ்சா, செருக்கு, தீயநட்பு ஆகியவை செய்யத் தகாதவைவாகக் கூறப் பெறுகின்றன.

ஐந்தாவது இயலில் போலித்துறவிகளின் புனைகோலம், போலித்துறவு, தீய ஒழுக்கம் பற்றிய கருத்துகளும் அவர்கள் செய்கிற மந்திர மாயவித்தை, பொருள் பறித்தல் பற்றிய செய்திகளும் விளக்கப் பெறுகின்றன. உருவ வழிபாடு, சடங்குகள், சிறுதெய்வ வழிபாடு, பொருளறியா மயக்கநிலை ஆகியவற்றைச் சாடி சித்தர்கள் கூறும் கருத்துகள் மேலும் இவ்வியலில் விளக்கப் பெறுகின்றன.

ப.சி.பெ.கோ. என்று சுட்டி மூலநூலின் கருத்துகள் ஆய்வேட்டின் உள் பகுதியிலேயே அடைப்புக்குறிக்குள் பக்க எண்ணுடன் கொடுக்கப்பட்டுள்ளது.

துணை ஆதாரக் கருத்துகள் சான்றெண் விளக்கமாகக் காட்டப்படுகிறது.

பின்னிணைப்புகளாக

அ. சித்தர்களின் அகரவரிசை – பெயர் பட்டியல்

ஆ. சித்தர்களின் படங்கள்

இ. அருஞ்சொற்கள்

ஈ. சித்தர் பாடல்கள் – பதிப்புகள்

ஆகியன சேர்க்கப்பட்டுள்ளன.

## இயல் பொருளடக்கம்

## 1.0 முன்னுரை :

தமிழ் இலக்கியத்தில் சித்தர்கள் என்னும் இவ்வியல் சித்து - சித்தர்கள், சித்தர்களின் வரலாறும் காலமும், சித்தர்களின் குறிக்கோள், சித்தர்களின் பெருமைகள், சித்தர் பாடல்களின் இயல்புகள், இன்றைய நிலையில் சித்தர்கள் எனப்பகுக்கப்பெற்று ஆராயப்பெறுகின்றது.

## 1.1 சித்து - சித்தர்கள்

சித்து என்பது நல்லறிவு, நற்புத்தி ஆகியவற்றைக் குறிக்கும் ஒரு பொதுச் சொல்லாகும். தமிழ்மொழி அகராதி 'சித்து' என்பதற்கு 'அறிவு' என்ற பொருள் கூறுகின்றது.[1]

'சித்' என்னும் வடமொழி வேர்ச்சொல்லே 'சிது' என்றாகி 'சித்த' என்னும் சொல்லாகியது. இச்சொல் எண்வகைச் சித்திகள் கைகூடப் பெற்றவர்களைக் குறிக்கின்றது என்பர்[2] இவர் தம் கூற்றும் தமிழ் அகராதிக் கூற்றும் மனங்கொள்ளத்தக்கவை.

'சித்து' என்பது அறிவினைக் குறிக்கின்றது. அறிவு முதிர்ச்சி பெற்றவர்களைச் சித்தர்கள் எனக்கொள்ளலாம். குறிப்பாக அவர்களை ஞானிகள் என்று சித்தர் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

சித்தர்கள் என்றால் 'அறிவர்' என்பது பொருள். வினையின் நீங்கி விளங்கிய அறிவுடையவர் எனலாம்.

"கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"[3]

எனும் திருக்குறளில் வாலறிவன் என்பது கடவுளைக் குறிப்பதாக உரையாசிரியர் கூறியிருப்பினும், மனித நிலையில் இருந்து சிறப்பறிவான தூய அறிவினைப்பெற்று இறை நிலைக்கு உயர்ந்த சித்தர்களைக் குறிப்பதாகவும் கூறலாம்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"[5]

என்ற தொல்காப்பியம் நிறைமொழி மாந்தர் எனச் சுட்டுவதும்

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்"[6]

என திருக்குறள் நிறைமொழி மாந்தர் எனக் குறிப்பிடுவதும் சித்தர்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

சித்தர் எனும் சொல்லுக்கு அறிவர், நிறைமொழி மாந்தர் என்ற பொருளுணர்த்தியிருக்கின்றனர் நம் முன்னோர் என்பது இவற்றால் தெளிவாகிறது.

சித்தி என்னும் சொல்லைப்பற்றி

"பண்டைக் கல்வெட்டுகளில் 'சித்தி' –
'சித்தம்' என்ற சொற்கள் பண்படுத்துவது
என்னும் பொருளில் வழங்கப்பட்டிருப்
பதாகத் தெரிகிறது"[7]

எனச் சுட்டுவர். ஆதலின், சித்தர்களைப் பண்பட்டவர், முழுமைபெற்றவர் எனக் குறிப்பிடலாம்.

திருவள்ளுவர் 'தவம்' என்னும் அதிகாரத்தில்

"கூற்றம் குதித்தலும் கைகூடும்; நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு"[8]

என்னும் குறளையாத்துள்ளார். தவத்தினால் வரும் ஆற்றலைப் பெற்றவர்க்கு யமனை வெல்லுதல் கைகூடும்[9] இக்கருத்தின்படி 'சித்தி' என்னும் சொல் 'கைகூடுதல்' என்னும் பொருளில் கையாளப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

சித்துவேலை செய்தல் என்பது பலராலும் பலகாலத்தும் பேசப்படும் அருள்விளையாட்டு என்றும் சொல்லலாம். பிறரை ஏமாற்றும் தன்மைவாய்ந்த சித்துவேலைகளைப் பொருள் விளையாட்டு எனக்குறிப்பிட வேண்டியுள்ளது.

'சித்தர்கள்' என்பதற்கு 'அணிமா முதலியவை சித்திக்கப் பெற்றவர்கள்' என்று தமிழ்மொழியகராதி[10] குறிப்பிடுகிறது. சித்தி பெற்றதால் சித்தர்கள் எனக்குறிப்பிடப்பெறுகின்றனர் எனலாம்.

சிலப்பதிகாரம் நாடுகாண் காதையில் வரும் 'சித்தன்' என்ற சொல்லுக்கு 'அருத அருத்தியன்', 'செறிய வேண்டுவனவற்றைச் செய்து முடிப்பவன்', 'கன்மங்களைக் கழுவினவன்', 'எண்வகைச் சித்துக்களையும் உண்டாக்கினவன்' என்று அடியார்க்கு நல்லார்[11] பொருள் கொள்கின்றார். செயற்கரிய செயல்களைச் செய்து முடித்து வெற்றி பெற்றவர்களாகிய சித்தர்களுக்குப் பெருமை சேர்ப்பதாக இவரின் கூற்று அமைகிறது.

கலம்பகம் என்ற சிற்றிலக்கியத்தில் ஓர் உறுப்பாக 'சித்து' சொல்லப்படுகிறது. இவ்வுறுப்பில் சித்தி பெற்றவர் தமது திறமையைப் பிறருக்கு எடுத்துக் கூறுவது போல் அமைத்திருப்பர்[12] இது சித்தர்களின் சிறப்புக்குச் சான்றாகும்.

இறைவன் நன்மையானவன். அருட்பிரகாச வள்ளலார், இராமலிங்க சுவாமிகள் இறைவனை

"சித்தெலாம் வல்ல சித்தனே ஞான
சிதம்பர ஜோதியே..." [13]

எனவிளிப்பர். இறைவன் சித்தனாகவும் சோதியாகவும் விளங்குகிறான் என்பது இதன் கருத்தாகும். எனவே சித்தனாகக் கொள்ளத்தக்கவர்கள் சோதிநிலையை அடைந்தவர்கள் என்பதும், இறைநிலையை அடைந்தவர்கள் என்பதும் பெறப்படுகின்றன.

'சித்தன் போக்கு சிவன் போக்கு' என்று 'சித்தம் போக்கு சிவம் போக்கு' என்றும் சொற்றொடர்கள் வழக்கிலுள்ளன. அவை மேலான இறையின்பத்தை விரும்புவதையே குறிப்பிடுகின்றன எனத் தெளியலாம். அதாவது சிவனாகிய குருவிடம் சித்தமுடைய சீடன், சிந்தையைச் செலுத்திடல் வேண்டும் என்பதை இச்சொற்கள் உணர்த்துகின்றன எனலாம்.

"மூலமதை யறிந்தாக்கால் யோகமாச்சு
முறைமையுடன் கண்டாக்கால் வாதமாச்சு
சாலமுடன் கண்டவர்முன் வசமாய் நிற்பர்
சாத்திரத்தைக் கண்டறிந்தா லவனேசித்தர்"

என அகத்திய முனிவர் (ப.சி.பெ.ஞா.298) கூறுகின்றார். அதாவது, உடம்பினுள் உள்ள மூலாதாரத்தை அறிந்திட்டால் யோகம்கிட்டி விடும். முறைமையுடன் சொன்னபடி நேர்மையாய்ச் செயல்பட்டால் உடல் வாதமெனும் நிலையறிந்து, அதன் பின் மூலாதார வெப்பநிலை உயர்ந்து ஞானநிலையில் உயர்வர். இதனை அறிய சாலமுடன் இதனைக் கண்டவர்கள் முன்னே வசமாய்

அன்பு கொண்டு நிற்பர். இதுபோன்ற உடம்பினுள் நடக்கின்ற மாற்றம் என்னும் சாத்திரத்தைக் கண்டு உயர்ந்திட்டால், அவர்கள்தான் சித்தர்கள் என்று அகத்தியர் சித்தர்களைப்பற்றிக் குறிப்பிடுகின்றார். 'தேகமதி லொரு எழுத்தைக் கண்டோர் ஞானி' (ப.சி.பெ.கோ.ப 10) என்பது அகத்தியரின் அழுத்தமான கூற்றாகும். தேகம் எனும் உடம்பில் ஓர் எழுத்தாகிய 'ஓம்' என்பதை அறிந்து கண்டோரே ஞானி என்று அகத்தியர் குறிப்பிடுகின்றார். ஓம் என்பது ஏகம் என்பதாகும். பரமன் என்பதே ஓங்காரமாகும். ஆகவே தலைவனைத் தன்னுள் ஒன்றாக இணைத்துக் காண்பவனே ஞானியாவான் என்பதும்; அவனும் இவனும் ஒன்றான நிலையே ஞான நிலையாகும் என்பதும் இங்குப் பெறப்படுகின்றன. சித்தர்கள் ஞானநிலையை அடைந்தவர்கள் என்பது உறுதியாகிறது.

சிவத்தைக் கண்டவர் சித்தர். சத்து, அசத்து தனையறிந்து, முத்திக்குரிய மூலத்தைத் தேர்ந்து, சதாசிவத்தன்மையில் சத்தாகி நிற்பவர் சித்தர் என்று திருமூலர் விளக்குவதை உணர்வது மேலானதொன்றாம்.[14]

'ஞாலவட்டஞ் சித்தாடும் பெரியோர் பாதம்/நம்பினதா
லுரோம வென்பேர் நாயன்றானே' (ப.சி.பெ.கோ.340)

என்று உரோமரிஷி குறிப்பிடுகின்றார். ஞாலமுழுவதும் சித்து என்னும் அற்புதங்களைச் செய்யும் பெரியோர்களாகிய ஞானிகளின் பாதமெனும் திருவடியை மதித்து, நம்பி வணங்கியதால் தன்னுடைய பெயர் உரோமன் என்று வந்ததாக அவர் கூறுகின்றார். உரோமரிஷி என்று தன்னிலை உயர்வுக்குரிய காரணத்தை அவர் மேலும் வெளிப்படுத்துகின்றார். பெரியோர்பாதம் மேவுதல் சித்தரின் உயர் செய்கையாகும் என்று அவர் உணர்த்துகின்றார்.

'ஒளிபிறக்கு முறுதிபிந்த வுறுதி சொல்லோம்/உத்பமமாய்ப் பார்த்தவர்கள் சித்தர் தாமே' (ப.சி.பெ.கோ.356) என்பது ஒருவூராரின் திருவாக்காளும். புருவ மத்தியில் சோதியைக்கண்டு ஞானமுத்தி அடைகின்ற வழியும், உறுதியும் சொல்லியுள்ளதாகவும், அதன்படி உடம்பில் தோற்றமெடுத்திடப் பார்த்தவர்கள் சித்தர்கள் என்றும் அவர் தெளிவு செய்கின்றார்.

'திட்டமதாய்ப் பாலம்வைத்துத் தேவி பூசை/சீர்பெற்றார் புதினெட்டுச் சித்தர் தாமே' (ப.சி.பெ.கோ.354) என்பது அவர் அருட்கூற்றாகும். மனம் திட்டமிட்டு, திடம் கொண்டு உடம்பில் உறுதி-கொண்டு, தலைவனைப் பூசை செய்து, சிறப்புடைய ஞானத்தைப் பதினெண் சித்தர்கள் பெற்றனர் என்று அவர் கூறுகின்றார். சித்தர்கள் அகவழிபாட்டில் தலைவன் தாயாக வந்து அருள் செய்வதால் தேவிபூசை என்று அவர் குறிப்பிட்டுள்ளார். அதன் பின்னர் சிறப்புகூட்டியது என்பதும் சித்தர் ஆனார்கள் என்பதும் உரைத்தக்கவை.

'சமர்த்தறிந்தா லவன்வாமி யவனே சித்தன்' (பசி.பெ.கோ.352) என்று ஒருவூரார் கூறுவதை ஆழ்ந்து நோக்கினால், தலைவனை அன்பொழுது வணங்கி, சூட்சமத்தை அறிந்து, மனம் உறுதியாய் இருந்து, தவத்தைச் செய்து, வாமம் என்னும் பேரின்பத்தை அறிந்து, அடைந்திட்டால் சித்தனாக முடியும் என்னும் பொருள் உள்ளீடாக இருப்பதை அறியமுடிகிறது.

'ஆழிவனை யறிந்தவர்கள் சித்தர் சித்தர்' (ப.சி.பெ.கோ.348) என்னும் ஒருவூர் முனிவரின் கூற்று, சித்தர்கள் யார் என்பதற்கு மேலும் தெளிவு தருகிறது.

தலைவனை 'வாமி' என்றும் 'வாலை' என்றும் சித்தர்கள் குறிப்பிடுகின்றனர். காமத்தை நீக்கி, பேரின்பமான வாமத்தைக் காட்டும் 'இவள்' தாய்க்குணம் கொண்டவள், ஆதலால் தலைவனைப் பெண்ணாக வழிபடுகின்றார் கருவூரார். அத்தலைவனை அறிந்து தெளிந்தவர்கள் சித்தர்கள் என்று அவர் குறிப்பிடுகின்றார்.

வாலைப் பெண்ணாக, அதாவது வயது வருவதற்குமுன் நிலையிலுள்ள பெண்ணாகத் தலைவனை நினைப்பர். தலைவன் முதுமையையும் இறப்பையும் தவிர்த்து என்றும் இளமையுடன் இருப்பவன். அதனால் வாலை என்றனர். வாலை என்பது இளமை, அழியாமை என்று பொருள்படும்.

'மௌனவித்தை யெய்தியக் காலவே ஞானி'

(ப.சி.பெ.கோ.756) என்று சட்டை முனிவர் ஞானியர்க்கான விளக்கத்தைக் கூறுகின்றார். அஃதாவது யோக ஞான நெறியில் நிற்பவர் மௌனம் எனும் இரகசிய வித்தையாகிய சமாதிநிலையை அறிந்து, தெளிந்து எய்தியவராக இருக்க வேண்டும் என்று அவர் தெளிவு செய்கின்றார்.

"சித்தர்கள் என்றால் சித்தி பெற்றவர்கள், பேறு பெற்றவர்கள், வீட்டின்பம் அடைந்தவர்கள் என்று பொருளாம்" என கலைக்களஞ்சியம் விளக்குகிறது.[15]

"ஆசான் அருளால் அருட்கல்வி கற்றவர்கள், மரணமிலாப் பெருவாழ்வு பெற்றவர்கள், இறையின்பம் கண்டவர்கள், ஞானதேகம் பெற்று என்றும் ஒளி உடம்பில் வாழ்பவர்கள், அருளாற்றல் பெற்றவர்கள், ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் ஐந்தொழிலையும் செய்ய- வல்லவர்கள், குரு என மக்களால் போற்றப்படுபவர்கள்,

பிறரால் வணங்கத்தக்கவர்கள், சன்மார்க்க நெறியை ஊட்டியவர்கள்" என்று சித்தர்களின் ஆற்றலைப்பற்றி உரைக்கின்றார் தவத்திரு.ரெங்கராஜதேசிகசுவாமிகள்.[16]

இவற்றால் சித்தர்கள் அருட்கல்வி பெற்ற அருளாளர்கள் என்பது பெறப்படுகிறது.

"யோகத்தை-அப்பியாசிப்பவர்கள் யோகிகள் என்றும் யோகத்தின் முடிந்த எல்லைவரை சென்றவர்கள் ஞானிகள் என்றும் அழைக்கப்படுவர். சித்தி அடைந்த-வர்கள் சித்தர்கள் எனப்படுவர்" என்று ஸ்ரீரங்கம் சித்தர் சித்தர்களைப்பற்றிக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.[17]

"சித்தர்கள் என்றால் அறிவுள்ளவர்கள் ஆராய்ச்சி அறிவுள்ளவர்கள் என்றே பொருள்" என்றும்[18]

"சித்தர்கள் சாகா நிலையைப் பெற்றவர்கள், அழியாத உடம்பைப் பெற்றவர்கள்; உடம்பை அழிந்து போகாமல் பாதுகாக்கும் வழியை அறிந்தவர்கள்; தம்முடைய உடம்பை அப்படியே வைத்துவிட்டு மற்றொரு உடம்பிலே புகுந்து நடமாடும் சக்தி படைத்தவர்கள். இதற்குக் கூடு விட்டுக் கூடு பாய்தல் என்று பெயர். சித்தர்களுக்கு வானமார்க்கமாகச் செல்லும் சக்தியும் உண்டு. முக்காலங்களைப் பற்றியும் அறியும் ஞானமும் உண்டு. பலவிதமான அற்புதங்களைச் செய்யும் ஆற்றலும் உண்டு என்று சித்தர்கள் என்பதற்குப் பொருள் கூறுகின்றனர்" என்றும் சாமி.சிதம்பரனார் குறிப்பிடுகின்றார்.[19]

இக்கருத்துக்களின் வழி சித்தர்களைப்பற்றியும் அவர்களின் ஆற்றலைப் பற்றியும் அறிந்துயலாம்.

சித்தர்களைப்பற்றி

"சித்தர்கள் யார்? இவர்கள்தான் அன்றைய தமிழக விஞ்ஞானிகள், மெய்ஞ்ஞானத்தையும் விஞ்ஞானத்தையும் குழைத்து நாடு உய்ய அறிவுக்கலவையாக அறிவித்தவர்கள்" என விளக்குவர்.[20]

சித்தர் செயற்பாட்டைத்

"தம் உடலையே கோயிலாக்கி மூச்சையே வழிபாடாக்கி உயிர்கள் எய்தும் இன்பத்தையே தாமெய்தும் வீடுபேறாக்கி இறைமையே வாழ்வாகி என்றும் இருப்பவர் சித்தர்" எனக்கூறுவர்.[21]

சித்தர்கள் இறையின்பத்தைப் பக்தியினால் அநுபவத்தில் கண்டவர்கள் என்றும் பக்தர்கள் எல்லோரும் சித்தர்கள் ஆனார் என்னும் பொருள்பட

"பக்தர்கள் அனைவரும் சித்தராகார்; ஆனால் சித்தர்கள் எல்லோரும் பக்தர்களே"[22]

என உரைப்பது இங்கு மனங்கொள்ளத்தக்கது.

சித்தர்களைப் பற்றிய பின்வரும் கூற்றுகள் கருத்தில் கொள்ள வேண்டியவை.

"முத்தி அடைந்தவர்களை முத்தர்கள் என்றும், சித்தி அடைந்தவர்களைச் சித்தர்கள் என்றும் சான்றோர் கூறுவர்"[23] என்று கூறுவர்.

"அற்புதங்களை நிகழ்த்துகின்ற சக்தி ஒவ்வொரு மனிதனிடமும் இருக்கிறது. அந்தச் சக்தியை உணர்ந்து கொண்டால் அற்புதங்களைச் செய்யலாம். இப்படிச் செய்கிற

ஆற்றலைத்தான் சித்தி என்று சொல்லுகின்றார்கள். இவற்றைச் செய்கின்ற நிலையைப் பெற்றவர்கள் சித்தர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்."[24] என்பர்.

"சித்தர்கள் கடவுளைக் கண்டு தெளிந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள். பக்தர்களுக்கும், சித்தர்களுக்கும் என்ன வேறுபாடு என்று தேவாரம் பிரித்துச் சொல்லுகிறது. கடவுளைக் காண முயல்கின்றவர்களைப் பக்தர்கள் என்றும் கடவுளைக் கண்டு தெளிந்தவர்களைச் சித்தர்கள் என்றும் தேவாரம் குறிப்பிடுகிறது"[25] என்று குறிப்பிடுவர்.

பக்தர்களின் நிலை தொடக்கநிலை என்பதும் சித்தர்களின் நிலை முற்றுப்பெற்ற நிலை என்பதும் இங்கு அறியத்தக்க கருத்தாகும்.

"தம்மிலே தாமாகி, ஊடி, உட்கலந்து உறைந்த தயாநிதியைக் காண முயலுவோர் பக்தர்கள்; கண்டு நிறைந்தவர்கள் சித்தர்கள்"[26] என்று குறிப்பிடுவது கட்டத்தக்கது.

"யோகப்பயிற்சியாலும் தியானத்தாலும் எதிர்கால நிகழ்ச்சியையும் தொலைக்காட்சியையும் காணும் ஆற்றல் பெற்றவர்கள் இருடிகள் எனப்படுவர். இவர்கள் யோக நெறியில் இறையனுபவம் பெறுவோராகவும் புதியனவற்றைக் கண்டுபிடிக்கும் அறிஞர்களாகவும் இருப்பர். சித்தத்தை ஒடுக்கிச் சித்தத்தில் சிவநிலை காண்பவர்கள் சித்தர்கள் என அழைக்கப்படுகின்றனர்"[27] என்று குறிப்பிடுவர்.

இவற்றால் யோகநெறியின்வழி இறையனுபவம் பெற்றிடும் வித்தகர்தான் சித்தர்கள் என்பது அறியக்கிடக்கின்றது.

'மெய்' கண்டு 'பொய்' அழித்தவர்களாகிய சித்தர்களை

"உடல் தோன்றிய காரணத்தையும் உடலில் உயிர் புகுந்த விதத்தையும், உடல் வளர்வதையும் தேய்வதையும், மாய்வதையும், உற்றுணர்ந்து, உலகில் நிரம்பிக்கிடக்கும் பொருளின் உண்மைத் தன்மையைக் கண்டுபிடித்து எந்தெந்த வகைப் பொருளால் உயிருக்கு ஆக்கமும், வளர்ச்சியும் ஏற்படுகிறதென்றும், எதன்குறிவால் தேகம் தேய்ந்து, மாய்ந்து சிதைகின்றதென்பதைக் காரண காரியங்களுடன் கண்டு பொய்யென விருதுபெற்ற உடலுக்கு மெய்யெனப் பெயர் கண்ட ஞானிகளே சித்தர்கள்"[28] எனக் கூறுவர்.

வாய்ச் சமர்த்தால் பேசிப்பயனடைய முடியாது என்றும் பலவிதமான வித்தைகள் கற்றாலும் மெய்ப்பொருளாகிய ஞானம் கிட்டாது என்றும் தலைவனாகிய ஆத்தானை மனம் உருகிப் பூசை செய்வானேயானால் அவனே 'சித்தன்' என்ற பெயருடன் எல்லாம் அறிந்து, தெளிந்து உயர்வடைவான் என்றும் கருவூரார் கூறுவார். 'ஆத்தானைப் பூசித்தோ னவனே சித்தன்' (ப.சி.பெ.கோ.352) என்னும் தொடரால் அறிய முடிகின்றது.

'சித்து' எனும் சொல் முதறிவுடைமையையும் மெய்யுணர்வுடைமையையும் குறிக்கும் சொல்லாகக் கொள்ளலாம்.

'சித்தர்' எனும் சொல் அறிவர், நிறைமொழி மாந்தர், மெய்யுணர்வினையுடைய முதறிவு பெற்றோர், சோதி நிலையையடைந்தோர் என்னும் நிலையினையுடையோரைக் குறிக்கும் பொருண்மையுடைய சொல்லாகக் கொள்ளலாம்.

1.2.0 சித்தர்களின் வரலாறும் காலமும்

சித்தர்கள் பண்டைக் காலந்தொட்டே தமிழ்நாட்டில் வாழ்ந்து வந்திருக்கின்றனர். அவர்களைப் பற்றிய குறிப்புகள் பண்டைத் தமிழ் நூல்களில் அருகிக் காணப்பெறுகின்றன.

1.2.1 பழந்தமிழ் நூற்சான்று

தொல்காப்பியர் சித்தர்களை அறிவர் என்று சுட்டுவதை,

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன்"[29]

என்னும் நூற்பாவின்வழி அறிய முடிகிறது.

தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர் தம்உரையில்

"காமம் வெகுளி மயக்கமில்லாத ஒழுகலாற்றினை
இறப்பும் நிகழ்வும் எதிர்வுமென்னும் மூவகைக் காலத்தினும்
வழங்கும் நெறியான் அமைத்த முழுதுணர்வுடையோன்"[30]

எனக்குறிப்பிட்டு, முக்காலத்திற்கும் உரியவர்கள் என வெளிப்படுத்தியுள்ளார்.

"கலச யோனியாகிய அகத்தியன்
முதலியோரும் அறிவரென்று உணர்க"[31]

என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றார்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"[32]

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் 'நிறைமொழிமாந்தர்' எனக் குறிப்பிடுவது சித்தர்களைக் குறிக்கும் எனக் கருதலாம். இதன்வழி தொல்காப்பியர் காலத்திற்கும் முந்தியவர்கள் சித்தர்கள் என்பது தெரியவருகிறது.

"நிலந்தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்
விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோ நம் காதலோரே"[33]

என குறுந்தொகை குறிப்பிடுகிறது. இதில் கூறியுள்ள நிலத்துள் மூழ்குதல், வானத்தில் ஏறுதல், கடல் நீர் மேல் நடத்தல் ஆகிய செயல்கள் சித்தர்களுக்கு உரியவை.

"நிலமிசை வாழ்ந ரலமர தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
காலுண வாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவர் . . ."[34]

என்ற புறநானூறு விளக்குவது சித்தர்களையே யாகும் எனக் கருதலாம். எனவே, சித்தர்களைப் பற்றிய குறிப்புகள் சங்க நூல்களில் இடம்பெற்றிருப்-பதால் சங்க காலத்தில் அவர்கள் வாழ்ந்தனர் எனத் தெரியலாம்.

"தமிழ்நாட்டில் இரண்டாயிரம்
ஆண்டுகளுக்கு முன்னிருந்தே சித்தர்
பலர் இருந்துள்ளனர். தொல்காப்பியர்
'நிறைமொழி மாந்தர்' என்றும் திருவள்ளுவர்
'செயற்கரிய செய்வார் பெரியர்' என்றும்
கூறியுள்ளவை நினைக்கத்தகுந்தவை"[35]

என்று குறிப்பிடுவதால் சங்க காலத்திற்கு முந்தியவர்கள் சித்தர்கள் என அறிய முடிகிறது.

இக்கருத்தை அரண் செய்வதாக

"தமிழில் காலந்தோறும் ஏற்பட்ட
பதிவுகளில் சித்தர்களின் சிந்தனைப்
பதிவும் குறிப்பிடத்தக்கது. சித்தர்இனம்
நீண்ட நெடுங்காலமாக இந்த நிலத்தில்
வேரூன்றி விழுது பரப்பி வருகிறது"[36]

என்னும் கூற்று உள்ளது.

சித்தர்கள் பழங்காலத்திலிருந்தே தொடர்ந்து வாழ்ந்து வருகின்றனர் என்பது இவற்றால் புலனாகிறது.

## 1.2.2 சித்தர்கள் பலர்

மிகப்பழங்காலத்திலிருந்தே சித்தர்கள் செய்கை பற்றிய செவிவழிச்செய்திகளும், கதைகளும் நிலவி வந்துள்ளன. இதற்கு இராமாயணம், பாரதம் ஆகிய இதிகாசங்களில் இடம் பெறும் அகத்தியர், வசிட்டர், வான்மீகி, விசுவாமித்திரர் ஆகியோரின் செயல்கள் சான்றாக அமைகின்றன.

பொதுவாகப் 'பதினெண்சித்தர்கள்" என்றே பலரும் கூறி வரும் வழக்கம் உள்ளது. ஆனால் நம்நாட்டில் சித்தர்கள் பலர் வாழ்ந்து வந்துள்ளனர்.

"ஓம் எண்ணிலா கோடி சித்த ரிஷிகளுக்கள்
திருவடிகள் போற்றி போற்றி"[37]

என்பர். இக் கூற்றால் சித்தர்கள் பலர் தமிழ்நாட்டில் வாழ்ந்திருந்தனர் என்பதை அறியலாம்.

பதினெண் சித்தர்கள் என்னும் வழக்காற்றிற்குக் காரணம் கூறப்போந்தபோது

"பதினெண்சித்தர்" என்பதொரு கணக்கு ஒரு
காலத்தில் ஒரோர் எண்ணுக்கு மதிப்பு; செல்வாக்கு;
ஏன்? காதல் என்று கூடச்சொல்லலாம்! பதினெண்
மேல் கணக்கு, பதினெண் கீழ்க்கணக்கு, பதினெண் புராணம்,
பதினெண் உபபுராணம், பதினெண் பாடை, (மொழி)
பதினெண் மிருதி, பதினெண் வேள்வி, பதினெண் கணம்!
இப்படிப்பல பதினெட்டுகள்! அப்படி ஒன்று பதினெண்சித்தர்!
ஒரு காலத்தில் எவரோ ஒருவர் எண்ணிச் சொல்லிய
எண்ணிக்கை! பின்னர் அப்படி அப்படியே வழிவழியாகப்
போற்றி வரப்படுபவை"[38] எனக் குறிப்பிடுவர்.

வெவ்வேறு பதினெண்சித்தர்களைக் கொண்ட வியாக்கங்கள் காணக்கிடக்கின்றன என்பதை

"சித்த வைத்திய நூல் ஆராய்ச்சியாளர்கள் சித்தவைத்திய
நூல்களின் ஆசிரியர்களின் நூல்களைக் கொண்டு சித்தர்கள்
பதினெண்மர்களின் பெயர்களைக் குறிப்பிடுகின்றனர்.
சித்தர்களின் ஞானப்பாடல்களின் ஆசிரியர்களை வைத்துக்
கொண்டு சித்தர்களின் ஞானக் கொள்கைகளை ஆதரிப்போர்
பதினெண் சித்தர்களின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளனர்"[39]
என விளக்குவர்.

சித்தர்கள் பலராக இருப்பினும் வழக்கில் பதினெண் சித்தர்கள் என்றே பெரிதும் பேசப்பட்டும் பலராலும் கையாளப்பட்டும் வருகின்றது. பலரும் பல தொகுப்புகளைச் சுட்டுகின்றனர்.

பதினெண்சித்தர்கள் இயற்றிய நாடி சாஸ்திரம் என்னும் நூல்

"பார்த்திடவே நந்தீசர் மூலத்தீசர்
பண்பான அகத்தீசர், சட்டைநாதர்
வார்த்திடவே இடைக்காடர், சண்டிகேசர்
வரராமர் போகர், சிவவாக்கியசித்தர்
சேர்த்திடவே கோரக்கர், புண்ணாக்கீசர்
சிறப்பான மச்சமுனி, புனைக்கண்ணர்
வார்த்திடவே யோகமுனி, கொங்கணர் பாவி
வரரிஷி மலப்பாதம் காப்பாமே"[40]

என்னும் பாடலில் கூறும் சித்தர்கள் பெயரும்;

சித்தர் பெரிய ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் என்னும் நூல்

"நந்திஅகத்தியர் மூலர், புண்ணாக்கீசர்
நற்றவத்துப் புலத்தியரும் பூனைக்கண்ணர்
நந்திடைக்காடரும் போகர், புலிக்கையீசர்,
கருவூரார், கொங்கணர், காலாங்கி
சிந்திஎழுகண்ணர், அகப்பேயர், பாம்பாட்டி
தேரையரும் குதம்பையரும் சட்டைநாதர்
செந்தமிழ்சேர் சித்தர் பதினெண்மர் பாதம்
சிந்தையுள்ளிச் சிரத்தணியாய்ச் சேர்த்தி வாழ்வாம்"[41]

என்னும் பாடலில் கூறும் சித்தர்களின் பெயரும் வேறுபட்டிருப்பது சான்றாகச் சுட்டத்தக்கது.

இவ்விரண்டு பாட்டாலும், பதினெண்சித்தர்களைத் தொகைப்படுத்தி வணங்கி வந்துள்ளனர் என்பதும்; அவ்வப்போது சித்தர்கள் தோன்றிக்கொண்டே இருந்திருக்கின்றனர் என்பதும்; அதனால், சித்தர்களின் பெயர் பட்டியல்கள் மாறுதலுக்குட்பட்டு வந்திருக்கின்றன என்பதையும் அறிய முடிகிறது.

1.2.3 இயற்பெயர்

சித்தர்களின் இயற்பெயரைத் தெளிவாக அறிந்து கொள்ளத்தக்க சான்றுகள் கிடைத்தில. சித்தர்களின் பெயர்களாகக் குறிப்பிடப்பெறுபவை பெரும்பாலும் காரணப் பெயர்களாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

"ஆராய்ச்சிப் பாதையில் செல்லும் போது சித்தர்கள் பெயர்கள் யாவும் பெரும்பாலும் மரபுப் பெயர்களாகவும், காரணப் பெயர்களாகவும் சித்தியடைய அவர்கள் நடந்து சென்ற பாதை அல்லது பழைய சாதனையின் பெயர்களாகவும் இருப்பதைக் கருத்திலும் கவனத்திலும் வைக்க வேண்டும்"[42]

என்று கூறுவது இங்குச் சுட்டத்தக்கது.

சித்தர்களின் பெயர்கள் எப்பெயராக இருப்பினும் அப்பெயர்கள் சித்தர்களின் சிறப்புக்குரியனவாக அமைந்துள்ளமை பெறப்படுகின்றது. பல சித்தர்களைப் பற்றிய முழுமையான, ஆதாரங்களுடன் கூடிய வரலாற்றுக்குறிப்புகள் இதுகாறும் சரிவரக் கிடைக்கப்பெறவில்லை எனக் கூறலாம். இக்கருத்துக்கு அரண்செய்யும் வகையில் யோகேஷ்மித்ரா,

"சித்தர்கள் பற்றி நமக்குக் கிடைக்கும் செய்திகள் ஆதாரபூர்வமானவை அல்ல. செவிவழிச் செய்திகளாகவும், பரம்பரை பரம்பரையாகச் சொல்லப்பட்டு வரும் வரலாறுகளும்தான் தற்போது கிட்டுகின்றன."[43]

எனக் குறிப்பிடுவர்.

சித்தர்கள் தமது ஞான ஆற்றலால் செயற்கரிய செயல்களைச் செய்திருக்கின்றனர். அச்செயல்களைச் 'சித்தாடல்' என பிற்காலத்தார் குறிப்பிடுகின்றனர். அச்செயல்கள் சித்தர்களின் பெருமையை உயர்த்திக்காட்டி விளக்குபவையாக அமைந்திருக்கின்றன. சித்தர்களின் சித்தாடல்கள் பற்றிய நம்பத்தக்க வரலாற்றுக் குறிப்புகளை அறிய முடியவில்லை. அவை பற்றிய செவிவழிச்செய்திகள்தாம் கிடைக்கப்பெறுகின்றன.

சித்தர்கள் பற்றியும் அவர்களது சித்தாடல் பற்றியும்

"சித்தாடல் என்ற நிகழ்ச்சி சித்தர்களின் வாழ்க்கையில் பரவலாகக் காணப்படுகிறது. சித்தர்கள் அனைவரும் சித்தாடும் திறம் உடையவர்கள். சிலர் அத்திறனை வெளிப்படுத்தி இருக்கின்றனர். சிலர் வெளிப்படுத்தியதில்லை. அல்லது வெளிப்படுத்தியதற்கான குறிப்புகள் கிடைக்கவில்லை. இயற்கை கடந்த செயலைச் 'சித்து' என்பர். ஆன்ம நெறியில் செல்வோர் அடைகின்ற பேறுகளுள் 'சித்து' கைவரப்பெறுதலும் ஒன்று. பதினெண்சித்தர்கள் எனப்பரவப்படும் தமிழ்ச் சித்தர்கள் வாழ்விலும் நவநாத சித்தர்கள் எனச் சிறப்பிக்கப்படும் வடஇந்தியச் சித்தர் வாழ்விலும் பிறநாட்டுச் சித்தர் வாழ்விலும் 'சித்தாடல்' நிகழ்ச்சிகள் நடைபெற்றதாகச் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன."[44]

எனக்கூறுவது மனங்கொள்ளத்தக்கது.

சித்தர்களின் செயல்களினால் இயற்பெயர் மறைந்துபோய் அவர்களது சிறப்புப் பெயர்களே அவர்களின் இயற்பெயர்போல் நிலைத்துவிட்டன எனத்துணியலாம்.

1.2.4.0 ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற சித்தர்கள்.

1. அகத்தியர்
2. அகப்பேய்ச்சித்தர்
3. அழுகணிச்சித்தர்
4. இடைக்காடர்
5. உரோமரிஷி
6. கடுவெளிச்சித்தர்
7. கணபதிதாசர்
8. கருவூரார்
9. காகபுசுண்டர்
10. குதம்பைச்சித்தர்
11. கொங்கணர்
12. சட்டை முனிவர்
13. சிவவாக்கியர்
14. பட்டினத்தார்
15. பத்திரகிரியார்
16. பாம்பாட்டிச்சித்தர்
17. மதுரைவாலைசாமி
18. பெயர் அறியஇயலாத சித்தர்

இந்தப் பதினெண்சித்தர்களின் பாடல்கள் மட்டும் இவ்வாய்வுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

### 1.2.4.1 அகத்தியர்

அகத்தியர் முருகப்பெருமானின் சீடராக விளங்கினார்.[45] அவர் பல புராணங்களில் இடம் பெற்றுள்ளார். நான்மறைகளுள் முதலாவதாகிய இருக்குவேதத்தில் அவர் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது என்பர்.[46] அபிதான சிந்தாமணி அவரைப்பற்றி நாற்பத்தொன்பது விளக்கங்களைக் கொடுத்துள்ளது.[47] இவற்றால் அவர் வேதகாலத்தில் வாழ்ந்தவர் எனத்தெளியலாம். ஆய்வுக்குட்பட்ட இப்பாடல்களைப்பாடிய அகத்தியர் எக்காலத்தவர் என்பதை அறிய முடியவில்லை.

### 1.2.4.2 அகப்பேய்ச்சித்தர்

அகப்பேய்ச்சித்தர் தம்மனம் பேயாக அலைதல் அறிந்து, அதனைப் பேயாக உருவகப்படுத்தி, அலையாது நீங்க என அறிவுறுத்திப்பாடினார். இவர் பாடிய பாடல்களை அகப்பேய்ச்சித்தர் பாடல்கள் என்று அபிதானசிந்தாமணி சுட்டுகின்றது.[48] இவரது காலம் பற்றி அறிந்துகொள்ள முடியவில்லை.

### 1.2.4.3 அழுகணிச்சித்தர்.

அழுகணிச்சித்தர், அழகிய அணிகளை வைத்துப்பாடல்கள் பாடியவர். ஆதலால், அழுகுணிச்சித்தர் எனும் கண்ணில் நீர் பெருக அழுகின்ற பாவனையோடு பாடல்கள் பாடியதால் அழுகணிச்சித்தர் என்னும் பெயர் சுட்டப்பட்டதாகக் கூறப்படுகின்றன.[49] இவரது காலம் அறியப்பெறவில்லை.

1.2.4.4 இடைக்காடர்

இடைக்காடர், இடையராய் ஆடுமாடு மேய்த்திருந்தார் எனவும், பொதியமலையில் சித்தரின் அருள் பெற்றவர் எனவும் பல்வேறு விளக்கக்கதைகளை அபிதானசிந்தாமணி கூறுகிறது.[50] இடைக்காடு என்னும் பருவமத்தியில் நிலையான யோகமறிந்து ஞானமடைந்தார் எனவும் கூறுகிறது. இவர் கி.பி. 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் எனக்குறிப்பிடுவர்.[51]

1.2.4.5 உரோமரிஷி

உரோமரிஷி உடல் முழுக்க உரோமம் உடையவர் என்னும் புகண்ட முனிவரின் குமரர் எனவும், அருள் பெற்ற சித்தர் எனவும் அபிதான சிந்தாமணி விளக்குகிறது.[52] காலம் தெரியவில்லை.

1.2.4.6 கடுவெளிச்சித்தர்

கடுவெளிச்சித்தர் 'வெளி' எனும் ஞானத்தைக்குறித்துப் பாடல்கள் எழுதியுள்ளார் எனவும் பிரபஞ்சத்தைத் சுத்தவெளி எனக்குறிப்பிட்டுப் பாடல்கள் பாடியுள்ளார் எனவும் அபிதானசிந்தாமணி கூறுகிறது.[53] எக்காலத்தவர் என்னுரை முடியவில்லை.

1.2.4.7 கணபதிதாசர்

கணபதிதாசர் வரலாறு சரிவரக் கிடைக்கவில்லை. நாகைநாதரை வணங்கும்படி அறிவுரை கூறுவனவாக இவர் பாடல்கள் அமைந்துள்ளன. இவர் காலத்தை அறிய முடியவில்லை.

1.2.4.8 கருவூரார்

கருவூரார் பற்றி பெரியதொரு கர்ண பரம்பரைக் கதை ஒன்றை அபிதானசிந்தாமணி கூறுகின்றது. தஞ்சையில் இராசராச சோழனுக்கு இராசரிஷியாக இருந்தார் எனவும், சோழன் கட்டிய கலைக்கோயிலில் சிவலிங்கப் பிரதிஷ்டைக்கு இவரே அஷ்டபந்தனம் செய்வித்தார் எனவும் பல அற்புதங்களைச் செய்தருளினார் எனவும் அபிதான சிந்தாமணி இயம்புகிறது.[54] இவரது காலம் கி.பி.11ஆம் நூற்றாண்டு எனக் குறிப்பிடுவர்.[55]

1.2.4.9 காகபுசுண்டர்

காகபுசுண்டர் காகம் வடிவில் தோன்றியதனால் இப்பெயர் பெற்றார் என்றும்; காகம் போன்று கூர்மையான பார்வையால் பிறர் காணாத காட்சியைக் கண்ணால் கண்டு மகிழ்ந்தவர் என்றும் பல கதைகள் உலவுகின்றன.(ப.சி.பெ.கோ.775) இவரது காலத்தை அறிய முடியவில்லை.

1.2.4.10 குதம்பைச்சித்தர்

குதம்பை என்பது ஒரு காதணி. அதை அணிந்த பெண்ணை முன்னிலையாகக் கொண்டு பாடல்கள் பாடியுள்ளார் எனவும் மனதைப் பெண்ணாக உவமித்து முன்னிறுத்தி குதம்பாய்! எனப்பாடியதால் குதம்பைச்சித்தர் ஆனார் எனவும் விளக்கப்பெறுகிறார். குதம்பேஸ்-சித்தர் என அபிதான சிந்தாமணி கூறுகிறது.[56] இவரது காலம் பற்றியும் புலப்படவில்லை.

1.2.4.11 கொங்கணர்

கொங்கணர் பற்றி அபிதான சிந்தாமணி நீண்ட விளக்கம் தருகின்றது. அதில் திருவள்ளுவர், வாசுகி ஆகியோரை இணைத்து 'கொக்கென்றென்னினையோ கொங்கணவா' என வினவிய கதையையும் கூறி விளக்குகிறது. கொங்குநாட்டார் அதனால் கொங்கணர் ஆனார் என்றும் கூறப்படுகிறார்.[57] பல நூல்கள் இவர் இயற்றியுள்ளார். கொங்கணர் வாலைக்கும்மி இங்கு ஆய்வுக்குட்பட்டுள்ளது. கி.பி. ஏழாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என குறிப்பிடுகின்றார்.[58]

1.2.4.12 சட்டை முனிவர்

இவர் மருத்துவத்தில் சிறந்தவர் என்றும் சிறந்த சித்தர் என்றும் கூறப்பெறுகின்றார்.[59] பல நூல்கள் படைத்தருளியுள்ளார். இவரின் முன்ஞானம் நூறு, பின்ஞானம் நூறு சிறப்புடையவை. இவரது காலத்தைப் பற்றி அறிந்துகொள்ள முடியவில்லை.

1.2.4.13 சிவவாக்கியர்

இவர் பெரும் புரட்சிக்காரர்; சிறந்த சித்தர். 'பதினெண்-சித்தர்கள் பெரிய ஞானக்கோவை' என்ற தொகுப்பு நூல் இவருடைய பாடல்களையே முதலாவதாக வைத்துத் தொடங்குகிறது. இவரைப்பற்றிய கதையை அபிதான சிந்தாமணி விளக்கமாகக்கூறுகிறது.[60] 'சொல்லுவேன் சிவவாக்கியம்' என்று அருளியதால் அவருக்குச் சிவவாக்கியர் என்ற பெயர் ஏற்பட்டது எனவும் பிறக்கும் பொழுது 'சிவ' எனக்கூறிக் கொண்டே பிறந்ததால் சிவவாக்கியர் என்ற பெயராயிற்று எனவும் விளக்கப்பெறுகிறார் சிவவாக்கியர் மாபெரும் சித்தர் என்பதற்கு அவரின் பாடற்கருத்துக்களே சான்றாகின்றன. இவர் பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என்பர்.[61]

### 1.2.4.14 பட்டினத்தார்

பட்டினத்தார் எனும் சித்தர் காவிரிப்பூம்பட்டினத்தில் பிறந்து பெரும் வணிகராக விளங்கிச் செல்வம் சேர்த்துத் துறவு பூண்டு ஞானம் எய்தியவர். இவருக்கு வரலாறு தெளிவாக உள்ளது. இளமை முதற்கொண்டே வாலறிவன் நற்றாள் தொழுதல் நல்லதென வெண்ணி பூசை செய்து, திருவெண்காடு அடைந்து இறையடி தொழுது, சிவகலை மங்கையை மணம்புரிந்து, மகப்பேறிலாது வாடி, திரைகடல் ஓடித்-திரவியம் தேடி, மருதவாணரை மகனாகப்பெற்று, செல்வத்தை விரும்பி, மகன் தன் வணிகத்தில் விராட்டியும் கைச்சீட்டும் கிடைக்கப்பெற்று, மருதவாணமகனை இழந்து, 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' எனும் வாக்கியம் கண்டு, உண்மை ஞானம் உணர்ந்து, தமக்கையர் நஞ்சூட்டியதை மறந்து, தாயார் தகனக்கிரியை முடித்து, தலயாத்திரை பல சென்று, கொங்குநாடாகிய அவிநாசிக்குச் சென்று, பின்பு தருவநாட்டிற்குச் சென்று, திருடன் எனக்குற்றம் சாட்டப்பெற்று, கழுமரம் எரிந்திட, பத்திரகிரி எனும் மன்னன் உண்மையுணர்ந்து இவர்அடி தொழ, திருவிடைமருதூர், திருவெண்காடு அடைந்து, முடிவில் திருவொற்றியூரில் பசுமேய்க்கும் சிறுவரோடு ஆடி, திருவிளையாடல் புரிந்து இறுதியில் மறைந்தார். இவர் பாடல்கள் ஞானத்தின் பிழிவு எனலாம்.

இவர் காலம் 11ஆம் நூற்றாண்டென ஊகிக்கப்படுகிறது என அபிதானசிந்தாமணி கூறுகிறது.[62]

### 1.2.4.15 பத்திரகிரியார்

இவர், உஜ்ஜயினியிலிருந்த அரசர், பட்டினத்தாரின் சீடர், முனிவர். இவர் பாடல்கள் அறிவை எழுப்பவல்லனவாய் அமைந்துள்ளன. இவரின் வரலாறு பற்றி அபிதான சிந்தாமணி விளக்குகிறது.[63] விக்கிரமாதித்தன் கதையில் இடம் பெறுகின்ற பத்திரகிரிராஜா என்பவர் இவரினும் வேறானவர். இவரது காலம் பட்டினத்தாரின் காலமாகும்.

### 1.2.4.16 பாம்பாட்டிச்சித்தர்

பாம்பாட்டிச்சித்தர் கொங்குநாட்டில் மருதமலையடிவாரத்தில் தவம் செய்திருந்ததாகக் கூறுவர். இவருடைய பாடல்கள் பலரும் அறிந்துகொள்ளக் கூடிய அளவு எளிமையானது. உட்பொருள் மறைந்திருக்கும். மக்கள்மனதில் மிகவும் இடம் பிடித்த பாடல்கள். இவர் பாம்பாட்டி அல்லர். பாம்பு என்ற வாசியைப் பிடித்து உச்சிக்கண் என்னும் சுழுமுனையில் ஆட்டியவர்.

இவரைப்பற்றிய சிலநிகழ்ச்சிகளை அபிதானசிந்தாமணி கூறுகிறது.[64]

### 1.2.4.17 மதுரைவாலைசாமி

'ஞானக்கும்மி' பாடியவர். சிறந்த இசையுடன் சந்தநயம்படப் பாடியுள்ளார். ஞானத்தைப் பெண்ணாக உருவகப்படுத்தி, முன்னிலைப்படுத்தி ஞானப்பாடல்களைப் பாடியுள்ளார்.

### 1.2.4.18 பெயர் அறிய இயலாத சித்தர்.

இவரது பெயரை அறிய இயலவில்லை. பெயர் நேரிடையாகக் கிடைக்கவில்லை. 'சிவானந்த போதம்' எனும் நூலினை இயற்றியுள்ளார். நூலின் காப்புச் செய்யுளில் 'தியாகரருள் போதஞ்சிவ சுந்தரன்சொல்' என்ற அடி இடம் பெற்று, 'தியாகர் அருளிய போதத்தைச் சிவசுந்தரன் கூறுகிறேன்' எனும் பொருளைத் தருகிறது. எனவே, இறையருளால் பாடப்பெற்ற இந்நூலின் ஆசிரியர் சிவசுந்தரனாராக இருத்தல் கூடும் எனக் கருதலாம். இந்நூலில் உரைநடைப் பகுதிகள் இடம் பெற்றுள்ளன.

இச்சித்தர்கள் தம் வாழ்வில் வெற்றி கண்டவர்கள். வாழ்வாங்கு வாழ்ந்தவர்கள். தெய்வத்தோடு ஒப்ப மதிக்கப்பெற்று, மக்களால் தொழப்பட்டு வருகின்றனர். தம்முடலைத் தவத்தால் மறைத்து ஞானதேகம் பெற்று ஒளியுடம்புடன் திகழ்பவர்கள். மேன்மை அருளாளர்கள்.

### 1.2.5 சித்தர்கள் ஊர்

பதினெட்டு சித்தர்களின் பிறப்பிடம், வாழ்விடம் பற்றிய தகவல்கள் முழுமையும் நமக்குக் கிடைக்கவில்லை. யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற கொள்கையை மேற்கொண்டு வாழ்ந்தவர்கள் சித்தர்கள் என்றால் அது மிகையன்று.

இக்கருத்தினை

> "சித்தர்கள் தம் ஊர் உரைப்பது இல்லை; பேர் உரைப்பது இல்லை; உறவும் இனமும் உரைப்பது இல்லை; ஓர் இடத்தில் தொடர்ந்து உறைவதும் இல்லை; இலக்கண இலக்கிய சமய ஆராய்ச்சியிலே காலங்கழிப்பதும் இல்லை; தேர்ந்த அறிவாளர்; செழுஞ்செல்வர், பெரும்பதவியர் ஆகியோர் மையத்திலே வாழக்கருதியதும் இல்லை. உலக வாழ்வில் ஒட்டியும் ஒதுங்கியும் ஊடாடியும் அகன்றும் தாமரை இலைமேல் தண்ணீரென வாழ்ந்தனர்"[65]

என்னும் கூற்று அரண் செய்வதாக உள்ளது.

சித்தர்களின் பாடல்களில் அவர்கள் பிறந்து/வாழ்ந்த ஊர்களைப் பற்றிய செய்திகள் இடம்பெறவில்லை என்பது இங்குச் சுட்டத்தக்கது.

1.2.6 நாட்டு வேற்றுமை

சித்தர்களின் பாடல்களிலும் வாழ்வியலிலும் வடநாடு தென்னாடு என்ற வேறுபாடுகள் இடம்பெறவில்லை. இதனை

> "சித்தர்களிடம் வடநாடு, தென்னாடு என்ற வேற்றுமையும் இல்லை. வான்மீகர், தன்வந்திரி, பதஞ்சலி, அகத்தியர், திருமூலர் முதலியவர்கள் கோரக்கர் போன்ற சித்தர்கள் வடநாட்டினராலும் போற்றப்படுகின்றனர். தென்னாட்டாராலும் போற்றப்படுகின்றனர். இவர்கள் பாரத நாட்டுக்கே பொதுவானவர்கள்"[66]

என மொழிவது மனங்கொள்ளத்தக்கது.

சித்தர்கள் பலர் பல்வேறு நாடுகளுக்கும் சென்று வந்தனர் என்பது மக்கள் மத்தியில் வழங்கப்பெறும் செவிவழிச் செய்திகள் மூலம் தெரியவருகிறது.

1.2.7 சாதி

சித்தர்கள் பொதுநீதி வேண்டியவர்கள். உயர்வு தாழ்வு அற்றவர்கள். சாதி வேற்றுமை விரும்பாதவர்கள். ஆகவே, அவர்கள் சார்ந்த சாதிகளை அறிய இயலவில்லை. இக்கருத்தினை

> "சித்தர்கள் சாதி சமயங்களைக் கடந்து தத்துவங்களைச் சொன்னவர்கள். ஆகவே அவர்களுடைய சாதி என்ன என்கிற ஆராய்ச்சியில் ஈடுபட வேண்டிய அவசியம் இல்லை"[67]

என்னும் கூற்றால் துணியலாம்.

1.2.8 வாழ்க்கை வரலாறு

வரலாறு எழுதியவர்கள் சித்தர்களைக் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை. இலக்கிய வரலாற்றில் கூட சித்தர்களுக்குப் போதுமான இடம் கிடைக்கப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தக்க ஆதாரங்கள் கிடைக்கப்பெறாததால் விடுபட்டிருக்கலாம் என மனதுக்கு அமைதி கூறிக்கொள்ளலாம். கிடைத்த வழிமுறைக் கொண்டு அவர்களைப் பற்றிய உண்மைச் செய்திகளை வெளிக்கொணர்வது நல்ல ஆய்வு எண்ணமாகும்.

சித்தர்கள் வாழ்ந்து மறைந்த இடங்களில் சில இக்காலத்தில் திருக்கோயில்களாக விளங்குகின்றன. இவ்வுண்மையை வாழ்வியல் களஞ்சியம்,

> "இத்தகைய சிறப்பு வாய்ந்த சித்தர்கள் வேண்டியபோது வேண்டிய இடத்தில் தோன்றுவதால் இவர்களுக்கென்று வரலாற்று முறையில் வாழ்க்கை வரலாறுகள் இன்றுவரையில் எழுதப்பெறவில்லை. எந்நாட்டிற்கும் பொதுவில், எங்கும் சஞ்சரிப்பதால் ஒருவர் தம்பெயரே பல இடங்களில் பல நாடுகளில் பேசப்படுகின்றது. சித்தர்கள் சமாதியடைந்த இடங்களே இன்று பொதுமக்கள் பலரும் வழிபடுகின்ற தெய்வத்-திருக்கோயில்களாக இலங்குகின்றன.[68]

எனக் கூறுவதிலிருந்து மேற்குறித்த கருத்து உறுதியாகின்றது.

சித்தர்கள் எக்காலத்திற்கும் உரியவர்கள்; காலங்கடந்து வாழ்பவர்கள். ஆதலால் குறுகிய வரலாற்றினுள் அவர்களை அடக்க முடியாது. இதனை வலியுறுத்துவதாக

> "வரலாற்றுப் போக்கில் சித்தர்களை
> 'உரிய இடத்தில்' வைத்து எண்ணப்படவில்லை
> என்பது போலவே சித்தர் பற்றிய வரலாறும்
> முழுமையாக வரையப்படவில்லை. சித்தர்கள்
> காலங்கடந்து வாழ்பவர்கள். ஆகையால்
> அவர்களை வரலாற்றியலுக்குள் அடக்கிவிட முடியாது
> என்ற கருத்துமுண்டு"[69]

என்னும் கூற்று உள்ளது.

சித்தர்களின் பாடல்கள் கிடைத்த அளவிற்கு அவர்களைப்-பற்றிய தெளிவான, ஆதாரப் பூர்வமான வரலாற்றுக் குறிப்புகள் கிடைக்கப்பெறவில்லை எனலாம்.

## 1.2.9 சித்தர்கள் வாழும் தலங்கள்

சித்தர்கள் வாழ்ந்த, வாழ்கின்ற இடங்கள் பற்றிய செய்திகளைப்-பற்றி

> "தமிழகத்தில் உள்ள தலங்கள் பலவற்றில்
> சித்தர்கள் பற்பலர் பண்டும் இன்றும், என்றும்
> வாழ்ந்து வருகின்றனர் என்று பெரியோர்கள்
> கூறுவர். பலதலங்கள் தெய்வீகச் சிறப்பும்,
> ஆற்றலும் பெற்றுத் திகழ்ந்தோங்கி விளக்குவதற்குக்
> காரணம் அவ்விடங்களில் சித்தர்கள் பலர் சமாதி
> கூடித் தவம் புரிந்து வருவதேயாகும் என்பர்.
> அதன்படி திருமூலர் சிதம்பரத்திலும், திருநந்தி-
> தேவர் சீர்காழியிலும், தன்வந்திரி வைத்தீசுவரன்
> கோயிலிலும், கமலமுனி திருவாரூரிலும், சட்டைமுனி
> திருவரங்கத்திலும், கருவூர் தேவர் கருவூரிலும்,

> போகர் பழநியிலும், சுந்தரானந்தர் மதுரையிலும், மச்சமுனி திருப்பரங்குன்றத்திலும், கும்பமுனி திருவனந்தபுரத்திலும், கோரக்கர் திருப்பருப்பதத்திலும் குதம்பைச்சித்தர் திருக்கழுக்குன்றத்திலும், அகப்பேய்ச்-சித்தர் திருமுதுகுன்றத்திலும், பாம்பாட்டிச்சித்தர் திருக்கடவூரிலும், கவரிமான் சித்தர் திருக்காளத்தியிலும், பதஞ்சலி முனிவர் இராமேசுவரத்திலும், இடைக்காட்டுச்-சித்தர் திருவண்ணாமலையிலும், இராமதேவர் அழகர்-மலையிலும், வான்மீகி முனிவர் எட்டிகுடியிலும் சமாதி கொண்டு வாழ்ந்து வருகின்றனர் என்று அத்தலங்களின் பெருமையை அறிஞர்கள் புகழ்ந்து கூறுவர்" [70]

எனக்கூறுகிறார்.

இக்கூற்றிலிருந்து, பலதலங்களும், சிறப்புற்றுத் திகழ்ந்திட அத்தலங்களில் வாழ்ந்த சித்தர்களும் ஓரளவிற்குக் காரணமாகத் திகழ்ந்திருக்கின்றனர் என்பது புலப்படுகிறது.

சித்தர்களுக்குத் தமிழகத்தில் ஆங்காங்கே நினைவு வழிபாடு செய்து வருகின்றனர் என்பதை

> "சித்தர் அடங்கிய இடங்கள் ஆங்காங்குண்டு. ஆங்காங்கு ஆண்டுதோறும் நினைவு விழாக்கள்உண்டு. நாள்வழிபாடு, கூட்டு வழிபாடு என்பவையும் உண்டு. படையலும் பொங்கலும் பாலிப்பதும் உண்டு. இக்கால முறைப்படி பொழிவுகளும் உண்டு. ஆயினும் சித்தர் நெறிகளை ஏற்றுப்-போற்றுதல் பெரிதும் இல்லை. மற்றைவழிபாடுகள்

போலவே நூற்றொடு நூற்றொன்றாகப்
பூசைபோடும் அளவில் புகழ்பாடும் அளவில்
அமைந்து விடுகின்றது"[71]

எனக்குறிப்பிடுவதால் அறியலாம்.

சித்தர் வாழ்ந்த இடங்களை அவர்களின் பெயரைக்-கூறியோ பொதுவாகச் சித்தர் என்ற அளவிலோ அழைத்து வருவதை இன்றும் அறியமுடிகிறது. தஞ்சை மாவட்டத்தில் வேதாரண்யம் அருகே உள்ள அகத்தியாம்பள்ளி எனும் ஊர் சுட்டத்தக்கது. மயிலாடுதுறைக்கருகே சித்தக்காடு என்றொரு இடம் இருக்கிறது. சித்தர்காடு என்பதுதான் சித்தக்காடு என்று மருவி இருப்பதாகக் கூறுவர்.[72] சேலம் அருகே சித்தர்கோயில் என்ற ஓர் இடமுண்டு. தமிழகத்தில் ஆங்காங்கே சித்தர் பற்றிய நினைவிடங்கள் இருப்பதையும் அறிய முடிகிறது.

1.2.10 சித்தர்களின் காலம்

சித்தர்கள் பழங்காலம் முதலே வாழ்ந்து வருகின்றார்கள். அவர்களின் தொடக்க காலத்தைத் தெளிவாக அறியமுடியவில்லை.

சித்தர்களின் கால எல்லையைக் குறித்து சி. வேலுச்சாமி
"சித்தர்களின் கால எல்லையைத் திருமூலருக்கு
முன்னர் பல நூற்றாண்டுகளுக்குக் கொண்டு
செல்லாமல் திருமூலர் காலந்தொடங்கி
(கி.பி.5ஆம் நூற்றாண்டு) கி.பி. 17, 18ஆம்
நூற்றாண்டுவரை ஒரு நீண்ட கால அளவினை ஏற்பதே
பொருத்தமுடையதாம்.[73]

சித்தர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே வாழ்ந்தவர்கள்தாம் என்பதை ஏற்பதில் தவறில்லை. தொடர்ச்சியாகவே ஒரு, சீடர் என்ற மரபு முறையில் வாழ்ந்திருக்க வேண்டும் என்பதும் தொடர்ச்சி அறுபடாமல் வாழ்ந்திருக்க வேண்டும் என்பதும் இங்கு நினைவு கூறத்தக்கவை.

சமயங்களின் பெயரால் சடங்குகள் மிகுந்திருந்த காலத்தில் அவற்றிற்கெதிராய் பெரும் முழக்கமிட்டு சித்தர்கள் தங்கள் கருத்தினைக்-கூறியுள்ளனர்.

> "13-14 ஆம் நூற்றாண்டுகளிலேயே கிறிஸ்தவ இஸ்லாமிய சமயங்கள் நுழைவதற்கு வழிவகுத்துத் தமிழகச் சமயங்கள் வீண் ஆரவாரங்களைப் பெருக்கிக்-கொண்டன. அன்புக்கு முதன்மை தந்து எழுந்த பக்தி இயக்கத்தைத் தொடர்ந்து இத்தகையதொரு வீழ்ச்சி-ஆசார அனுட்டானங்களே, சமயத்தின் சாரமாய்க் கருதப்பட்ட நிலை-தமிழகச் சமயங்களுக்கு நேர்ந்தது. கிருஷ்ணதேவராயரின் பிரதிநிதிகள் தமிழ்நாட்டை ஆண்ட 16 ஆம் நூற்றாண்டில் இவ்வீழ்ச்சி உச்சமடை-கிறது. அக்காலத்தில்தான் தமிழ்நாட்டில் ஆதீனங்கள் பெருகிச் சமயங்களின் ஆதிக்கம் வலுத்ததாக அறிஞர் சொல்வர்.
>
> சமயங்கள் வளர்த்த தீமைகளுக்கெதிராய்ப் பெரும் முழக்கம் இட்ட சித்தர்களின் காலமும் 15-16ஆம் நூற்றாண்டுகளை ஒட்டிக் கணிக்கப் பெறுதலே பொருத்தம் உடையது ஆகிறது. 17-18 ஆம்

> நூற்றாண்டுகளில் தமிழகத்தில் சித்தர்கள்
> கிறிஸ்தவ, இஸ்லாமிய சைவக் கவிஞர்களால்
> பெருமையுடன் நினைவு கூரப் பெறுகின்றனர்"[74]

என ச.மாடசாமி கூறுவது மேற்குறித்தக் கருத்துக்கு வலிமையூட்டுகின்றது.

> சித்தர்களின் காலத்தைப்பற்றி வளர்மதி
> "14-ஆம் நூற்றாண்டுதொடங்கி 19ஆம்
> நூற்றாண்டின் பிற்பகுதி வரை சித்தர்கள்
> வாழ்ந்து அறிவுரை தந்ததை அறிகிறோம்"[75]

என்று கூறுகின்றார்.

மது.ச.விமலானந்தம்,

> "சித்தர் பாடல்கள் தோன்றிய காலம்
> 15 நூற்-க்கும் முந்தையன. தொகுக்கப்பெற்ற
> காலம் 18 நூற் இறுதி அல்லது 19 நூற்
> தொடக்கமாகலாம்"[76]

என்று சித்தர்கள் காலம் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

மேற்குறித்த அறிஞர்களது கருத்துக்களையும் சமய-சமுதாய நிலைகளையும் அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது, சித்தர்கள் மிகப்பழமையான காலம் தொடங்கி, திருமூலர் காலம் தொடர்ந்து, வாழையடி வாழையென வளர்ந்து கி.பி.பதினெட்டாம் நூற்றாண்டுவரை குரு-சீடர் மரபு வழிப்படி வாழ்ந்திருக்கிறார்கள் எனக் கருத முடிகிறது.

## 1.2.11 சித்தர் பாடல்களின் தொகுப்பு

சித்தர்களின் பாடல்கள் தொகுக்கப்பெற்று வெளிவந்திருக்கின்றன. தொடர்ந்து அவை பாதுகாக்கப் பட்டிருக்கின்றன என்பதால், அவற்றினை மக்கள் பெரிதும் விரும்பிப் போற்றியிருக்க வேண்டும் என்பதும் புலப்படுகின்றது. கிடைத்தவற்றை ஓலைச்சுவடியில் எழுதி வைத்திருந்திருக்கிறார்கள் என்பதை அறிய முடிகின்றது.

சித்தர்களின் பாடல்கள் தொகுக்கப்பெற்ற காலம் குறித்து

> "பல்வேறு காலத்தில் பல்வேறு இனத்திலும்
> சூழ்நிலையிலும் தொழிலிலும் கொள்கையிலும்
> உள்ளவர்கள் எழுதிய பாடல்களின் தொகுப்பே
> சித்தர் பாடல்கள். இவை தொகுக்கப்பட்ட
> காலம் 18ஆம் நூற்றாண்டின் இறுதி அல்லது
> 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் எனலாம்"[77]

என்னும் கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதாக அமைந்துள்ளது.

சித்தர் பாடல்கள் முறையாகத் தொகுக்கப் பெறவில்லை; பதிக்கப்பெறவுமில்லை. பதிப்பிக்கப்பட்ட பாடல்களிலும் பிழைகள் உள்ளன. சித்தர் பாடல்களில் அச்சுப் பிழைகள் உள்ளன என்பதும் ஒட்டுமொத்தத்தொகுப்பாக மட்டும் உள்ளது என்பதும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாகிறது. வருங்காலத்தில் பதிப்பகத்தார் நுட்பமறிந்து செய்தால் சமுதாயத்திற்கு நன்மையாக இருக்கும் என்பது தெளிவு.

சித்தர்களைப் பற்றியும் அவர்களது பாடல்களைப் பற்றியும் இரா.மாணிக்கவாசகம்,

"தமிழ்நாட்டு வரலாற்றிலும், இலக்கிய வரலாற்றிலும் சித்தர்கள் இன்றியமையாததொரு இடம் பெறத்தக்கவர்கள். தமிழ்ச் சித்தர்கள் வாழ்ந்த காலத்தைத் தக்க சான்றுகளுடன் அறுதியிட்டு உறுதியாகக் கூற முடியாது போனாலும் அவர்கள் பெயரில் கிடைக்கின்ற அச்சில் வெளி-வந்துள்ள நூற்றுக்கணக்கான நூல்கள் மூலமாகவும், வெளிவராத ஏடுகள் மூலமாகவும் மக்களுக்கும் மொழிக்கும் ஆற்றியுள்ள தொண்டினை நன்கு அறியலாம்"[78]

எனக் கூறுகின்றார்.

சித்தர்களின் பாடற்கருத்துகள் காலம் காலமாய் நிலைத்து வாழ வேண்டும் என்பதில் இரு வேறு கருத்துகளுக்கு இடமில்லை. அவர்களின் குறிக்கோள் மக்கட் சமுதாயத்திற்குப் பெரிதும் துணையாக அமையும் என்பதில் ஐயமில்லை.

## 1.3.0 சித்தர்களின் குறிக்கோள்.

தமிழ்நாட்டு வரலாற்றில் சித்தர்களுக்குத் தனி இடம் உண்டு. இறையருள் பெற்ற இச்சித்தர்கள் மக்கள் மேம்பாட்டிற்காகவே பாடுபட்டுள்ளனர். இதனை

"தமிழ்ச் சித்தர்கள் உலகமெங்கும் பரவி
உலக ஒருமைப்பாட்டிற்கு வழிவகுத்தவர்கள்.
மண்ணுலகத்திலேயே அமரவாழ்வைப் பெற்று
காலத்தையும் தூரத்தையும் வென்று
வாழ்ந்தவர்கள்"[79]

என்னும் கூற்று அரண் செய்வதாக உள்ளது.

சித்தர்கள் தாம்பெற்ற இன்பம் பிறரும் பெறவேண்டும் என்று கருதி, மக்களின் நல்வாழ்வுக்கு வழிகாட்டியுள்ளனர்.

சித்தர்கள், 1.வழிகாட்டல், 2.வேறுபாடு களுதாமை, 3.ஞானநிலை அடைதல், 4.மரணமிலாப் பெருவாழ்வு முதலியவற்றை குறிக்கோள்களாகக் கொண்டிருந்தனர்.

1.3.1 வழிகாட்டல்

மக்களுக்கு நன்னெறி காட்டுவதே சித்தர்களின் தலையாய குறிக்கோளாக விளங்குகிறது. 'சித்தர்கள் அகவாழ்வு-புறவாழ்வு இரண்டாலும் மக்களோடு தொடர்புகொண்டு அவர்கள் அறிவை ஞானக்கனலாக்குபவர்கள்'[80] என மொழிவது இங்கு மனங்கொள்ளத் தக்கது.

வாழையடி வாழையாகத் தமிழகத்தில் தோன்றியுள்ள சித்தர்கள், மக்கள் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்குரிய நெறிகளை வகுத்துத்-தந்துள்ளனர். அவர்களின் வழிச்சென்றால் இறையின்பத்தில் மூழ்கலாம். இதனை 'இறையின்பத்தில் திளைப்பதற்கு மனித உடல் நோயற்றதாக இருக்க வேண்டும் என்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தனர்"[81] என்று கூறுவர். உடல்நலம் பேணவேண்டும் என்பது சித்தர்களின் அடிப்படையான வழிகாட்டலாக உள்ளது எனலாம்.

1.3.2 வேறுபாடு கருதாமை

சாதி, சமய வேறுபாடுகளும் ஏற்றத்தாழ்வுகளும் சாதாரண உலக வாழ்வை விரும்பும் மக்களுக்குத்தானேயல்லாது உயர்ஞான அறிவு பெற்றிட்ட சாதுக்களுக்கு அல்ல என்பதையும், மேலான உணர்வினைப் பெற்றிட்ட பின்பு சித்தர்கள் கீழ்நிலை உணர்வை அடையமாட்டார்கள் என்பதையும்

"சமயபேதம் பலவான சாதி பேதங்கள்
சகத்தோர்க்கே யல்லாதுசற் சாதுக் களுக்கோ
அமயத்திலேறின பேரின்பத்த மாறுமோ
சித்தர்சித் தாந்தந்தேர்ந் தாடாய் பாம்பே"

(ப.சி.பெ.கோ.213) எனவரும் பாம்பாட்டிச்சித்தர் பாடல்வழி அறியலாம்.

சித்தர்களின் சாதி சமயம் கடந்த நிலையைப்பற்றி 'சித்தர்கள் சாதி, சமயபேதம் கடந்தவர்கள். மனிதஇனம் என்ற ஒன்றன் நல்நிலைக்காகவே காலமெல்லாம் கருத்தைச் செலுத்தி உழைத்த பெருமக்கள்'[82] என்று கூறுகின்றார்.

இக்கருத்துக்கு வலுவூட்டுவதுபோல்,

"சமயப்பிணக்குகள், சாதிச் சண்டைகள், உருவ
பேதங்கள், உயர்வு தாழ்வுப் போராட்டங்கள்
ஆகிய அத்தனை வேறுபாடுகளையும் கடந்து இத்தனை
வேற்றுமைகளுக்குள்ளும்ஒற்றுமையைக் கண்டு நமக்கும் அதைக்
காண்பிக்கிற மதமே சித்தர்களின் மதமாகும்"[83]

என்று மீ.ப.சோமு கூறுகின்றார்.

'சித்தர்கள் மதம்' என்று தனியாக உயர்த்திக் காட்டுகின்றவழி சித்தர்களின் குறிக்கோள் நமக்குப் புலனாகிறது.

"பொய்யான சமய, சமூக அமைப்புகளுக்குக் கட்டுப்படாமல் வாழ்ந்தும், வாழுமாறு மக்களை வலியுறுத்தியும் ஆரவாரமற்ற தூயதொரு யோகப் பண்பாட்டுக்குத் தமிழ் மண்ணில் வித்திட்டவர்கள் சித்தர்கள்"[84]

எனக் கூறுவது சித்தர்களின் குறிக்கோளை/கருத்துகளை வலுவாக உணர்த்துகிறது.

இக்கருத்துக்கு மேலும் அரண் செய்வது போன்று, "பற்றுகளை விட்டுத் தனித்திருந்த சித்தர்களும் சமுதாயக்கேடுகளை எண்ணி வருந்தினர். சமுதாய நலனுக்குத் தொண்டு செய்தனர். ஏற்றத்தாழ்வற்ற சமுதாயத்தை உருவாக்கவும் போரும் பூசலும் அற்று மக்கள் அமைதியாக வாழவும் அறிவுரைகூறி நெறிப்படுத்தினர்"[85]

எனும் கூற்று அமைந்துள்ளது.

## 1.3.3 ஞானநிலை அடைதல்

தெளிந்த ஞானம் கைவரப் பெறுதலையும் சித்தர்கள் குறிக்கோளாகக் கொண்டனர். இறையின்பம் உணர்ந்தவர்கள். பிறருக்கும் உணர்த்தியவர்கள்.

"உள்ளத்துக் குள்ளேயே யுணர வேண்டும்
உள்ளும் புறம்பையு மறிய வேண்டும்
மெள்ளக் கனலை யெழுப்ப வேண்டும்
வீதிப் புனலிலே செலுத்த வேண்டும்

கள்ளப் புலனை கடிந்து விட்டுக்
கண்ணுக்கு மூக்குமேற் காண நின்ற
தெள்கு பரஞ்சோதி தன்னைத் தேடிச்
சீர்பாதங் கண்டோமென் றாடாய் பாம்பே"

(ப.சி.பெ.கோ.216) என்று பாம்பாட்டிச் சித்தர் பாடுகின்றார்.

ஞானநிலை என்பது உடலைவிட்டு வெளியில் இல்லை. அதனை உள்ளத்துக்குள்ளேயே உணர வேண்டும். புற உடம்பையும் அக உடம்பையும் அறிய வேண்டும். மெல்ல மெல்ல மூலாதாரக் கனலை எழுப்பிட வேண்டும். ஞானப்பாதையில் உணர்வினைச் செலுத்த வேண்டும். உடம்பில் தோன்றும் கள்ளப் புலைக் கடிந்து தீய உணர்வுகளை நீக்கிட வேண்டும். இரு கண்ணுக்கு நடுவும் மூக்கிற்கு மேலானதுமான சுழி முனையில் தோன்றும் உண்மைப் பரஞ்சோதி தன்னைக் காணவேண்டும். அந்த நிலைக்கு நம்மை உயர்த்திட வழிகாட்டும் தலைவனின் திருவடிகளைப் பணிந்து ஞானநிலை அடைவதைக் குறிக்கோளாகச் சித்தர்கள் கருதுகின்றனர். இத்தன்மை பாம்பாட்டிச் சித்தரின் மேற்குறித்த பாடல்வழிப் புலனாகின்றது. ஞான நிலை அடைதல் பற்றி மற்ற சித்தர்களும் பாம்பாட்டிச் சித்தரின் கருத்தினை ஒத்தே விளக்கியிருக்கின்றனர்.

## 1.3.4 மரணமிலாப் பெருவாழ்வு

இறவா நிலையை அடைவதைச் சித்தர்கள் உயர்ஞான முடிவாகக் கருதுகின்றனர். இதனை 'நமனற்ற நாதன்பதம் நாடியே நிற்போம்..." (ப.சி.பெ.கோ.219) என்று பாம்பாட்டிச் சித்தர் கூறுவதன் மூலம் அறியலாம்.

தலைவன் ஞானநிலை அடைந்தவன். இறப்பு இல்லாதவன். யமனுக்குத் தன்னுடலை இரையாகத் தராதவன். அவனுடைய பதம் நாடியே என்றும் நிற்போமேயானால் உலகில் நாமும் நிலையாய் நிற்க முடியும் என பாம்பாட்டிச் சித்தர் அறிவுறுத்துகின்றார். 'காலனென்று சொல்லுவீர் கனவிலும்அஃ தில்லையே' (ப.சி.பெ.கோ.5) என்று சிவவாக்கியரும் இதனை வலியுறுத்துகின்றார்.

தான் வேறு இறைவேறு என்றில்லாமல் இரண்டற்ற தன்மையைச் சித்தர்கள் விரும்புகின்றனர். இதனை 'நினைக்குநீ நா னெனக்குநீ நினைக்குமாற தெங்ஙனே' (ப.சி.பெ.கோ.70) என சிவவாக்கியர் கூறுகிறார்.

கீழ்க்கூறப்பெறும் அறிஞர்களின் கருத்துகள், மேற்கூறப்பெற்ற சித்தர்களின் குறிக்கோள் பற்றிய கருத்துகளுக்கு வலுவூட்டுவதாக அமைந்துள்ளன.

சித்தர்களின் நோக்கம் பற்றி

"சாகாத்திருநெறியே சித்தர்கள் நோக்கம். அதற்காக அவர்கள் கையாண்ட வழிமுறைகளே அவர்களுடைய இலங்கு நூற்கள்"[86]

எனக் கூறுகிறார்.

சித்தர்களின் குறிக்கோள்கள் பற்றி,

"ஆன்ம விடுதலை, மரணமிலாப் பெருவாழ்வு, வெட்டவெளி என்பனவே சித்தர்களின் முதன்மையான - முடிவான குறிக்கோள்"[87]

என்று கூறுவர்.

"சித்தர்களின் குறிக்கோள் மனிதனாகப் பிறந்தவன் இறக்கக்கூடாது. இறப்பினை எய்துவானேயானால் மீண்டும் பிறவியினை எடுப்பான். எனவே இவ்வுடலைக் கீழே போடாமல் உடலுடனேயே செல்கின்ற நிலையினையே பெற வேண்டும் என்று கூறி அதற்குரிய முறைகளை வகுத்துக் கூறுகின்றனர்"[88] என சித்தர்களின் குறிக்கோள் பற்றிக் கூறுவதும் இங்குச் சுட்டத்தக்கது.

மேற்கூறப்பெற்ற குறிக்கோள்களான, நன்னெறிகாட்டல், வேறுபாடு கருதாமை, ஞானநிலை அடைதல், மரணமிலாப் பெருவாழ்வு முதலானவை சித்தர் பாடல்களின் உள்ளீடுகளாக விளங்குகின்றன.

உலகோர் அனைவருமே சித்தர் மார்க்கத்தினை ஏற்கலாம். உயர்வுதாழ்வு இல்லாத நன்னெறியைப் புலப்படுத்துகிற மார்க்கமே சித்தமார்க்கம் ஆகும். சித்தர்களின் குறிக்கோள்களை மக்கள் உணர்ந்தால் நன்மை விளையும் என்பதில் ஐயமில்லை.

சித்தர்களின் பாடல்கள் குறிக்கோள் உள்ள பாடல்கள். அவை பொருள் பொதிந்தவை.

## 1.4 சித்தர்களின் பெருமைகள்

சித்தர்கள் பெருமைக்குரியவர்கள்; செயற்கரிய செயல்களைச் செய்தவர்கள்; முக்காலமும் உணர்ந்து நிலையற்ற மானுட வாழ்வின் தன்மையறிந்து தம்மை நிலையாக்கிக் கொண்டவர்கள்; புத்துலகம் படைத்தவர்கள். சித்தர்கள் தமிழர் நாகரிகத்தை வளப்படுத்தி அவர்களின் வாழ்க்கை முறையையும் செப்பம் செய்தவர்கள் எனக் கருதலாம். சித்தர்களைத் திருக்கோவிலாகக் கருதுவர்.[89]

சித்தரை 'ஞானி, யோகி, ரிஷி, சாமி, முனி, குரு முதலிய பெயர்களில் அழைப்பர்'.[90] இதன்மூலம் சித்தர்களுக்கு வழங்கப்பெறும் சிறப்புப் பெயர்களை அறியலாம்.

இறை அனுபவத்தில் திளைத்த சித்தர்களை எங்ஙனம் அறிவது என்பதை 'அருளுடையோரைத் தவத்திற் குணத்தில் அருளில்அன்பில்/இருளறு சொல்லிலுங் காணத்தகுங் கச்சிஏகம்பனே" (ப.சி.பெ.கோ.95) என்று பட்டினத்தார் சுட்டுகின்றார்.

உலகில் பலவகையான குணங்கொண்ட மக்கள் வாழ்கின்றனர். அவர்களின் தன்மையை அவரவர்கள் செய்யும் செயல்வழி அறியலாம். பொருள் உள்ளவரை அவர்செய்யும் செயலிலிருந்து அறிந்து கொள்ளலாம். வீரரைப் போர்க்களத்தில் அறிந்து கொள்ளலாம். [illegible] சான்றோரை அவர் முகத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். அதுபோல அருளாளரை அவர்செய்யும் தவத்திலும், குணத்திலும், அருளிலும், அன்பிலும் இருள் நீக்கும் சொல்லிலும் கண்டறியலாம் என பட்டினத்தார் உணர்த்துகின்றார்.

"தாய்வீடு கண்டவன் ஞானியடி..." (ப.சி.பெ.கோ.327) என்று கொங்கணச்சித்தர் கூறுகின்றனர். தாய் போன்று அருள் செய்பவன் தலைவன். ஆகையால், அவனைத் 'தாய்' எனக் கூறுவர். 'வீடு' என்பது பிறவியில் இருந்து விடுதலை அடைதல் ஆகும். அந்த உயர்ந்த ஞான வழிமுறைகளைக் கண்டவர் ஞானிகள் என்று விளக்குகிறார் கொங்கணர்.

தலைவனை வணங்கிடும் உணர்வையும், தவமுயற்சியையும், தரும சிந்தனையையும் பெருக்கிக் கொண்டால் தலைவன் அருள்வான் என்று பட்டினத்தார் கூறுகிறார். (ப.சி.பெ.கோ.164).

மனம் வஞ்சக எண்ணங் கொண்டது. அத்தீய உணர்விலிருந்து மனம் வெளிவராது. ஆனால், தூய அறிவும் அருளுமுடைய ஞானியரின் திருவடிகளை நாள்தோறும் அன்பு கொண்டு வணங்கிவர வஞ்சமனம் மாறும் என்று கணபதிதாசன் கூறுகின்றார். (ப.சி.பெ.கோ.549)

சித்தர் வல்லபம் என விளக்கிடும் பாம்பாட்டிச்சித்தர், துரும்பைத்துரும்பாகவும், துரும்பைத் தூணாகவும், ஆணைப் பெண்ணாகவும் பெண்ணை ஆணாகவும் ஆக்கிடும் வல்லமை பெற்றவர்கள் சித்தர்கள் என்று குறிப்பிடுகின்றார். (ப.சி.பெ.கோ.203)

எட்டுமலைகளையும் பந்தாக எடுத்து அறிவதும், ஏழு கடலையும் குடித்து ஏப்பம் விடுவதும், அளவிடமுடியாத மணலையும் மதித்து அளவிடுவதும் சித்தர்களின் ஆற்றல் (ப.சி.பெ.கோ.203) என்று பாம்பாட்டிச் சித்தர் கூறுகின்றார். இயற்கையை வென்றவர்கள் சித்தர்கள், அவர்களால் முடியாதது இல்லை என பாம்பாட்டிச்சித்தர் விளக்குகிறார்.

தலைவன் ஆயிரெத்தெட்டு இதழ்களை உடைய கமலம் போன்ற வடிவுடைய சோதியினுள் அமர்ந்திடும் சித்தன் என்றும், கழுத்துப் பகுதிக்கும் மேலான பகுதியான அண்டப்பகுதியில் எல்லாம் நிறைந்து அற்புதத்தைச் சாதித்துக் காட்டிய சித்தன் என்றும்; காயத்தைக் கொண்டே காயமில்லாத நிலையை ஓங்கி வளர்ந்திடச் செய்திட்ட யோக, ஞான காரணங்களை அறிந்த நற்சித்தன் என்றும்; முக்கண்ணின் ஒளியை நன்குணர்ந்த தமக்கு ஒளியாகவே வந்தவன் என்றும் போற்றிப் புகழ்கின்றார் பாம்பாட்டிச்சித்தர் (ப.சி.பெ.கோ.214) சித்தர்களின் சிறப்பினை மேன்மேலும் உரைக்க இக்கருத்துகள் துணையாகின்றன.

'வினாசை ஏதுக்கடி' என்று குதம்பைச் சித்தர் (ப.சி.பெ.கோ.251) கேட்பதால் ஞானத்துடன் பற்றற்ற நிலையை அடைய வேண்டும் என்பதும்; எய்திட்ட பின் ஞானிகளுக்கு வினாசை ஏதுக்காகும் என்றும் வினவுகின்றார்.

முழுமை பெற்ற ஞானிகள் வேண்டுதல் வேண்டாமை நிலை அடைந்தவர்கள் என்பதும் தெளிவாகிறது.

மனிதர்கள் சாகிறார்கள்; மகான்கள் சாகாமல் தனிவழிச் செல்கிறார்கள் என்பதைக் குதம்பைச்சித்தர், 'சாகாமற் றண்டித் தனிவழி போவோர்க்கு' (ப.சி.பெ.கோ.252) என்று உணர்த்து கின்றார். உடம்பினுள்ளே புருவழியான ஞானவழியை தனிவழியை குருவின் வழிச் சென்று அடைய வேண்டும். இல்லையேல் அழிவுக்கு வழியாகும் என்று குறிப்பிடுவதையும் காணலாம்.

சாகாதவர்கள், முத்தி பெற்றவர்கள், அல்லலை நீக்கியவர்கள், ஆறு ஆதாரங்களைக் கடந்து இன்பங்கண்டவர்கள் சித்தர்கள் என்று போற்றப்படுவதை அறிய முடிகிறது.

## 1.5 சித்தர் பாடல்களின் இயல்புகள்

சித்தர்களின் பாடல்கள் மனிதனின் வாழ்க்கைக்குத் தேவையான பல துறைகளையும் பெற்று இலங்குகின்றன. அவர்கள் கண்ட வாழ்வியல் உண்மைகள் பாமர மக்களையும் நல்வாழ்வு பெறச் செய்யும் ஆற்றலை உடையவை.

அவர் தம் பாடல்கள் வாழ்வியலுக்கு நல்லவை இவையிவை, அல்லவை இவையிவை என மக்கள் நன்கு பகுத்தறிந்து, நல்வழிப்பட்டு

உறுதிப் பொருள்களை உணர்ந்து கொள்ளும் வாயில்களாக விளங்குகின்றன.

சித்தர் பாடல்கள், கதை காப்பியங்கள் போல் கதை மாந்தர்களைக் கொண்டு சித்திரிப்பதில்லை. மக்கட்கு அறவழிகளையும் நீதிநெறிகளையும், யோகம், ஞானம், தத்துவம், சமூகநெறி முதலானவற்றையும் விளக்குகின்றன.

சித்தர் பாடல்கள் பற்றிய

> "சங்க இலக்கிய, காப்பியங்கள் நடைபோன்றில்லாமல் பேச்சுவழக்கு மொழியாகவும், எளிமையாகவும் சித்தர் பாடல்கள் அமைந்துள்ளன. பல்வேறு யாப்பு வடிவங்களில் இப்பாடல்கள் அமைகின்றன. சித்தர் பாடல்கள் சித்தர்களின் ஞான உணர்வை மக்களுக்குத் தெரிவிக்கின்றன. ஏனைய இலக்கியங்கட்கு எவ்விதத்திலும் குறைவின்றி, சமுதாய அமைப்புக்குப் பயனுள்ளதாக இவர்களின் பாடல்கள் விளங்குகின்றன"[91]

என்னும் மதிப்பீடு உளங்கொள்ளத் தக்கது.

புலவர்கள் விரும்பும் உயர்தனிச் செம்மொழி நடையைச் சித்தர்கள் பயன்படுத்தவில்லை.

சித்தர்களின் பாடல்கள் அன்பையும் அறத்தையும் முதன்மையாக்கின. சமுதாயத்தின் குறைகளைச் சுட்டிக்காட்டிச் சீர்திருத்தம் செய்வதற்குப் பெரிதும் துணையாகின்றன.

> "சித்தர் பாடல்கள் புலவர்களுக்கும் பாமரர்களுக்கும் ஒருங்கே விருந்தாக அமைந்திருக்கக் காண்கிறோம். எப்படிப் புலவர்களைக் கவர்கின்றனவோ அப்படியே சித்தர் பாடல்கள் படிப்பு இல்லாத எழுத்தறிவு அ—

இல்லாத பாமரர்களையும் கூடக் கவரக்கூடிய பாங்கோடு மிளிர்கின்றன. படித்த மக்களைப் போலவே பாமரமக்களும் இந்தப் பாடல்களை மெய்யுருகிப் பாடியும் பாடக்கேட்டும் துய்த்து வந்திருக்கிறார்கள். வேறு எந்த இலக்கியத்திற்கும் இல்லாத அளவுக்கு இந்தக் கவர்ச்சி சித்தர் பாடல்களின் அடிப்படை இயல்பாக விளங்கி வருகிறது"[92]

என குறிப்பிடுவது இங்குச் சுட்டத்தக்கது.

நாடோடிப் பாங்கில் எழுதப் பெற்றதால் அனைவரையும் ஈர்த்திட வல்லதாக சித்தர்களின் பாடல்கள் அமைந்துள்ளன.

இலக்கியத்திற்கு அடிப்படையான எதுகை, மோனையைச் சித்தர்கள் தம் பாடல்களில் அழகுறக் காட்டியுள்ளனர். கற்போர் மனத்தில் மிகுவின்பத்தை ஊட்டுவதற்கு இம்முறை பெரிதும் துணையாகின்றது.

"ஞானநூல்கள் தேடியே நவின்றஞான யோகிகாள்
ஞானமான சோதியை நாடியுள் ளறிகிலீர்
ஞானமாகி நின்றதோர் நாதனை யறிந்தபின்
ஞானமாகி தில்லைவேறு நாமுரைத்த துண்மையே"

(ப.சி.பெ.சோ.71) என்ற பாடலும்

"கட்டையாற்செய் தேவருங் கல்லினாற்செய் தேவரும்
மட்டையாற்செய் தேவரும் மஞ்சளாற்செய் தேவரும்
சட்டையாற்செய் தேவரும் சாணியாற்செய் தேவரும்
வெட்டவெளிய தன்றிமற்று வேறுதெய்வ மில்லையே"

(ப.சி.பெ.கோ.80) என்ற பாடலிலும் அடிமோனையும், அடியெதுகையும் பயின்று வருவதைக் காணலாம்.

சித்தர் பாடல்களில் சந்த இசை நயமுடைய பாடல்கள் அமைந்திருக்கின்றன. எளிய நடை அமைந்து கற்போர்க்கு ஆர்வப்பெருக்கை உண்டாக்கி இன்பத்தை ஏற்படுத்த வல்லதாக அமைந்ததை உணர முடிகின்றது.

"கோயிலாவ தேதடா குளங்களாவ தேதடா
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துளே குளங்களு மனத்துளே
ஆவது மழிவது மில்லைமில்லை மில்லையே" (ப.சி.பெ.கோ.9))

"ஆடுகாட்டி வேங்கையை யகப்படுத்து மாறுபோல்
மாடுகாட்டி யென்னைநீ மதியயக்க லாகுமோ
கோடுகாட்டி யானையைக் கொன்றுரித்த கொற்றவா
வீடுகாட்டி யென்னைநீ வெளிப்படுத்த வேணுமே"

(ப.சி.பெ.கோ.11)

"உளியிட்ட கல்லையும் ஒப்பிட்ட சாந்தையும் ஊத்தையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகி லேன்உயர் பொன்னெனவே
ஒளியிட்ட தாளிரண்டுள்ளே யிருத்துவ துண்மையென்று
வெளியிட் டடைத்துவைத் தேனினி மேலொன்றும் வேண்டிலனே"

(ப.சி.பெ.கோ.114)

மேற்குறித்த பாடல்கள் எளிய சொற்களையும் விறுவிறுப்பான நடையையும் யாப்புமுறையையும் பெற்று விளங்குகின்றன.

சித்தர்கள் தம் பாடல்களில் உவமைகளைக் காட்டிச் செல்கின்றார்கள். அவர்கள் காட்டும் உவமைகள் எளிமையாக அமைந்திருக்கின்றன. தாம் எடுத்துக்கொண்ட பொருளை விளக்கும்போது தெளிவாக்குதற் பொருட்டு உவமைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

"நாலுவேத மோதுவீர் ஞானபாத மறிகிலீர்
பாலுள்நெய்க லந்தவாறு பாவிகா ளறிகிலீர்".

(ப.சி.பெ.கோ.5)

"செய்யதெங்கி லேயிளநீர் சேர்ந்தகார ணங்கள்போல்
ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டனன்"

(ப.சி.பெ.கோ.8)

"மண்பெண்பொன் னாசை மயக்கத்தி லேவிழுந்து
கண்கெட்ட மாடதுபோற் கலங்கினேன் பூரணமே"

(ப.சி.பெ.கோ.149)

"ஏட்டுச்சுரைக் காய்கறிக்கு தவாதது போல்
எண்டிசைதி ரிந்துங்கதி யெய்த லிலையே
நாட்டுக்கொரு கோயிற்கட்டி நாளும் பூசித்தே
நாதன்பாதங் காணார்களென் றாடாய் பாம்பே"

(ப.சி.பெ.கோ.213)

இவற்றால் சித்தர்கள் சுட்டிக்காட்டும் உவமைகளை அறிந்திடலாம். அவர்கள் உவமைகளைப் பயன்படுத்திக் கருத்துகளை விளக்கிச் செல்லும் பாங்கினை அறியமுடிகிறது.

சித்தர் பாடல்களில் கூறப்பெறும் கருத்துகள் வெளிப்படையாகத் தெரிவதுபோல் இருப்பினும் உட்பொருளின் தன்மைகள் எளிதாக அறிந்து கொள்ள இயலாதவாறு அமைந்துள்ளன. அவர்கள் பாடல்களில் குழூஉக் குறியாட்சியைக் காணலாம் என்பர்[93]

"வெங்காய முண்டு மிளகுண்டு சுக்குண்டு
உங்காய மேறுக்கடி - குதம்பாய்
உங்கான மேறுக்கடி" (ப.சி.பெ.கோ.254)

"காக்கை யிருக்குது கொம்பிலே தாக்கத
சாவலிருக்குது தெம்பிலேதான்
பார்க்க வெகுதூ ரமில்லை மிகுதூரமம்
பார்த்தால் தெரியுமே வாலைப்பெண்ணே"
(ப.சி.பெ.கோ.331)

"வடக்குங் கிழக்குமாக நூலை யிழைப்போம்
மற்றுங் கழலிலே பாவு பூட்டுவோம்
நடக்கும் வழியிலே யுண்டை சேர்ப்போம்
நடவா வழியிலே புடவை நெய்வோம்
ஆடக்குக் கரையிலே கோலைப்போடுவோம்
கொய்ததை யெங்குமே விற்று விடுவோம்
அடக்கியே யேகத்துள்ளே வைக்கவும் வல்லோம்
ஆதிபதங்கண்டோமென் றாடாய் பாம்பே"
(ப.சி.பெ.கோ.219)

மேற்குறித்த பாடல்களின் உட்பொருளை எளிதாக அறிய முடியாதவாறு குறிப்பு மொழியாகவும் குழூஉக் குறியாகவும் அவர்கள் பாடியிருப்பதை அறிய முடிகிறது.

சித்தர் பாடல்களுக்கு இதுவரை எவராலும் உரை எழுதப்பட வில்லை.

"பேராசிரியர் ந.மு.வெங்கடசாமி ஐயா அவர்களைத் தமிழன்பர்சிலர், சித்தர் பாடல்களுக்கு உரை எழுதித்தருமாறு வேண்டினர் என்றும் 'அந்தப் பணி மிகவும் அரியது, அருள் உணர்வும் தெய்வ ஆற்றலும் உடையவரால் மட்டுமே அப்பணி கைகூடும்' என்று கூறி மறுத்துவிட்டார் என்று கூறுகின்றனர்."[94]

என மு.வை.அரவிந்தன் குறிப்பிடுவதிலிருந்து சித்தரிலக்கியம் உரை எழுதப் பெற முடியாத பொருளது என்பதும், உரை எழுதுவோர் அறிவினை நூல் படைத்தாரின் அருளை ஆய்வது மேலானது என்பதும் புலனாகிறது.

05.02.86 ஆம் நாள் சென்னை வந்த போப் ஆண்டவர், கடற்கரையில் தமிழ் மக்கள் வியக்கும் வண்ணம் தமிழில் பேசியதோடு, தம் பேச்சின் நடுவில்

"ஒன்றென் றிருதெய்வம் உண்டென் றிருஉயர் செல்வமெல்லாம்
அன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல்லறமு நட்பும்
நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்டபடி
என்றென் றிருமன மேஉனக் கேஉப தேசமிதே"

(ப.சி.பெ.கோ 108) எனும் பட்டினத்தார் பாடலை முழுமையாகத் தமிழில் பாடினார்.[95]

சித்தர்களின் பாடல்கள் தமிழ்நாட்டுக்குமட்டுமன்று, இந்தியத் துணைக்கண்டத்திற்கு மட்டுமன்று, உலகுக்கும் வழிகாட்டக்கூடிய தகுதி உடையதாக அமைந்துள்ளன என்பதை உணர முடிகிறது.

சித்தர் பாடல்கள் கற்றோர்க்கு மட்டுமே அறிய இயலும் கடின நடையில் அமையாமல், பாமரர்களும் அறிந்து கொள்ளும் வகையில் எளிய நடையில், பேச்சுவழக்குச் சொற்களைக் கொண்டு நாட்டுப்புறப்பாடற் சந்த அமைப்பில் அமைந்து மக்கள் இலக்கியமாகத் திகழ்கின்றன.

## 1.6 இன்றைய நிலையில் சித்தர்கள்

சென்ற நூற்றாண்டில் வடலூரில் தோன்றிய இராமலிங்க அடிகளார் ஞானமரபின் இறுதியாக வாழ்ந்து மறைந்த சித்தர் என்று பலரும் கருதுகின்றனர். அவர்தம் 'சத்திய ஞானசாரம்'-என்ற உரைநடைப்-பகுதியில் இதுவரையில் கர்மசித்தருடைய காலம் என்றும் இனிவரப்போவது ஞானசித்தர் காலம் என்றும் குறிப்பிடுகின்றார்.[96] அங்ஙனமாயின் இக்காலம் ஞானசித்தர் காலம் என்பதாகும்.

திருச்சிராப்பள்ளி மாவட்டம் துறையூர் நகரில் 'ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்கச்சங்கம்' என்ற நிறுவனத்தை அமைத்து, 17.09.76 முதல் துறவறநெறியை மேற்கொண்டு தவவாழ்க்கை வாழ்ந்து வருபவர் தவத்திரு.ரெங்கராஜதேசிக சுவாமிகள். அடிகளார் அவர்கள் சன்மார்க்க சங்கத்தின் மூலம் சித்தர்களை வணங்கியும், மற்றையோரை வணங்கச் செய்தும் சித்தர் வழிபாட்டு நெறியை மேற்கொண்டிருப்பது பெருமையுடன் சுட்டத்தக்கது.

அடிகளார் அவர்கள், மக்கள் தொண்டையே மகேசன் தொண்டாகக் கொண்டு மக்களுக்குக் குடிநீர் வழங்கியும், அன்னதானம் செய்தும் இலவசத் திருமணங்கள் நடத்தி வைத்தும், அருட்சொற்பொழிவு ஆற்றியும் இக்கால வள்ளலாராகத் திகழ்கின்றார்.

ஓங்காரக்குடில் அமைத்து அகத்தியர் முதலிய ஞானியர்களை வணங்கச் செய்யும் மக்களுக்கு வழிகாட்டியும் தொண்டாற்றி வருகின்றார். மலேசியா, சிங்கப்பூர், புருனே மற்றும் இலங்கை போன்ற நாட்டினரும் துறையூர் வந்து சித்தர் பாடல்களின் உண்மைப்பொருள்களைக் கேட்டுத் தெரிந்து தெளிந்து மகிழ்கின்றனர். அனைத்து ஞான நூல்களுக்கு உரையும் விளக்கமும் தெளிவாக விளக்கியுரைக்கின்றார். அடிகளார் அவர்கள் பள்ளி சென்று கல்வி பயிலாது இறையருளால் அருட்கல்வி பெற்று ஞானம் எய்தியவர் என்பது இங்குச் சுட்டத்தக்கது.

ஆண்டுதோறும் சித்திரைத்திங்கள் முழு நிலவு நாளில் சித்தர்களுக்குச் சிறப்புப் பூசை செய்து, உண்மை ஞானத்தை உலகுக்கு காட்டி வருகின்றார். ஆன்மீக மறுமலர்ச்சியை உருவாக்கி வருகின்றார்.

அவரின் அருள்வலியால் இன்னும் பற்பல நல்லவை நிகழும் எனப் பல ஞானியரும் நாடி சோதிடம் எனும் சுவடியின் வழியாகப் போற்றிப் புகழ்ந்துரைக்கின்றனர்.

குடத்துள் விளக்காய்த் தவமியற்றும் இச்சித்தர் நாளைக் குன்றின் மேலிட்ட விளக்கெனத் திகழ்வதை உலகம் கண்டு மகிழும் என நம்பலாம்.

## தொகுப்புரை

இதுகாறும் ஆராய்ந்தவற்றால் கீழ்க்கண்ட முடிவுகள் கிடைக்கப் பெற்றன.

'சித்து' எனும் சொல் மூதறிவுடைமையையும், மெய்யுணர்வு-டைமையையும் குறிக்கும் எனக்கொள்ளலாம்.

'சித்தர்' எனும் சொல் அறிவர், நிறைமொழி மாந்தர், மெய்யுணர்வினையுடைய முதறிவு பெற்றோர், சோதிநிலையினையுடையோர் ஆகிய பொருள்களை வழங்கும்.

சித்தர்கள் பழங்காலத்திலிருந்தே வாழ்ந்து வருகின்றனர்.

சித்தர்கள் பலராவர். அவர்களைப் பதினெண்சித்தர்கள் என, தொகைப்படுத்திப்போற்றி வருகின்றனர்.

அவர்களின் செயல்களினால் இயற்பெயர்கள் மறைந்து விட்டன. சிறப்புப் பெயர்கள் அவர்களின் இயற்பெயர்கள்போல் நிலைத்து விட்டன.

சித்தர் பாடல்கள் கிடைக்கப்பெறினும் அவர்களைப் பற்றிய ஆதாரப்பூர்வமான, தெளிந்த வரலாற்றுக் குறிப்புகள் கிடைத்தில, அவர்கள் பாடல்களில் அவர்கள் வாழ்க்கை பற்றிய செய்திகள் இடம் பெறவில்லை.

அவர்கள் பல்வேறு இடங்களுக்குச் சென்று வந்ததாக, செவிவழிச் செய்திகள் மக்களிடையே வழக்கில் உள்ளன. அவர்கள் உறைந்த இடங்களும், தவமியற்றிய இடங்களும் சிறப்புப் பெற்றிருக்கின்றன. அவர்களைக் குறிப்பால் உணர்த்தும் ஊர்ப்பெயர்கள் இன்றும் தமிழ்நாட்டில் உள்ளன.

சித்தர்கள் வாழ்ந்த காலங்களை அறுதியிட்டுக்கூற, போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. ஆயினும், கிடைக்கப்பெற்ற சான்றுகளைக் கொண்டு சிலர் காலங்களை வரையறுக்கலாம்.

அகத்தியர், இடைக்காடர், கருவூரார், கொங்கணர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார் ஆகியோர் வாழ்ந்த காலங்கள் தெரிய வருகின்றன.

அகப்பேய்ச்சித்தர், அழுகணிச்சித்தர், உரோமரிஷி, கடுவெளிச்சித்தர், காகபுசுண்டர், குதம்பைச்சித்தர், சட்டைமுனிவர், பாம்பாட்டிச்சித்தர், மதுரைவாலைசாமி, பெயர் அறிய இயலாத சித்தர் ஒருவர் ஆகியோர் வாழ்ந்த காலங்கள் அறிய முடியவில்லை.

சிவானந்த போதம் என்னும் நூல் எழுதிய சித்தர் பெயர் தெரியவில்லை. ஆயினும் அவர் பாடலில் வரும் தொடரைக்கொண்டு அவருக்குச் 'சிவகந்தரனார்' என்னும் பெயரிட்டு வழங்குதல் பொருத்தமாகும்.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்தொடங்கி இன்றுவரை அவர்கள் குரு-சீடர் மரபில் வாழ்ந்து வருகின்றனர்.

அவர்கள் இயற்றிய பாடல்கள் முறையாகத் தொகுத்து, பதிப்பிக்கப் பெறவில்லை. வெளிவந்துள்ள பதிப்புகளிலும் பாடல்களில் பிழைகள் மலிந்துள்ளன.

வழிகாட்டல், வேறுபாடு கருதாமை, ஞானநிலை அடைதல், மரணமிலாப் பெருவாழ்வு எய்துதல் ஆகியன சித்தர்களின் குறிக்கோள்களாகும்.

அவர்கள் சாகாதவர்கள்; அல்லல்களை அகற்றும் ஆற்றல் பெற்றவர்கள். அவர்கள் பெருமைகளைச் சித்தர்களும் பிற சான்றோர்களும் போற்றுகின்றனர்.

அவர்களின் பாடல்கள் கற்றோர்க்கே அன்றி கல்லாதார்க்கும் பயனளிக்க வல்லவை. அவை எளிய நடையில் நாட்டுப்புறப்பாடற் சந்த அமைப்பில் உள்ளன. உவமைகள், குழூஉக்குறி ஆகிய உத்திகள் அவற்றில் கையாளப்பட்டுள்ளன.

இன்றைய நிலையில் உறையூர் நகரில் வசித்து வரும் துறவியார், தவத்திரு. ரெங்கராஜ தேசிக சுவாமிகள் சித்தர் மரபில் தவமியற்றி வருகிறார்.

## சான்றென் விளக்கம்


1. கதிரைவேற்பிள்ளை, நா., *தமிழ்மொழியகராதி* ப. 630
2. ஜெயமதி சாமசுப்பிரமணி, க., *சித்தர்களும் சமூகப் பார்வையும்* ப. 1
3. *திருக்குறள்* கடவுள் வாழ்த்து. 2
4. பரிமேலழகர், (உ.ஆ.) *திருக்குறள்* ப. 20
5. *தொல்காப்பியம்*, நூற்பா 480
6. *திருக்குறள்*, நீத்தார் பெருமை. 28
7. மாணிக்கவாசகம், இரா., *திருமந்திர ஆராய்ச்சி* ப. 38
8. *திருக்குறள்*, தவம். 269
9. பரிமேலழகர், (உ.ஆ.) *திருக்குறள்* ப. 110
10. கதிரைவேற்பிள்ளை, நா., *தமிழ்மொழியகராதி* ப. 626
11. அடியார்க்கு நல்லார், (உ.ஆ.) *சிலப்பதிகாரம்* பக். 280 281
12. குமரகுருபர அடிகள், *மதுரைக் கலம்பகம்* பக். 74 75
13. இராமலிங்கசுவாமிகள், *திருவருட்பா (ஆறாந்திருமுறை)* ப. 321
14. திருமூலர், *திருமந்திரம்* 2526 ப. 392
15. *கலைக்களஞ்சியம்*, தொகுதி நான்கு ப. 643
16. ஆய்வாளருக்கு தவத்திரு.ரெங்கராஜ தேசிக சுவாமிகள் அளித்த பேட்டி - நாள்.22.10.90. இடம்: ஓங்காரக்குடில், துறையூர்.

| | | | |
|---|---|---|---|
| 17. | ஸ்ரீரங்கம் சித்தர், | வாழ்வின் திறவுகோல் | ப. 17 |
| 18. | சிதம்பரனார், சாமி., | சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம். | ப. 155 |
| 19. | சிதம்பரனார், சாமி., | சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம். | ப. 21 |
| 20. | வேங்கடசுப்ரமணியன், சி., | சித்தர்கள் கண்ட இறைமை (முன்னுரை) | ப. இ. |
| 21. | இளங்குமரன், இரா., | சித்தர் பாடல்கள் - சிவவாக்கியர் | ப. 3 |
| 22. | விமலானந்தம், மது.ச., | தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் | ப. 307 |
| 23. | விசுவநாதம், கி.ஆ.பெ., | வாழ்வின் திறவுகோல் (முன்னுரை) | ப. 1 |
| 24. | கணேசன், பி.சி., | சித்தர்கள் கண்ட தத்துவங்கள் | ப. 6 |
| 25. | கணேசன், பி.சி., | சித்தர்கள் கண்ட தத்துவங்கள் | ப. 11 |
| 26. | வலம்புரிஜான், | சித்தர்களின் ஞானப் பாடல்கள் (அணிந்துரை) | ப. V |
| 27. | நாராயணன், கா., | சித்தர் தத்துவம் | ப. 31 |
| 28. | பசுபதி, கே.ஆர்., | சித்தர்கள் | ப. 3 |
| 29. | தொல்காப்பியம் | நூற்பா 75 | |
| 30. | நச்சினார்க்கினியர், (உ.ஆ.) | தொல்காப்பியம் | ப. 217 |

31. நச்சினார்க்கினியர், (உ.ஆ) — _தொல்காப்பியம்_ — ப. 218

32. _தொல்காப்பியம்,_ — நூற்பா 480

33. _குறுந்தொகை,_ — பாடல் 130

34. _புறநானூறு,_ — பாடல் 43

35. அரவிந்தன்.மு.வை. — _சித்தர்கள் ஓர் அறிமுகம்_ — ப.xiii

36. மெய்யப்பன்.ச., — _சித்தர்கள் ஓர் அறிமுகம்_ — ப.iii

37. தவத்திரு. ரெங்கராஜ தேசிகசுவாமிகள், — _சித்தர்கள் போற்றித் தொகுப்பும் அகத்தியர் தத்துவப் புகழுரையும்_ — ப.16

38. இளங்குமரன்,இரா., — _சித்தர் பாடல்கள்-சிவவாக்கியர்_ — ப. 5

39. சிதம்பரனர்,சாமி., — _சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் - தத்துவம்_ — ப.24

40. தரிக்கனதாஸ்., — _பதினெண் சித்தர்கள் இயற்றிய நாடி சாஸ்திரம்_ — ப. 7

41. இராமநாதன்.அரு., (ப.ஆ) — _சித்தர் பெரிய ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள்_ — ப. 3

42. பசுபதி.கே.ஆர்., — _சித்தர்கள்_ — ப.12

43. யோகேஜமித்ரா, — _சித்தர்களின் சிறந்த மந்தரங்கள்_ — ப.19

44. நாராயணன், க., — _சித்தர் தத்துவம்_ — ப.41

| | | |
|---|---|---|
| 45. ரெங்கராஜு.பி., (ப.ஆ) | சித்தர்கள் அருளிய ஞானநூல் | ப.138 |
| 46. ஜெகவீரபாண்டியனார், | அகத்திய முனிவர் | ப. 81 |
| 47. சிங்காரவேல் முதலியார், ஆ., | அபிதான சிந்தாமணி | பக். 1, 2, 3, 4, 5 |
| 48. " | " | பக். 5, 6 |
| 49. சிதம்பரனார். சாமி., | சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம் | ப. 100 |
| 50. சிங்காரவேல் முதலியார், ஆ., | அபிதான சிந்தாமணி | பக். 1499, 150 |
| 51. இராமநாதன். அரு., (ப.ஆ) | சித்தர் பெரிய ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் | ப. 15 |
| 52. சிங்காரவேல் முதலியார். ஆ., | அபிதான சிந்தாமணி | ப. 255 |
| 53. " | " | ப. 321 |
| 54. " | " | பக். 360, 361 |
| 55. இராமநாதன், அரு., | சித்தர் பெரிய ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் | ப. 24 |
| 56. சிங்காரவேல் முதலியார், ஆ., | அபிதான சிந்தாமணி | ப. 470 |
| 57. சிங்காரவேல் முதலியார், ஆ., | அபிதான சிந்தாமணி | ப. 505 |
| 58. இராமநாதன், அரு., (ப.ஆ) | சித்தர் பெரிய ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் | ப. 18 |

| | | |
|---|---|---|
| 59. மெய்யப்பன், ச., (ப.ஆ) | சித்தர் பாடல்கள் | ப. 29 |
| 60. சிங்காரவேலு முதலியார், ஆ., | அபிதான சிந்தாமணி | ப.665 |
| 61. பாண்டியன், கி., | சித்தர் சிவவாக்கியர் பாடல்கள் - ஓர் ஆய்வு | ப. 34 |
| 62. சிங்காரவேல் முதலியார், ஆ., | அபிதான சிந்தாமணி | ப.1017 |
| 63. " | " | ப.1024 |
| 64. " | " | ப.1081 |
| 65. இளங்குமரன், இரா., | சித்தர்கள் ஓர் அறிமுகம் | ப. xivii |
| 66. சிதம்பரனார், சாமி., | சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம் | ப. 48 |
| 67. கணேசன், பி.சி., | சித்தர்கள் கண்ட தத்துவங்கள் | ப. 66 |
| 68. வாழ்வியற்களஞ்சியம், | தொகுதி எட்டு | ப.905 |
| 69. மதியழகன்.மா., | 20வது கருத்தரங்க ஆய்வுக் கோவை. தொகுதி.3. | ப.482 |
| 70. முருகவேள், ந.ரா., | ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டு மலர். | ப.113 |
| 71. இளங்குமரன்.இரா., | சித்தர் பாடல்கள் சிவவாக்கியர் | ப. 4 |

| | | |
|---|---|---|
| 72. கணேசன், பி.சி., | சித்தர்கள் கண்ட தத்துவங்கள் | ப. 5 |
| 73. வேலுச்சாமி, கி., | திருமந்திரம் ஒரு திறனாய்வு | ப. 99 |
| 74. மாடசாமி, ச., | பாம்பாட்டிச்சித்தர் | பக். 13, 14 |
| 75. வளர்மதி, | சித்தர் பாடல்கள் (பதிப்புரை) | ப.இ. |
| 76. விமலானந்தம், மது.ச., | தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் (முதல்) | ப.309 |
| 77. ஜெயா, பி., | ஏழாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை (தொகுதி ஒன்று) | ப.220 |
| 78. மாணிக்கவாசகம், இரா., | சித்தர் தத்துவம் (அணிந்துரை) | ப. 11 |
| 79. ஆறுமுகசாமி ரெட்டியார், அ.வெ.ர., | சித்தர்கள் (பதிப்புரை) | ப.இ. |
| 80. தண்டபாணிதேசிகர், ச., | ஞானக்கனல் (அணிந்துரை) | ப. viii |
| 81. திருநாவுக்கரசு, க.த., | இரண்டாவது உலகத்தமிழ் மாநாட்டு மலர் (பம்பாய்) | ப. 13 |
| 82. தெய்வநாயகம், சி.ஜோ., | சித்தர் சிந்தனைகள். | ப.34 |
| 83. சோமு, மீ.ப., | சித்தர் இலக்கியம் (முதல் பகுதி) | ப.62 |
| 84. மாடசாமி, ச., | பாம்பாட்டிச்சித்தர் | ப. 5 |

| | | |
|---|---|---|
| 85. நாராயணன், க., | சித்தர் தத்துவம் | ப.186 |
| 86. பசுபதி, கே.ஆர்., | சித்தர்கள் | ப. 5 |
| 87. நாராயணன், க., | சித்தர் தத்துவம் | ப.188 |
| 88. இளமதி சானகிராமன், க., | சித்தர்களின் சிந்தனைகள் | ப. 98 |
| 89. குன்றக்குடி அடிகளார், | ஞானக்கனல் (அணிந்துரை) | ப. V |
| 90. அரவிந்தன், மு.வை., | சித்தர்கள் ஓர் அறிமுகம் | ப. VIII |
| 91. பாண்டியன், கி., | சித்தர் சிவவாக்கியர் பாடல்கள் - ஓர் ஆய்வு | ப. 36 |
| 92. சோமு, மீ.ப., | சித்தர் இலக்கியம் (முதல் பகுதி) | ப. 9 |
| 93. மாணிக்கவாசகம், இரா, | ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டு மலர் | ப.274 |
| 94. அரவிந்தன், மு.வை., | சித்தர்கள் ஓர் அறிமுகம் | ப. XXVI |
| 95. " | " | ப. Xiii |
| 96. இராமலிங்க அடிகளார், | திருவருட்பா ஆறாவது திருமுறை | ப.29 |

## இயல் பொருளடக்கம்

## 2.0 முன்னுரை :

சித்தர்களின் பாடல்கள் சமுதாயம் பற்றிய கருத்துகளை உள்ளடக்கியுள்ளன. மக்களின் வாழ்க்கையில் ஏற்படும் பல நிகழ்ச்சிகளை அவை சுட்டிக் காட்டுகின்றன. சித்தர்கள் வாழ்ந்த சமுதாயத்தின் உயர்வு தாழ்வுகளை அவை எடுத்தியம்புகின்றன. மக்களின் வாழ்க்கையோடு தங்களின் ஞான வாழ்க்கையை இணைத்துப் பொருத்திப் பார்த்த பின், அதனால் ஏற்படும் மறுமலர்ச்சி எண்ணங்களைத் தங்கள் பாடல்களில் அவர்கள் வெளிப்படுத்தியுள்ளார்கள். அவர்கள் அக்கால மக்கள் மேற்கொண்ட சில பழக்க வழக்கங்களையும் சுட்டிக்காட்டுவர்.

சித்தர்கள் கூறும் சமுதாயச் செய்திகள் 1.இல்லறம், 2.விருந்தோம்பல், 3.ஊன் உணவு, 4.சாதி-சமய வேறுபாடுகள், 5.பிறப்பும் இறப்பும், 6.ஈகை, 7.பசியாற்றுவித்தல், 8.மயக்க வாழ்வு, 9.மகளிர் நிலை, 10.சித்தரைப் பழித்துரைத்தோர், 11.பிற என பதினோரு பிரிவுகளாகப் பகுக்கப்பெற்று, இவ்வியலில் ஆராயப்பெறுகின்றன.

## 2.1 இல்லறம்

மனித வாழ்வு இல்லறம், துறவறம் என இரு பிரிவுகளாகப் பகுக்கப் பெறுகின்றது. மக்கட் சமுதாயம் இல்லறத்தை மையமாக்கியே பெரிதும் வாழ்கின்றது. மனிதர்கள் இல்லறத்தின் வழி தங்கள் கடமைகளைச் செய்து இன்பம் அடைகின்றனர்.

சித்தர்கள் ஞான வாழ்வை விரும்பியவர்கள். இவர்களின் ஞானப்பாடல்கள் உணர்த்தும் முதன்மைக் கருத்தும் அதுவேயாகும். உலகோர் இல்லறத்தை விடுத்து, பற்றற்ற நிலைக்காக உண்மையை உணராமல் போலியான வாழ்வினை விரும்பி ஏமாற்றம் அடைகின்றனர்.

உலகில் தோன்றிய அனைவரும் பெண்களை விரும்பி வாழ்வது இயல்பாகும். இதனைச் சிவவாக்கியர்

"மாதர்தோள்சே ராததேவர் மாநிலத்தி லில்லையே
மாதர்தோள்பு ணர்ந்தபோது மனிதர்வாழ்வு சிறக்குமே
மாதராகுஞ் சத்தியொன்று மாட்டிக்கொண்ட தாதலால்
மாதராகும் நீலகங்கை மகிழ்ந்துகொண்டான் ஈசனே!"

(ப.சி.பெ.கோ 79) எனும் பாடலின் வாயிலாகப் புலப்படுத்துவார்.

இல்லறம் என்பதே நல்லறமாகும். ஆணும் பெண்ணும் இணைந்து நடத்துகிற கட்டுப்பாடான இல்வாழ்க்கையை மனித சமுதாயம் பெரிதும் விரும்புகிறது. உலகில் மாதர்தோள் சேராதவர்கள் யாருமில்லை. மாதர்தோள் புணர்ந்தபோது மனிதனின் வாழ்வு முழுமையடைகிறது; சிறப்புறுகிறது. ஒரு சிலரே துறவு நெறி ஒழுகி மேன்மையுறுவர். அனைவரும் இல்லறத்திலிருந்து தான் துறவறத்திற்குச் செல்ல வேண்டும் என்பதைச் சிவவாக்கியர் மேற்குறிப்பிட்ட பாடலின் வழி உணர்த்துவர்.

கணவனும் மனைவியும் இல்வாழ்க்கை வாழ்ந்து எல்லா இன்பங்களையும் நுகர்ந்த பிறகே, துறவற வாழ்க்கைக்குச் செல்ல வேண்டும். இத்தகைய நெறியைத் தொல்காப்பியம்

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"[1]

எனும் நற்பாவில் வலியுறுத்துவது இங்குக் கருதத்தக்கது.

இல்லறத்தில் பற்றுக்கொண்டு வாழ்ந்த பின்னரே, துறவு நெறியை ஏற்க இயலும். அதாவது படிப்படியாக பற்றை அகற்ற வேண்டும். இதனைப் புளியம் பழமும் ஓடும் போல் ஒட்டி வாழ்ந்து பின்பு ஒட்டாத நிலையை அடைய வேண்டும் என்று பாம்பாட்டிச் சித்தர் கூறுவார். (ப.சி.பெ.கோ 209)

இல்லறத்தில் பல குழந்தைகளைப் பெற்றுப் பெரும் துன்பத்திற்கு ஆளாகி வருந்தும் மக்களைக் கண்டு, 'புப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்/புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்' (ப.சி.பெ.கோ 115) என பட்டினத்தார் கூறும் பாடல் அக்காலத்திலேயே குடும்பக் கட்டுப்பாட்டு நெறியை அறிவுறுத்துவதாக அமைகிறது. அளவோடு பெற்று வளமோடு வாழ்க என வாழ்த்தும் முறையில் இக்கருத்து அமைந்துள்ளது எனலாம்.

இல்லறமும், துறவறமும் மேற்கொள்ள கூர்த்த மதி வேண்டும். பொருளறியாது மேற்கொள்ளின் இவ்விரண்டும் இருள்தரும். துறவறம்பூண்டு சன்னியாசியாகி இருப்பவர்களில் கூட சிலர் மூடத்தனமாய் இருக்கின்றனர். பெண்ணோடு கூடி வாழ்கின்ற இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருப்போரிலும் சிலர் ஞானியர் ஆகும் தகுதியுடையோராய் இருப்பர். இந்நிலையைச்

'சன்னியாசி யானவருள் மூடருண்டு / சமுசாரஞ் செய்பவருள் ஞானியுண்டு...'.' (ப.சி.பெ.கோ 427) என சிவானந்தபோதம் விளக்கும்.

இல்லறம் சிறந்தது; உயர்வானது. இல்லறத்திலிருந்து தான் துறவறத்திற்குச் செல்லவேண்டும். மாறாக இல்லறத்தை வெறுத்துத் துறவறத்திற்குச் செல்லல் அறியாமையின் பாற்படும் என்பது சித்தர்களின் இல்லறக் கொள்கையாக விளங்குகின்றது.

## 2.2 விருந்தோம்பல்

இல்லறத்தார் விரும்பிப் போற்றுவது விருந்தோம்பல் பண்பாகும் மனித பண்பாடுகளில் மிகச்சிறந்தது விருந்தோம்பலாகும் இல்லறத்தாரின் கடமைகளுள் முதன்மையானதாக இதனைக் கொள்ளலாம்.

இல்லறத்தில் இருந்து விருந்தோம்பல் செய்து, இனிது வாழ்பவரை நாடியே ஈசனும் வந்து அருள்வான் என்பதைச் சிவவாக்கியர்,
'வருவிருந்தோ டுண்டுடுத்தி வளர்மனை சுகிப்பிரேல்/ வருவிருந்தோ னீசனாகி வாழ்வளிக்குஞ் சிவாயமே' (ப.சி.பெ.கோ.80) எனக் குறிப்பிடுவார். விருந்தோம்பி மேன்மையடைவதே இதன் உட்கருத்தாகும்.

இல்லறத்தில் தலையாய கடமை விருந்தோம்பலாகும் என்பதும் விருந்தோம்புவாருக்கு ஈசன் அருள்வான் என்பதும் இதனால் புலப்படுகின்றன.

## 2.3 ஊன் உணவு

மாந்தரின் உணவுப் பழக்கங்களில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ffJei, சைவர், தாவர உணவு உண்பவராகவும், அசைவர் அவற்றுடன் புலால் உணவு உண்பவராகவும், உள்ளனர். ஊன் உணவு உண்ணாதாரை உயர்வாகப் பேசுவதில் சிறப்பில்லை. அவர்கள் புலால் உண்போரை இழிவாகப் பேசாது இருந்தல் சிறப்பாகும்.

இதனை,

"புலால்புலால் புலாலதென்று பேதமைகள் பேசுநீர்
புலாலைவிட்டு வெம்பிரான் பிரிந்திருந்த தெங்ஙனே
புலாலுமாய்ப் பிதற்றுமாய் பெருலாவுந் தாலுமாய்
புலாலிலே முளைத்தெழுந்த பித்தன்காணு மத்தனே"

(ப.சி.பெ.கோ.25) என சிவவாக்கியர் குறிப்பிடுவர்.

மக்களில் சிலர் புலால் உண்பர், சிலர் உண்ணமாட்டார்கள். உண்பதால் தாழ்ச்சியோ உண்ணாததால் உயர்வோ இல்லை. நம் நாட்டில் மக்கள் புலால் உண்ணாதாரை உயர்த்துவர். புலால் உண்ணாதிருப்பதால் மட்டும் இறையுணர்வு கிட்டாது. புலால் உண்ணாமை அறிவுடையதாக இருப்பினும் அது பிறவித்துன்பத்தை நீக்க வல்லதன்று.

இறைவன் புலாலைவிட்டுப் பிரியாதவன், இதே புலால் உடம்புதான் இறைவனை அடைய உதவுகிறது. ஆதலால் புலாலைப்பழிப்பதில் பயனில்லை.

புலால் உண்பதை வைத்து உலகோர் சைவம், அசைவம் எனப் பிரிப்பதைமாற்றி, உணவு உண்பவர் அசைவர் என்றும், உணவு உண்ண வேண்டாத நிலைக்குத் தங்களை உயர்த்திக்கொண்டவரே சைவர் என்றும் உணர்த்துவர் அகப்பேய்ச்சித்தர். இதனை, அவர்

சைவம் மானதடி அகப்பேய்
தானாய் நின்றதடி
சைவமில்லையாகில் அகப்பேய்
சலம்வருங் கண்டாயே

(ப.சி.பெ.கோ.243) எனக் குறிப்பிடுவர்.

உண்ணா நிலையே உயர்நிலை என்பது இதன் கருத்தாகும். உணவு உண்டால் அது மலம், சலம், சுக்கிலம் என மூன்றாகத் தோன்றும். யோகமூான ஒழுக்கத்தில் உயர்ந்தோர் மும்மலமற்று, பசி என்னும் தீப்பிணி தீண்டாத பெரும்பேறு எய்துவர். பசியைப் போக்க வேண்டி உணவு உண்ணும் நிலையில் உள்ள தன்மை அசைவம் என்றும்; உணவு உண்ணாத நிலையில் உள்ள தன்மை சைவம் என்றும் கொள்ளப்படும்.

## 2.4 சாதி சமய வேறுபாடு

எல்லா மக்களும் ஓரினம், எல்லோரும் ஒரே குலம். இவ்வுண்மையை மறந்ததால் சமுதாயத்தில் சாதி, சமய வேறுபாடுகள் தலைவிரித்தாடுகின்றன. சித்தர்கள் தாம் வாழ்ந்த காலத்தில் நிலவிய சாதி, சமய வேறுபாடுகளைக் குறிப்பிட்டு அவற்றைக் கடிந்துரைக்கின்றனர்.

பெண்கள் தங்கத்தில் பல அணிகலன்கள் செய்து அணிந்து கொள்கின்றனர். வாளி, காரை, கம்பி, பாடகம் போன்றவை எல்லாம் தங்கத்தில் செய்யப்பட்டவை. ஆனால் அவற்றின் உருவங்கள் வெவ்வேறாக உள்ளன. அதுபோன்றே மக்களும் ஒரே மனித இனத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால், நிறம், தோற்றம் முதலியவைதாம் வேறாகும். ஆதலால் மக்களுக்குள் வேறுபாடுகளில்லை. அவர்களுக்குள் உயர்வு தாழ்வுகள் இல்லை; சாதி வேறுபாடுகள் இல்லை. இதனைச் சிவவாக்கியர், 'சாதிபேத மென்பதொன்று சற்றுமில்லை யில்லையே' (ப.சி.பெ.கோ.35) எனக்கூறுவதால் அறியலாம்.

பறைச்சி, பார்ப்பனத்தி இவர்களின் உடல், தோல், எலும்பு களிலும் மற்ற அமைப்புகளிலும் வேறுபாடுகள் இல்லை. பறைச்சி

பனத்தி இருவர்களின் புணர்ச்சியிலும் வேறுபாடுகள் இல்லை. ஆகவே இவர்களுக்குள் உயர்வு தாழ்வோ, சாதி வேற்றுமையோ இல்லை இவ்வுண்மையைச் சிவவாக்கியர்,

பறைச்சியாவ தேதடா பனத்தியாவ தேதடா
இறைச்சிதோ லெலும்பிலு மிலக்கமிட் டிருக்குதோ
பறைச்சிபோகம் வேறதோ பனத்திபோகம் வேறதோ
பறைச்சியும் பனத்தியும் பகுத்து பாரு மும்முளே

(ப.சி.பெ.கோ.9) என விளக்குவார்.

விலங்கினங்களில் எருமையும் பசுவும் ஒன்றையொன்று புணர்ந்து கொள்ளாது. அப்படியே புணரின் புது விதமாய் உருத்தாங்கிய விலங்கு பிறக்கும். ஆனால், ஒரு பார்ப்பனனும் ஒரு புலைச்சியும் புணர்ந்திட்டால் பேதமில்லாத இனமான மனித உருவம் தாங்கிக் குழவி பிறக்கிறது. (ப.சி.பெ.கோ.71) ஆதலால், இப்புணர்ச்சி ஒரு மனித இனப்புணர்ச்சி இதில் உயர்வு, தாழ்வு இல்லை. இதையுணராது மக்கள் சாதிவேறுபாடு காட்டி இழிவு செய்வதை சிவவாக்கியர் கண்டிப்பர்.

சாதிவேறுபாடுகள் பேசுவது அறியாமையாகும். இதனைச் சாதியே தங்கள் தமையறிய மாட்டாமல்/வாதனையால் நின்று மயங்கினேன் பூரணமே' (ப.சி.பெ.கோ.150) என பட்டினத்தார் தெரிவிப்பர்.

கபிலர் எழுதிய ஞானநூலை மெய்ப்படுத்து, அதில் கூறப்பெற்றுள்ள சாதியற்ற தன்மையைப் பாராட்டி, அந்நெறிப்படி ஞானவழியிற் சென்று உய்வது எந்தக்காலமோ என வருந்துவது போன்று மக்களுக்குச் சாதி வேறுபாடற்ற நிலையைப் பத்திரகிரியார் உணர்த்துவர் (ப.சி.பெ. கோ.183).

சிவானந்த போதம் என்னும் நூல் சாதி என்பதற்குப் புதிய விளக்கத்தை தருகிறது.

"சாதி பேதந் தனைக்குறித்துத் தயங்கி மயங்கித் தளராதே
சாதி யாவதெவரறிவர் சருவ பூதமொன் றாச்சே
சாதி யாவரெவ ரென்னில் தன்னை யறிந்து சிவமான
சாதி பெரிய சாதியென்று சாற்றும் மறைகள் சத்தியமே"

(ப.சி.பெ.கோ.420) தன்னையறிவதும் சிவமாவதும் தான் பெரிய சாதி எனலாம். அரிய செயலே பெரிய சாதனையாகும் 'சாதித்தல்' என்னும் சொல்லின் அடியாக 'சாதி' என்னும் சொல் தோன்றியதாகக் கருதலாம்.

சாதி, குலம் என்பதெல்லாம் சித்தர்களுக்கு இல்லை. சித்தர்களின் குலம் 'சுக்கிலம்' என்று கூறுவர் காகபுசுண்டர், சாதி பேதம் பேசுபவன் உலகில் விரைவில் சுருண்டுபோவான் என்று அவர் மேலும் எச்சரிக்கை செய்வர். இதனை அவர்

"காணப்பா சாதிகுலம் எங்கட் கில்லை
கருத்துடனே என்குலஞ்சுக் கிலந்தான் மைந்தா
தோணப்பா தோணாமற் சாதி பேதஞ்
சொல்லுவான் சுருக்கமாச் சுருண்டு போவான்"

(ப.சி.பெ.கோ.779) என உரைப்பதால் அறியலாம்.

சாதிப்பெருமைப் பாம்பாட்டிச்சித்தர் வெறுத்தார். அவர் 'சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்' (ப.சி.பெ.கோ.218) என முழங்குவார்.

அமைதிக்கு வழி சாதி உணர்வு நீங்கி வாழ்தலாகும். சித்தர்கள் சாதியைக் கண்டித்தவர் என்பதை 'பிறக்கும் குலத்தை வைத்து ஒருவனுக்கு எவ்விதப் பெருமையும் இல்லை என்பது சித்தர்களின் வாக்காகும்'[2] என்னும் கூற்று மேலும் தெளிவாக்கும்.

சாதிப்பிரிவு போன்று மக்களைப் பெரிதும் வேறுபடுத்தியது சமயக்காழ்ப்புணர்ச்சியாகும். சமய வேறுபாட்டால் மக்கள் பிரிந்து வேதனை அடைகின்றார்கள். சமயத்தின் பெயரால் மக்களுக்குள் வேறுபாடு உண்டாகி சமுதாயம் சீரழிவதை இன்றும் காண முடிகிறது. இறைவன் ஒருவனே என்பதை உணர வேண்டும் என்பதை சிவவாக்கியர், '...ஏளிலேறு மீசனு மியங்குசக்கரதரனையும்/ வேறுவேறு பேசுவோர் வீழ்வர்வீணரகிலே' (ப.சி.பெ.கோ.12) எனக் குறிப்பிடுவார்.

சாதியும் சமயமும் ஒருவருக்குத் தனிச்சிறப்பைத் தரவில்லை என்பதைச் சித்தர்கள் வெளிப்படுத்துவர். அக்காலத்திலே இக்கருத்தை சித்தர்கள் அஞ்சாது கூறியுள்ளனர் எனப் போற்றுவர்[3].

சாதிகளையும் சமயங்களையும் சுட்டி உண்மையை வெளியிட அன்று சித்தர்கள் பெற்றிருந்த துணிவு உயர்ந்தது எனக் கருதலாம்.

சித்தர்கள் தங்கள் பாடல்களில் சாதிவேற்றுமையைப் பலவாறாகக் கடிந்து பாடியிருக்கின்றனர். அவர்கள் அன்பு வழிப்பட்டவர்கள்; ஆகவே, அவர்கள் பிரிவு நிலையை வரவேற்பதில்லை. ஆயினும் அவர்கள் பிழை செய்வோரைத் திருத்த அறிவுரை கூறுகின்றனர்.

மாந்தரினம் அனைத்தும் ஒரே இனமாகவும் ஒரே சாதியாகவும் வாழ வேண்டும் என்பதும்; உயர்வு தாழ்வுகள் உருவாக்கப்படலாகாது என்பதும் சித்தர்களின் கருத்துகளாகும்.

## 2.5 பிறப்பும் இறப்பும்

மனிதன் பிறப்பதும் இறப்பதும் நடப்பியலாகும். பிறப்பு முதல் இறப்பு வரை மனிதன் படும் இன்பதுன்பங்கள் எண்ணற்றவை. துன்பம் அடையும்போது வருந்துவதும் இன்பங்கொள்ளும் நிலையில் மகிழ்வதும் இயற்கையாகிறது. மனிதன் இன்பத்தையே பெரிதும் விரும்புகிறான். அவன் வாழ்வின் முடிவில் இறக்கின்றான். பிறப்பும், இறப்பும் தொடர்வதை உணர்கின்றான். இறவாமல் இருக்க வேண்டும் என்றும்; இறவாதிருக்க வழிஉண்டா என்றும் அவன் எண்ணுகின்றான். இறுதியில் இறப்பு தவிர்க்க முடியாததொன்று எனும் முடிவுக்கு அவன் வருகிறான்.

சித்தர்கள் இறப்பை நீக்க முடியும் என்கின்றனர். இறப்பை நீக்க துணைபுரிவன யோக ஞான நெறியாகும். இந்நெறியில் மரண மிலாப் பெருவாழ்வு கிடைக்கப்பெற்று, இறைத் தன்மை அடைகின்றான் என சித்தர்கள் சுட்டுகின்றனர். உடல் உயிர் பிரியாமல் இரண்டையும் இணைத்துச் சேர்த்து சோதிவடிவமாக்கி என்றும் வாழலாம் என்ற உண்மையை அவர்கள் உணர்த்துகின்றனர். இதை உணராமல் இறப்பவரைக் கண்டு சிவவாக்கியர், 'நடுவன்வந் தழைத்தபோது நாறுமிந்த நல்லுடல்/ சுடலைமட்டுங் கொண்டு போய்த் தோட்டிகைக் கொடுப்பரே' (ப.சி.பெ.கோ.4) என்றும் 'மூலமேந் தழைத்தபோது வந்தவை லாகுமோ' (ப.சி.பெ.கோ.15) என்றும் 'ஓடிவந்து காலனார் சடுதியாக மோதவே/உடல்கிடந்து பிரிகின்ற வுண்மைகண்டு முணர்கிலீர்' (ப.சி.பெ.கோ.16) என்றும் கூறுவன சிந்திக்கத்தக்கவை.

இறப்பு முடிந்த பின், மீண்டும் பிறப்பு உண்டு என்பதைப் பட்டினத்தார், 'இன்ன மெத்தனை யெத்தனை சன்மமோ...' (ப.சி.பெ.கோ 99) என உணர்த்துவார்.

மனிதன் பல பிறப்புகள் பிறக்கின்றான் என்பது சித்தர்களின் நம்பிக்கை. அவர்கள் இறவா நிலையை அடைய வேண்டும் என்பது சித்தர்களின் நோக்கமாகும். இதைய யாது மக்கள் செய்யும் செய்கையை, 'செத்துக் கிடக்கும் பிணத்தரு கேயினிச் சாம்பிணங்கள்/ கத்துங் கணக்கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே' (ப.சி.பெ. கோ 103) என பட்டினத்தார் இழித்துரைப்பர்.

இறையுணர்வு பெற்றுத் துறவு மேற்கொண்டு, ஞானத்தைக் கைக்கொண்டு இறவா நிலையை அடைய முற்பட வேண்டும் என்பதை, 'கண்ணுக்குக் கண்ணெதிரே கட்டையில்வே கக்கண்டும்' (ப.சி.பெ. கோ 126) என பட்டினத்தாரும், 'பிணக்கோலங் கண்டுபின்னுந் துறவா விட்டால்/ பிறப்புக்கே துணையாமென் றாடாய் பாம்பே' (ப.சி.பெ.கோ 214) என பாம்பாட்டிச் சித்தரும் கூறி நல்லுணர்வைத் தூண்டுவர்.

பிறப்பும் இறப்பும் தொடர் நிகழ்ச்சிகளாகின்றன. பேதைமையால் பிறக்கின்றார்கள் பின்பு, இறக்கின்றார்கள். காவடிபோல் இரண்டு பக்கமும் பிறப்பும் இறப்பும் உள்ளன என்னும் உலக உண்மையை, 'தயங்கிலா JJ/T ருலகத்திற் கோடி பேர்கள்/சாவதும் பிறப்பதுங்கா வடிபோ லாச்சு' (ப.சி.பெ.கோ 702) என சட்டைநாதர் உரைப்பர். மேலும் அவர், 'மருளாம லிருக்கவல்லோ வாதத் சொன்னார்/மாண்டிறந்து மாண்டிறந்து பிறக்கை நன்றோ...' (ப.சி.பெ.கோ 729) என்னும் அடிகளில் மரணமிலாப் பெருவாழ்வு என்னும் உண்மையை உணர்த்துவதற்காகவே இறப்பு, பிறப்பு பற்றி விளக்குவர்.

சித்தர்கள், இறத்தல் கூடாது என்று அழுத்தமுறத் தெரிவிப்பர். காலத்தை வெல்ல வேண்டும் என்று சட்டைமுனிவர் கூறுவர்.

பிறப்பும் இறப்பும் இயற்கை நிகழ்ச்சிகள் என்பதும் யோக நெறியால் அவற்றைத்தவிர்க்க இயலும் என்பதும் அந்நிலை உயர்வானது என்பதும் சித்தர்கள் கருத்துகளாகும்.

2.6 ஈகை

தமிழிலக்கியங்கள் ஈகை என்னும் உயர் பண்பினைப் பெரிதும் பாராட்டுகின்றன. மனிதன் பெற்றிருக்கின்ற நற்குணங்களுள் புகழ் நிலைக்குரியது ஈகைக்குணமுமாகும். இருப்போர் இல்லார்க்கு வழங்குவது ஈகையாகும். வள்ளல் தன்மையை ஒருவருக்கு ஈட்டித்தருவது இதுவே. இவ்வுயரிய பண்பினைச் சித்தர் பாடல்கள் வெளிப்படுத்திக் காட்டுகின்றன.

சித்தர்களின் சிந்தனையில் ஈகை என்னும் அறம் முதன்மையாய் விளக்கம் பெற்றுள்ளது. தான தருமம் என வழக்கமாகிவிட்ட இச்செய்கை நடைமுறையில் பெருக வேண்டும் என்னும் நல்ல நோக்கத்தில் சித்தர்கள் ஈகையை அவர்கள் போற்றுவர்.

நாம் பிறர்க்கு ஓடியிட்ட பிச்சையும், மகிழ்ந்து செய்த தர்மமும் சாடிவிட்ட குதிரையினைப்போல் நம்மை மேன்மைக்கு அழைத்துச்செல்ல அவை வந்து நிற்கும் என்பதை, 'ஓடியிட்ட பிசையு முகந்து செய்த தர்மமும்/சாடிவிட்ட குதிரைபோல் தர்மம் வந்து நிற்குமே' (ப.சி.பெ. கோ.39) என சிவவாக்கியர் கூறுவர்.

ஈயாத மனிதரின் தன்மையைப் பட்டினத்தார் '...காயா மரமும் வறளாங் குளமுங்கல் லாவுமன்ன/ஈயா மனிதரை ஏன்படைத் தாய்கச்சி ஏகம்பனே' (ப.சி.பெ.கோ.96) எனக் கூறுகிறார். இதன்வழி, மரமென்றால் காய்த்து மக்களுக்குப் பயன்படுதல் வேண்டும் என அறியலாம். அதுவே மரத்திற்குச் சிறப்பாகும். குளம் என்றால் நீர் நிறைந்து குளிர்ச்சியாய் இருந்து மக்களுக்குப் பயன்படவேண்டும். அதனையே யாவரும் விரும்புவர். கல்லினால் அழகுறச் செதுக்கப்பெற்ற நல்லபசுவினால் பால் தர இயலாது. அதனால் ஒருவருக்கும் பயன் விளையாது? காயாமரம், வறண்ட குளம், கற்பசு இம்மூன்றினாலும் பயனில்லை. அதுபோல் மனிதரில் பிறர்க்கு ஒரு பொருளைக் கொடுத்து இன்பம் அடையாத பயனற்ற மனிதர்கள் உள்ளனர்.

நல்ல மனம் தருமம் செய்ய எண்ணும். பாழ் மனம் வறுமையுற்றவர்க்கு ஈயாது, செல்வத்தை இறுகப்பற்றிக் கொள்ளும். வந்து சேர்ந்த செல்வம் முன்பு நன்மை பல செய்ததால் வந்தது. மீண்டும் அச்செல்வத்தைக் கொண்டு நல்லன செய்ய விரும்பாது, வாழ்தல் கேடானது. இவ்வாறு பட்டினத்தார் உரைப்பர்.

இதனை,

முற்றொடர்பிற் செய்த முறைமையால் வந்தசெல்வம்
இற்றைநாட் பெற்றோமென் றெண்ணாது பாழ்மனமே
அற்றவர்க்கு மீயாமற் அரன்பூசை ஓயாமல்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறைந்து விட்டனையே

(ப.சி.பெ.கோ.143) என்னும் பாடலால் அறியலாம்.

ஒருவர் பிறர்க்கு உதவி செய்வது நல்ல செயல்; ஆயினும் அவ்வுதவியைப் பொருத்தமானவர்க்குச் செய்திட வேண்டும் என்பது மேலானதாகும். தவசிகளுக்கு இல்லறத்தார் துணையாக இருக்க வேண்டும். ஐம்புலனை வென்றவர் மேற்கொள்ளும் அறச் செயல்களுக்குத் துணையாக ஈவது நன்மை என்றும், பொறிவாயில் ஐந்து அவிக்காதவர்க்கு அன்புடன் உதவுவது தீமை என்றும், சிவவாக்கியர் கூறுவர். இதனை, 'ஐம்புலனை வென்றிடா தவத்தமேயு ழன்றிடும்/வம்பருக்கு மீவதுங் கொடுப்பதும்ம வத்தமே' (ப.சி.பெ.கோ 50) என்னும் பாடல் வாயிலாகத் தெளியலாம்.

ஈகைப் பண்பு உயர்வானது, என்பதும் பொருள் உடையோர் பிறர்க்குக் கொடுத்து வாழ்தல் வேண்டும் என்பதும் அவ்வாறு செய்யாத தன்மை இழிவானது, என்பதும் துறந்தார்க்கும் உதவ வேண்டும் என்பதும், அஞ்ஞானிகளுக்குப் பொருள் உதவி செய்தால் சிறப்படைய முடியாது என்பதும் ஈகை பற்றிய சித்தர்கள் கருத்துகள்.

## 2.7 பசியாற்றுவித்தல்

பசியாற்றுவித்தல் என்பது ஒரு நற்குணமாகும். அது சான்றோர்கள் போற்றும் பண்பாகும். நன்மக்கட் செய்கையுமாகும், மனிதர்களின் வாழ்வியலில் இடம் பெறும் இனிய தொண்டாகும். அற்றார் அழிபசி நீக்க வேண்டும் என நினைப்பது உயரிய எண்ணமாகும்.

மனிதன் பசியின் தன்மையை நன்கு அறிந்துள்ளான். அறிந்ததன் விளைவினால் அன்னதானம் செய்ய வேண்டும் என்ற உணர்வு அவனுக்குத் தோன்றியது. பிறர் பசி என்ற போது, உணவிட்டு அப்பசியை மாற்றிய

தருமத்தின் தன்மையால், ஏதேனும் ஒரு பிறவியில் ஞானம் கூட்டி, இறவா நெறியறிந்து, மரணத்தைத் தவிர்த்து, அனேகங்கோடி ஆண்டுகள் வாழ முடியும் என்னும் சிவவாக்கியர் விளக்குவார். இக்கருத்தினை, 'அன்னமிட்ட பேரெலா மனேககோடி வாழ்வரே' (ப.சி.பெ.கோ.51) என்னும் அவர் பாடலில் தெளியலாம்.

எண்சாண் உடம்பினில் ஒரு சாண் அளவுள்ள வயிற்றில் உண்டாகும் பசியைப் போக்க உலகில் ஒவ்வொருவரும் முயன்று வருகின்றனர். பட்டினத்தார் தம் பாடலில், 'சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே' (ப.சி.பெ.கோ.112) என உரைப்பதால் இது புலனாகும். தன் பசியை உணர்வோர் பிறர் பசியை அறிந்து பசியாற்றுவிக்க வேண்டும் என்பது இதன் உட்பொருளாகும்.

'இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்னம்/உருக்கமுடன் கொண்டு வந்தா லுண்பேன், (ப.சி.பெ.கோ.118) என்று பட்டினத்தார் தம் பாடலில் குறிப்பிடுகின்றார். இதன்வழி, தன் பெருமை உணர்ந்து பசியாற்றும் பண்பு உள்ள இல்லறத்தார் உணவு கொண்டு வந்து கொடுப்பின் அவர் உண்டு மகிழ்வார். அன்புடன் வாரா உணவினை உண்ணலாகாது என்பது இதன் கருத்தாகும். எனவே பசிக்கு உணவிடல் என்ற அறநெறியைக் கைக்கொள்ள வேண்டும் என்பது பட்டினத்தார் அறிவுரையாகும்.

பட்டினத்தார் நெஞ்சை விளித்து பசியாற்றும் பண்பு மிக முதன்மையானது என்று சுட்டிக்காட்டுவார். பசித்தவருக்கு மனமிரங்கி உணவு கொடாமல் உலக வாழ்வை ஆற்று வெள்ளம் போல் மிக விரும்பி அழிய வேண்டாம் என மேலும் அவர் எச்சரிப்பர். இதனை, 'பார்த்திரங்கி யன்னம் பசித்தோருக் கீயாமல்/ஆற்றுவெள்ளம் போல அளாவினையே நெஞ்சமே'

(ப.சி.பெ.கோ.144) என்னும் அவர் உரையில் அறியலாம்.

பசிபற்றிய சித்தர் கருத்துகளாக பின்வருவனவற்றைக் கொள்ளலாம். உயிர்களுக்குப் பசி இயல்பானது. பிறர் பசியைப் போக்குதல் மனிதன் கடமையாகும். அதனால் அவன் மேன்மையுறுவான். தகுதியுடையோர் பசியைக் களைதல் சிறப்பளிக்கும் இது அன்னதானம் என்றுப்போற்றப்படுகிறது.

## 2.8.0 மயக்க வாழ்வு

மனித வாழ்வியலின் உறுதிப் பொருள்களாக அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. இவ்வுறுதிப் பொருள்களை மறந்து உண்மையைப் பொருளறியாது மயங்கித் தெளிவில்லாமல் வாழும் மயக்க வாழ்வைப் பலர் மேற்கொள்வர். அம்மயக்கத்தினைப்

1. பொருள் மயக்கம்
2. காம மயக்கம்
3. அறிவு மயக்கம்

எனப்பகுக்கலாம். இம்மயக்கங்களால் அலைகழிக்கப்பட்டு அல்லலுறும் மனிதர்களுக்குத் தக்க அறிவுரைகளை சித்தர்கள் கூறுவர்.

## 2.8.1 பொருள் மயக்கம்

மனிதன் அன்புக்கு முன்னுரிமை தராது, பொருளுக்கே முதன்மை கொடுத்து வாழ்வது பொருள் மயக்கமாகும்.

பொருள் வாழ்வுக்கு அடிப்படையாகும். அறநெறிகளுக்கு மாறாகப் பொருளீட்டுதல் தீ நெறியாகும். வெறும் வாழ்வு வாழ்வதில் சிறப்பில்லை.

இக்கருத்தினை சிவவாக்கியர், 'வீடெடுத்து வேள்விசெய்து மெய்யரோடு பொய்யுமாய்/மாடுமக்கள் பெண்டிர்சுற்ற மென்றிருக்கு மாந்தர்காள்' (ப.சி.பெ.கோ.7) என்று வலியுறுத்துவர்.

செல்வம் நீங்கிய ஒருவருக்கு அனைவரும் பகையாகிப் போவர் மக்கள் செல்வத்தை விரும்புகின்றனரே அன்றி மனிதர்களை விரும்பவில்லை. இவ்வாறு அவர்கள் வாழ்வதைப் பொருள் மயக்கமாகக் கருதலாம் இதனைப் பட்டினத்தார்

தாயும்பகை கொண்டபெண்டீர் பெரும்பகை தன்னுடைய
சேயும்பகை உறவோரும் பகையுச் செகமும்பகை
ஆயும்பொழுதில் அருஞ்செல்வம் நீங்கில்...

(ப.சி.பெ.கோ.103) எனப் புகல்வர்.

சமுதாயத்தில் செல்வர்க்கு மதிப்பு மிகுதியாக உள்ளது. செல்வரை எல்லோரும் புகழ்வர். ஆயினும் செல்வரை அணுகிப் பொருந்தா வழியில் பொருள் பெற்று வாழ்தல் சிறப்பாகாது. இக்கருத்தினைப் பட்டினத்தார். 'செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசித் தினந்தினமும்/ பல்லினைக் காட்டிப் பரிதவி யாமற்..., (ப.சி.பெ.கோ.105) என வெளிப்படுத்துவர்.

ஒருவர் ஈட்டிய பொருட்செல்வம் வீடுபேற்றை அளிக்காது என்பதை 'காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே' (ப.சி.பெ.கோ.107) என அவர் மேலும் தெரிவிப்பர்.

பொருள் வேட்கை நல் சிந்தனையை நல்காது என்பதும், மிகு பொருள் சேர்க்கையால் ஞானம் கிட்டாது என்பதும், செல்வரை அணுகிப் பொருந்தாவழியில் பொருள் பெறல் அறமாகாது என்பதும் சித்தர்கள் கருத்துகளாகும்.

2.8.2 காம மயக்கம்

மனிதன் வாழ்க்கையில் கழிகாமத்தில் ஆழ்கிறான். அதனால் அவன் வாழ்க்கைக் குறிக்கோளை மறக்கிறான். ஆதலின் அவன் வீடு பேற்றை எய்துவதில்லை இவ்வாறு அவன் தடம் மாறித்தடுமாறும் நிலையைக் காம மயக்கம் எனலாம். அதாவது பெண்ணின்பத்தில் அழுந்தி அழிதலாகும்.

பெண்ணின்பத்தை இல்லறத்தின் வழி அடைவோர் இனிமையை எய்துகின்றனர். சிற்றின்பம் எனினும் மனித சமுதாயம் மேம்பாடு எய்துவதற்கு அது நல்லறமாக உள்ளது. மனிதன் இல்லற நெறியினின்றும் பிறழ்ந்து மிகுகாமத்தில் ஈடுபடுகிறான். உடலின் இச்சைகளுக்கு ஆட்பட்டுச் சிற்றின்பத்தில் மூழ்கின் பேரின்பம் விளையாது என்பதைச் சித்தர்கள் விளக்குவர்.

காமத்தீயால் அறிவு அழிந்து விடுகிறது. ஆதலின் கழிகாமத்தால் துன்புறும் மனிதரைக் குருடர் என பட்டினத்தார் விளிப்பர். இதனை 'குலையும் காமக் குருடர்க் குரைப்பேன்' (ப.சி.பெ.கோ.91) என்பதாலறியலாம். மேலும் அவர் 'நச்சிக் காமுக நாய்தா னென்றும்/ இச்சித் திருக்கு மிடைகழி வாயில்...' (ப.சி.பெ.கோ.92) எனவும் பகர்வர். இதன்வழி மிகு காமத்தின் இழிதகமை உணர்த்திடுதலைத் தெளியலாம்.

காமத்தீயினால் உருவாகிய மானுட உடல் ஒவ்வொரு வினாடியும் அக்காமத்தையே நாடும். பெண்ணிடம் மயங்கும் தன்மை ஆடவர்க்கு மிகுதி; அதனாலேயே அவர்கள் கெடுவதும் மிகுதி.

ஆடவர்கள் பெண்ணாசையில் மயங்கி வீழ்வதைப் பட்டியலித்தனர், 'காயமெரு வாழ்வைநம்பிக் காமத் தழுந்திமோ/அரிவாயிற் பட்ட கரியது போ லாவேனே' (ப.சி.பெ.கோ.147) எனக் குறிப்பிடுவர்.

மனிதன் அருகிப் போகக்கூடிய பொருள் வாழ்வை நம்பி, காமத்தில் மூழ்கி, சிங்கத்தின் வாயில் அகப்பட்ட யானைபோல் துடித்துக் கொண்டிருக்கிறான் என்பது கருத்தாகும்.

பெண்ணாசையால் விளையும் தீமையை 'பெண்ணாசை யைக்கொண்டு பேயத் திரிந்தக்கால்/விண்ணாசை வைக்க விதியிலையே கன்மனமே' (ப.சி.பெ.கோ.228) என இடைக்காட்டுச் சித்தர் இயம்புவர். இதன்வழி விண்ணாசை எனும் மேலான ஞானஇன்பம் விரும்பின், பெண்ணாசையை நீக்க வேண்டும் என்பது புலனாகிறது.

பெறுதற்கரிய மனித உடலைச் சிலர் காமக்களியாட்டங்களில் ஈடுபட்டுப் பாழாக்கிக் கொள்கின்றனர் என்று இரங்கி, சித்தர்கள் இங்ஙனம் உரைக்கின்றனர். இது மக்கள் பால் அவர்கள் கொண்டுள்ள பேரிரக்கத்தைப் புலப்படுத்துகின்றது. இக்கருத்தை

> "பொதுவாக மாந்தர்கள் சிற்றின்பத்தில் மயங்கி
> பேரின்பத்தை இழந்துவிடக் கூடாது என்று சித்தர்கள்
> பலரும் எச்சரித்து இருக்கிறார்கள். அந்த வகையில்
> பெண்ணுடன் அனுபவிக்கின்ற சிற்றின்ப மயக்கத்தில்
> வீடுபேற்றை அடைவதை மறந்து விடக்கூடாது என்பது
> பல பாடல்களின் உள்ளக்கிடக்கையாக இருக்கிறது"[4]

என்னும் கூற்று அரண்செய்வதாக உள்ளமை கருதத்தக்கது.

மிகு காமத்தால் இல்லறமும் விரைவில் கெடுகிறது. மேலான துறவறமும் கெடுகிறது. அதனால்தான் பெண்மயக்கத்தைச் சித்தர்கள் கண்டித்துப் பாடிய பாடல்கள் மிகுதியாக உள்ளன எனக்கொள்ளலாம்.

2.8.3 அறிவு மயக்கம்

மனித பிறப்பின் சிறப்பையும் உண்மையையும் உணராது, பொறிகளையும் மனத்தையும் அதனதன் போக்கிற்குச் செல்ல விடுதல் அறிவு மயக்கம் என்று கருதப்படும். மனிதர்கள் உலக வாழ்வில் மனத்தையும் பொறிகளையும் நன்னெறிக்கண் செலுத்தாது, உலகியலில் மயங்கி தீநெறிக்கண் செலுத்துவது அறிவு மயக்கத்தின் செயலாகும். உண்மைப் பொருளை உணராமையால் அறிவு மயக்கம் உண்டாகிறது.

மனிதன் பொய்யை நீக்கி உண்மையை அறிய வேண்டும். சான்றோர்களாகிய சித்தர்கள் பொய்யை அறிந்து நீக்கினால்தான் மெய்யை அறிய இயலும் எனக்கருதினர். அறிவு மயக்க நிலைகளைப் பட்டினத்தார் பின்வருமாறு கூறுவர்.

"நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறுநிலை உளதோ அகமும் பொருளும்
இல்லாளுஞ் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேயிறை வா கச்சி ஏகம்பனே"

(ப.சி.பெ.கோ.93) எனும் பாடலின்வழி, சான்றோர் தொடர்பு, இறைஅன்பு, அறிவு முதிர்ச்சியாகிய ஞானம் முதலியவை உண்மை நிலையாகும். அவற்றை விடுத்துப் பொருளாசை, மனைவி, மக்கள், சுற்றத்தார் ஆகியோரை விரும்புதல், உலகியலில் மூழ்கித் திளைத்தல் முதலியவை அறிவு மயக்க நிலையின் வெளிப்பாடுகளாகும் எனத்தெளியலாம்.

உண்மை உணராத மக்களின் செயல்கள் பிறர்க்குக் கேடுகளை உண்டாக்கும்; சமூகத்தீமைகளை உருவாக்கும். அவர்கள் புவியில் பிறந்ததன் சிறப்புணராமல் அறியாமையில் மூழ்கிடுவர் என்பதைப் பட்டினத்தார்,

"வாதுக்குச் சண்டைக்குப் போவார்வருவார் வழக்குரைப்பார்
தீதுக்குதவியுஞ் செய்திடுவார் தினந்தேதி யொன்று
மாதுக்களித்து மயங்கிடுவார் விதிமாளு மட்டும்
ஏதுக்கிவர் பிறந்தார் இறைவா கச்சி ஏகம்பனே"

(ப.சி.பெ.கோ.95) எனத் தெரிவிப்பர்.

கருத்துக் குருடர்களைக் குருவாக ஏற்றால், இருந்த அறிவும் அழிந்து போகும். ஆதலின் மெய்யான குருவை அடைந்து வணங்க வேண்டும். இதனால் பேதைமை நீங்கும் என பட்டினத்தார் அறிவுறுத்துவர் (ப.சி.பெ.கோ.141).

அறியாமை மேவிட மனிதன் ஆற்றுவெள்ளத்தில் மாட்டிக்கொண்டவன் போல தடிக்கின்றான். அறியாமை அகல முயல வேண்டும். அதாவது அறிவு மயங்கும் செயலில் ஈடுபடாமல் இருத்தல் நன்று.

அறியாமை அகல முற்பட வேண்டும் என்பதும்; மயக்கத்தில் வாழும் வாழ்வு வாழ்வாகாது என்பதும்; தெளிந்தோரின் வழிமுறைகளை கைக்கொள்ள வேண்டும் என்பதும்; சித்தர்களின் கருத்துகளாக உள்ளன.

## 2.9.0 மகளிர் நிலை

சித்தர்கள் சான்றோர்கள். அவர்கள் ஞானநெறியை மேற்கொண்டொழுகினர். இல்லறத்தின் சிறப்புகளை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். ஆதலின் அவர்கள் மகளிர் பற்றி தெளிந்த கருத்தினைக் கொண்டிருந்தனர். அவர்கள் கருத்துகளை

1. குலமகளிர்
2. விலைமகளிர்
3. தாய்மை

எனப்பிரித்துக் காணலாம்.

## 2.9.1 குலமகளிர்

இல்லறம் ஏற்று, தற்காத்துத் தற்கொண்டாற்பேணி, தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாதாராக வாழ்பவர் குலமகளிர் ஆவர். அம்மகளிர் சான்றோரால் போற்றப் பெறுவர்.

பட்டினத்தாரின் பாடல்களின் பெரும்பாலானவை மகளிர் உறவையும் பெண் இன்பத்தையும் இழிவு படுத்துகின்றன.

"..........................தோகையர்தங்
கூறும் மலமும் இரத்தமுஞ் சோறுங் குழியில்விழாது
ஏறும் படியருள் வாயிறை வா கச்சி ஏகம்பனே"

(ப.சி.பெ.கோ.97) என்பது அவர் பாடல்களுள் ஒன்று. பெண்களைத் தாழ்வுபடுத்திக் கூறி, அவர்தம் மையலிலிருந்து விடுபட இறைவனை அவர் அருளுமாறு வேண்டுகிறார். இது போன்றே பட்டினத்தார் பல பாடல்களில் (ப.சி.பெ.கோ.96,97) பெண்களைத் தாழ்த்தியும் வெறுத்தும் கூறுவர். இவ்வாறு பட்டினத்தார் பாடல்களில் குறிக்கப்பெறும் பெண்டிர் குலமகளிர் அல்லர் என்பது குறிப்பிடத்தக்கது.

இக்கருத்தை

"அவருடைய பல பாடல்களைப் படிக்கின்றபோது
அவர் சொல்லுகின்ற விஷயங்கள் குடும்பப்பெண்களைப்
பற்றியதாக இருக்க முடியாது என்று யூகிக்க இடம்
இருக்கிறது ....தாயின் உடலுக்குத் தீ மூட்டிய
போது பட்டினத்தார் பாடிய பாடல்களையும்,
பெண்ணை இழித்துரைத்து அவர் பாடிய சில
பாடல்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது
தாய்க்குலத்தை வெறுத்தவர் அல்ல
பட்டினத்தார் என்பது தெளிவாகும். [5]

என அமையும் கூற்று அரண் செய்வதாக உள்ளமை இங்கு எண்ணத்தக்கது.

பெண்ணுடன் வாழ்ந்து இன்பம் அடைவது இயல்பு. அதில் தோய்ந்து விரைந்து துவளாதீர் என்பதே பட்டினத்தார் மகளிர் பற்றிய பாடிய பாடல்களின் உட்கிடைக்கையாகிறது.

பெண் ஆணுக்கு நிகரானவள் என்பதை '...பெண்ணுமாணு மொன்றலோ பிறப்பதற்கு முன்னெலாம்...' (ப.சி.பெ.கோ.7) என சிவவாக்கியர் அழுத்தமாக கூறுவர். இதன் மூலம் ஆண் பெண் வேறுபாடற்ற நிலையை அறியலாம்.

குல மகளிர் சான்றோர்களால் போற்றப்படுவர் என்பதும், மிகையான பெண்ணின்பம் தீமையளிக்கும் என்பதும், குல மகளிர் பழித்துரைக்கப்படவில்லை என்பதும், சித்தர்கள் கருத்துக்களாகப் புலப்படுகின்றன.

2.9.2 விலை மகளிர்

விலை மகளிர் பண்டைக் காலந்தொட்டே இந்தியச் சமுதாயத்தில் இருந்து வருகின்றனர். அவர்களைப் பழந்தமிழ் இலக்கியங்கள் பரத்தையர் என்றும், வரைவின் மகளிர் என்றும் குறிப்பிடுகின்றன. சான்றோர் பரத்தையர் தொடர்பைப் பெரிதும் கடிந்துரைக்கின்றனர்.

சித்தர்கள் மனித நேயமுடையவர்கள். அவர்கள் சமுதாய முன்னேற்றத்தில் பேரார்வம் காட்டினர். ஆதலின் அவர்கள் சமுதாயத்தில் ஒரு களையாக இருக்கின்ற விலைமகளிரைப் பற்றிக் கூறத்தவறவில்லை.

விலைமகளிரிடம் செல்வோர் அடையும் இழிநிலையைப் பட்டினத்தார்.

"நாவார வேண்டும் இதஞ்சொல்வார் உனைநான் பிரிந்தாற்
சாவேன் என்றேயிருந் தொக்கவுண்பார்கள் கைதான் வறண்டாற்
போய்வாரும் என்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக்கு
ஈவார் தலைவிதி யோஇறை வாகச்சி ஏகம்பனே"

(ப.சி.பெ.கோ.96) எனக் குறிப்பிடுவார்.

உடற்பசியைப் போக்கிக்கொள்ள ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணும் தேவை. ஆயினும், ஆடவர்கள் இல்லறத்திற்கு முன்போ இல்லறத்திற்குப் பின்போ அம்மகளிரிடம் செல்வர். செல்வந்தர்கள் அம்மகளிர் வேண்டிய பொருள்களை அவருக்கு ஈந்து இன்பம் துய்த்துச் செல்வர். ஆயினும் அன்பற்ற அவ்வின்பம் முறையானது அல்ல. பொருளில்லையேல் அங்குச் செல்ல இயலாது. இவ்வகையான வாழ்க்கை முறை சமுதாய அறத்தைத் தேய்க்கும். எனவே அதனை விலக்குமாறு சித்தர்கள் கூறுவர்.

காமத்தின் மேலீடுக்கத்தால் செயல்படுபவர் இறந்தவராவார். அவருக்கு உய்தில்லை. இதனை, 'தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்/ நீரோடும் தாரைக்கே நீ' (ப.சி.பெ.கோ.120) என்னும் பட்டினத்தார் பாடல் தெரிவிக்கும். வேசியர் கவர்ச்சியில் ஆழ்பவர்களை அங்காடி நாய் என மேலும் அவர் இழித்துரைப்பர் (ப.சி.பெ.கோ.142).

> "பட்டினத்தார் பாடல்களில் பெண்ணை வெறுக்கின்ற இடங்களில் வரும் குறிப்புகளை வைத்துப் பார்க்கும் போது விலை மாதரைத்தான் பல இடங்களில் அவர் குறிப்பிடுவதாக எண்ணவேண்டியுள்ளது.[6]

என்று விலை மகளிரைப்பற்றிக் குறிப்பிடுவது எண்ணத்தக்கது.

விலைமகளிரிடத்து பெறும் இன்பம் முறையானது அல்ல என்பதும், நெறி பிறழ்ந்து அவ்வாறு செல்வோர் இறந்தவருக்குச் சமம் ஆவார் என்பதும், அவர்களால் சமுதாயத்திற்குக் கேடு விளையும் என்பதும் சித்தர்கள் கருத்துகளாகின்றன.

2.2.3 தூமை

தூமை என்பது பெண்களுக்கு இயல்பானது, அது உடலியல் கூறுகளுக்கு ஏற்ப, அவர்கள் உடல்கள் மாதந்தோறும் வெளிப்படுத்தும் மாதவிலக்காகும். அதைத்தீட்டு எனவும் குறிப்பிடுவர் அதனைப்பற்றி சித்தர்கள் குறிப்பிடுகின்றனர்.

பத்து மாதமாய்த் தாயின் வயிற்றில் உருப்பெற்ற பின் குழந்தை பிறக்கிறது. அக் குழந்தைத் தோற்றமே கருவுற்ற பின்தான் ஏற்படுகிறது. கருத்தரித்தவுடன், தூமை என்பது வெளிவராமல் அடங்குவதால் அந்தத் தூமையே கை, கால், கண், மெய் என வளர்நிலையை அடைந்து பிறக்கிறது. என சிவவாக்கியர் விளக்குவார், இதனை

"ஐயிரண்டு திங்களா யடங்கிநின்ற தூமைதான்
கையிரண்டு காலிரண்டு கண்ணிரண்டு மாகியே
மெய்திரண்டு சத்தமாய் விளங்கிரச கந்தமும்
துய்யகாய மானதும் சொல்லுகின்ற தூமையே"

(ப.சி.பெ.கோ.33) என்பதால் அறியலாம்.

தூமை என்பது தீட்டன்று, தூமை தான் குழவியாகிறது. அத்தூமையிடத்து ஊறி, உறைந்து நின்றதுதான் உயிர். உலக மக்கள் அந்தூமையிலிருந்து பிறந்து வளர்ந்து வருகின்றனர். இவ்வாறு தூமையின் வளர்நிலையைச் சிவவாக்கியர் வெளிப்படுத்துவர். (ப.சி.பெ.கோ.24)

தீட்டு நின்றால் தான் தாயிரம் குழந்தை உருவாகி வெளிவருகிறது. ஆகவே, இவ்வுடம்பெல்லாம் தீட்டின் வடிவம் எனக் கூறுகிறார். சிவவாக்கியர், இதனை, 'தீட்டந்தீட்ட மென்றுநீர் திறைமுழுகு மூடரே/ தீட்டமாகி யல்லவோ திரண்டு காய மானதும்...' (ப.சி.பெ.கோ.72) என்னும் பாடலடியால் அறியலாம்.

திரண்டுருண்ட தூமையே ஞான வழிக்குத் துணையாகிறது என்பதை சிவவாக்கியர்,

"சொற்குருக்க ளானதும் சோதிமேனி யானதும்
மெய்க்குருக்க ளானதும் வேணபூசை செய்வதும்
சற்குருக்க ளானதும் சாத்திரங்கள் சொல்வதும்
மெய்க்குருக்க ளானதுந் திரண்டுருண்ட தூமையே"

(ப.சி.பெ.கோ.11) எனும் பாடலில் குறிப்பிடுவர்.

தூமை தான் உடம்பாயிற்று, அவ்வுடம்பு தான் ஞானத்துக்கு உதவியாயிற்று. ஆதலால், சத்துருவாகவும் சொற்றுருவாகவும் உள்ள ஞானியர்கள் தூமையினின்று தோன்றியவர்கள் எனத் தெளியலாம். இக்கருத்தை,

"கொடிய நாற்றம் வீசுகின்ற தூய்மையல்லவோ
உயர்ந்த சாதிகளாயினவை? இங்ஙனமாவதை
யறியாது கோபிக்கின்ற அறிவில்லாதவனே!
எல்லாம் அந்தத் தூமையாலுண்டான கோல
மென்றே தெரிந்துகொள்".[7]

என்னும் கூற்று அரண் செய்வதாக உள்ளமை மனங்கொள்ளத்தக்கது.

தூமை என்பது இயல்பு; இதனால் தீட்டு இல்லை என வலியுறுத்தி உண்மையை உரைப்பதே சிவவாக்கியரின் கருத்தாக உள்ளது.

## 2.10 சித்தரைப் பழித்துரைத்தோர்

சித்தர்கள் மனித ஆற்றலை முழுமையாக உணர்ந்தவர்கள். அவர்கள் மனித நிலையைக் கடந்து உயர்ந்தவர்கள். அவர்கள் வாழ்ந்த நாட்களில் பிறரால் இழித்தும் பழித்தும் உரைக்கப்பட்டிருக்கின்றனர்.

சித்தர்களைச் சிலர் தரம் தாழ்த்தி எண்ணியிருக்கின்றனர். இவற்றால் அவர்கள் மனம் தாழ்ச்சியடையவில்லை. இறைவனுடன் தாம் மகிழ்ந்திருப்பதை எண்ணி அவர்கள் இன்புற்றனர். அவர்கள் பிறப்பு எனும் பாழ்நரகுக்குட்பட மாட்டார்கள். தம்மைப் 'பித்தர்' என இழிவு செய்யும் மற்றவர்களின் செயலைக்கண்டு அறியாமையின் செயல் என அவர்கள் நினைப்பர். மண்ணில் பிறந்து மண்ணுக்குள் மறையாத மாண்பினை எய்திய அவர்கள் மேலுலகத்தை இங்கே உணர்வதால் எல்லாம் ஒன்றே என மகிழ்ந்திருந்தனர். இதனைச் சிவவாக்கியர்

"சித்தரென்றுஞ் சிறியரென்று மறியொணாத சீவர்காள்
சித்தரிங்கி ருந்தபோது பித்தரென்றே எண்ணுவீர்
சித்தரிங்கி ருந்துமென்ன பித்தனாட்டி ருப்பரே
அத்தனாடு மிந்த நாடு மவர்களுக்கெ லாமென்றே'

(ப.சி.பெ.கோ.80) எனத் தெரிவிப்பர்.

சித்தர்கள் உலகில் வாழ்ந்து கொண்டிருந்தபோது மக்களால் பித்தர்கள் என்று பழிக்கவும் துன்புறுத்தவும் பட்டனர்.[8] அவர்களை மக்கள் அறிந்துகொள்ளாமையே இத்துன்புறுத்தல்களுக்குக் காரணம் என்பர்.[9]

சித்தர்கள் சிந்தனையாளர்கள் என்பதும் ஆதலின் அவர்கள் உயர்ந்-தவர்கள் என்றும், ஆயினும் அவர்களை மக்கள் பலர் பித்தர் எனத் தூற்றித்துன்புறுத்தினர் என்பதும் அவர்கள் கருத்துகளாகின்றன.

2.11 பிற செய்திகள்

பிறை காணல்

பிறை காணல் வழக்கம் தமிழ்நாட்டில் நிலவிவருகிறது. பிறைக் கோட்டின் உயர்வு தாழ்வுகளை வைத்துத் தங்களின் வளமை, வறுமையைக் கணித்தனர். இச்செய்தியை பட்டினத்தார் தம்பாடலில் தலைவனின் திருநாம வலிமையை வெளிப்படுத்தும் நோக்கில், 'வடகோடுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்னவான் பிறைக்கே' (ப.சி.பெ.கோ.105) என உணர்த்துவர்.

வாழ்வின் ஞானப்பாதைக்குத் துணையாகத் தலைவனின் திருநாமம் இருக்கிறது. ஆதலின் வான்பிறையின் சாய்வைப்பற்றிக் கவலையுற வேண்டியதில்லை. இதனால் பிறைமுனையின் உயர்வும் தாழ்வும் மக்கட் சிந்தனையில் இடம் பெற்றிருந்ததை அறியலாம்.

## பேயும் பிசாசும்

மக்கட் சிந்தனையில் மிகப்பழங்காலத்திலேயே 'பேய்' எனும் நம்பிக்கை பதிந்துவிட்டது. இவ்வுணர்வு சித்தர்களாலும் சுட்டப் படுகிறது. இதனை, 'பேய் போற்திரிந்து...' (ப.சி.பெ.கோ.174) என்று பத்திரகிரியாரும், 'பின்னை யறிவதெல்லாம் அகப்பேய்/பேயறி வாகுமடி...' (ப.சி.பெ.கோ.248) என்று அகப்பேய்ச்சித்தரும், 'பம்மைகொட்ட ஆடும் பசாசாவேன் பூரணமே' (ப.சி.பெ.கோ.150) என்று பட்டினத்தாரும், 'பேயும் பறந்திடும்...' (ப.சி.பெ.கோ.339) என்று கொங்கணரும் சுட்டுவதால் அறியலாம்.

பேய், பிசாசு எனும் உணர்வு அவர்தம் காலத்தில் நிலை பெற்றிருந்ததை இவற்றால் தெளியலாம்.

## தொகுப்புரை:

இதுகாறும் ஆராய்ந்தவற்றால் கீழ்க்கண்ட முடிவுகள் எய்தப் பெற்றுள்ளன.

சித்தர்கள் இல்லறத்தின் சிறப்பை உணர்ந்திருந்தனர். இல்லறத்தை வெறுத்து அவர்கள் துறவை மேற்கொள்ள விரும்பவில்லை. இல்லறத்திலிருந்து நல்வாய்ப்பு எய்தியபோது, துறவை ஏற்பது அவர்கள் கொள்கையாகும்.

அவர்கள் விருந்தோம்பலை வாழ்க்கையின் முதன்மைப் பண்பாகக் கருதினர்.

அவர்கள் புலால் உண்ணாமையினால் மிகு சிறப்பு விளைவதாகக் கருதவில்லை. மேலும் அவர்கள் புலால் உண்பவரை இழிவு செய்யவில்லை. பசியற்ற உண்ணா நிலை எய்துதலை அவர்கள் உயர்வாகக் கொள்வர்.

மக்களை ஓர் இனமாக எண்ணி, அவர்கள் சாதி சமய வேறுபாடுகளை ஏற்கவில்லை.

மக்களுக்குப் பிறப்பும் இறப்பும் இயல்பானவை. அவர்கள் இறவா நிலையை அடைவது சால்புடைமையாகும்.

உலக உயிர்களின் உய்விற்கு ஈகைப்பண்பு இன்றியமையாதது. அவற்றுள் பசித்தோர்க்கு உணவளித்தல் முதன்மையானதாகும்.

பொருள்வேட்கை நற்சிந்தனையைக் கெடுக்கும். அவற்றுள் மிகுகாமம் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டு வாழ்க்கை முறைகளுக்கும் தீமைபயக்கும். அறிவு மயக்கம் உண்மை நாட்டத்தை வீழ்த்தும்.

சமுதாயத்தில், குலமகளிரை அவர்கள் இழிவுபடுத்திலர். விலைமகளிரின் செயல்களை இடித்துரைப்பர். மேலும், அவர்களை நாடிச்செல்லும் ஆடவர்களைக் கடிந்துரைப்பர். பெண்டிர் 'தூய்மை' ஓர் உயர்பொருளாகும்.

சித்தர்கள் தம்மை இகழ்வாரிடத்தும் அன்பு காட்டுவர்.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம் - கற்பியல் 51

2. சோமு, மீ.ப., சித்தர் இலக்கியம் (முதல் பகுதி) ப.159

3. SUBRAMANIA IYER.

   "To denounce to-day caste, worship in temples and religious and agamic rituals does not require much courage, but to have done so in the centuries in which the Tamil Siddhars lived required extraordinary heroism and strength of conviction."

   The Poetry and philosophy of the Tamil Siddhar's P.82

4. கணேசன், பி.சி., சித்தர்கள் கண்ட தத்துவங்கள் ப.14

5. கணேசன், பி.சி., சித்தர்கள் கண்ட தத்துவங்கள் பக்.17,18

6. கணேசன், பி.சி., சித்தர்கள் கண்ட தத்துவங்கள் ப.18

7. வடிவேலு முதலியார், மா., பெரிய சிவவாக்கியர் பாடல்கள் ப.124

8. இளங்குமரன், இரா., சித்தர் பாடல்கள் சிவவாக்கியர் ப.11

9. ஸ்ரீரங்கம் சித்தர், வாழ்வின் திறவுகோல் ப.33

## இயல் பொருளடக்கம்

3.0 முன்னுரை

மனித வாழ்வில் இன்ப உணர்வை அனைவரும் விரும்புகின்றனர்; தொடர்ந்து இன்ப உணர்வை அடைய முயலுகின்றனர். பற்பல நினைவுகளால் தாக்குண்ட மனிதன் துன்ப உணர்வினால் அலைகழிக்கப்படுகின்றான். நிலையான இன்பம் எப்பொழுது கிடைக்கும், எப்படி கிடைக்கும் என்றெல்லாம் அவன் ஏங்குகிறான், இந்நிலையில் உலகியலை அறிவால் அறிந்து நல்லுணர்வால் தூண்டப்படுகின்ற நன்னிலை அடைந்தால் பேரின்பம் அடைய முடியுமோ என எண்ணிய சான்றோர்களின் உறுதியானதும் இறுதியானதும் ஆகிய நல்லுணர்வு இறையுணர்வு எனப்படும்.

முன்னோர்களான நமது ஆன்மீக முதறிஞர்கள் சிந்தைக்கும் புலன்களுக்கும் மிக எளிதில் எட்டாத இறையுணர்வை, மையமாக வைத்து மனித வாழ்க்கையைச் சுழலவிட்டனர். புலன்களுடைய இயல்பான உணர்வுகளுக்கு உட்பட்ட மனிதன் சிந்தையின் செயல்பாட்டால் புலனை, இறையுணர்வின் பால் மடைமாற்றம் செய்து, புதுவகை உணர்வை அடைகின்றான். அவ்வுணர்வை இறையுணர்வு எனக்கூறலாம்.

தமிழ் இலக்கியங்களில் இறையுணர்வு மிகுதியாக இடம் பெற்று உள்ளது. சித்தரிலக்கியம் பிறவகை இலக்கியங்களினின்றும் வேறுபடும். பிற இலக்கியங்களில் கதைகளின் மூலம் நீதிக்கருத்துக்களும், இலக்கிய இன்பமும் வெளிப்படுத்தப்படுகின்றன. சித்தர் இலக்கியங்கள் கடவுள் பற்றிய கருத்துகளையும் வாழ்வியல் நெறிகளையும் மிகுதியாக விளக்கிக்

குறிப்பிடுகின்றன. தமிழர் கடவுள் கொள்கை தொன்மையானது. இதனை

"பண்டை அறிவர் காலத்தே தமிழரது
கடவுள் கொள்கைக்குத் திருநெறி யென்றும்
சிவநெறி யென்றும், ஒருநெறி யென்றும்
பெருநெறி யென்றும் பல பெயர்கள் வழங்கின". [1]

என்னும் கூற்றால் அறியலாம்.

இவ்வியலை

1. குருகுலக்கல்வி
2. பக்தி
3. குருஉபதேசம்
4. மெய்யுணர்தல்
5. தூய வழிமுறைகள்
6. சோதி தோன்றல்
7. அமிழ்து உண்ணல்
8. மரணந்தவிர்த்தல்
9. அநுபூதிநெறிக் கொள்கை
10. ஞானியருக்குச் சீடர் செய்யும் தொண்டு
11. சன்மார்க்கம்

எனப் பகுத்துக் காணலாம்.

3.1 குருகுலக்கல்வி

ஆன்மீகக் கல்வி கற்க, குரு வேண்டும். ஏனைய கல்விக்கும் அவரே முதன்மை. ஆன்மீக நெறியறிய அவர் வழிகாட்டுதல் மிக இன்றியமையாதது. அவர் சொற்படி நடந்து, அவருக்குத் தொண்டு செய்து, அவர் கூறும் நெறிப்படி ஒழுகி, அறிய வேண்டிய கல்விதான் ஆன்மீகக் கல்வி.

உயிரின்தன்மை, உடலின்தன்மை, இறைத்தன்மை, ஞான மார்க்கம் முதலிய கருத்துகளைக் குருவின் இருப்பிடம் சென்று கற்பது குருகுலக்-கல்வியாகும். பணிவாய் நடந்து அன்பின் வழியில் உயிர்நிலையும், உயர்நிலையும் அடைய உதவும் இடமே குருவின் இருப்பிடம் ஆகும். குரு தங்கி தவத்திற்கும் துறவுக்கும் வழிகாட்டும் நல்ல இடம்தான் குருகுலம். குருவே எல்லாம் என உயர்ந்து சீடன் அன்புருவாய் மேன்மையடையும் இடம் குருகுலம் ஆகிறது.

உவமை இல்லாதவன் தலைவன். அவன் அடைந்த பொருளே மெய்ப்பொருள். அதனை அவன் அருளால்தான் அடைய முடியும். அந்தச் செம்பொருளாகிய மெய்ப்பொருள் அறிந்தவரே குருநாதராய் விளங்குவர். அக்குருவே எனக்கு அருள்ஒளி காட்டினார். அவர் திருவடியை வணங்குகின்றேன், வாழ்த்துகின்றேன் என்று பட்டினத்தார்,

"ஒப்பும் உவமைமற் றோதவரி தாயபொருள்

இப்புவியி னிற்குருவே யென்வைந் தோன்தாள்வாழி"

(ப.சி.பெ.கோ 141) எனும் பாடல் அடிகளில் குருவைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகின்றார்.

அன்றில் எனும் பறவை இணையாகவே வாழும். ஒன்று மற்றொன்றைப் பிரிந்து வாழாது. அதுபோல ஞானம் தேடும் அடிமையாகிய சீடனும் ஆசானாகிய குருவும் மனதால் ஒன்றுபட்டு இருக்க வேண்டும் என்று சித்தர் கணபதிதாசர் குறிப்பிடுகிறார். (ப.சி.பெ.கோ 556)

குருவின் முதன்மையை

"என்னென்று சொல்லுவன்டா என்குருவே கேளடா

பின்னை யெனக்குநீ யல்லாது பிறிதிலையே"

(ப.சி.பெ.கோ 131) எனக் குறிப்பிடுகின்றார் பட்டினத்தார்.

குருவின் அடிபணிந்தால் சிவமாகிய ஒளிப்பொருளை அடையலாம். அவரே தெளிவான சிந்தனையைத் தரவல்லவர். அவர் உதவி இல்லாமல் அருள்பெற இயலாது. அவர் செயலின்றி, பிறிது யாதுமில்லை என்று வலியுறுத்துகின்றார் பட்டினத்தார். இதனால் குருவின் துணைகொண்டு தான் இறையுணர்வு அடைய முடியும் என்பது தெளிவாகிறது.

பிறப்பறுக்க வழிகாட்டுபவன் தலைவன். குருவின் வடிவத்தில்தான் இறைவன் உள்ளான். அவரினும் மிக்கவர் இல்லை, கள்ளப்புலனை மாற்றியவரும் பிறப்பை நீக்கி செம்பொருள் கண்டவரும் அவர் ஆவார். இதனைப் பட்டினத்தார், 'கொள்ளைப் பிறப்பறுக்கக் கொண்டான் குருவடிவம் / கள்ளப் புலனறுக்கக் காரணமாய் வந்தான்டி' (ப.சி.பெ.கோ 132) என உணர்த்துவர்.

குருவிடம் கல்வி கற்பதே நல்வழி; தானே தட்டுத் தடுமாறிக் கற்பது ஞானக்கல்விக்கு முறையன்று; நெறியன்று, அதனால் வெற்றி கிட்டாது.

ஞானத்துக்கு மூலம் எது என்று அறிந்து உரைப்பவர் குரு. அவர் மூலம் தான் மூலாதாரம் பற்றிய ஞான இரகசியங்களை முறைப்படி அறிய முடியும். அவரிடம் காத்துக் கிடந்து இவ்வுண்மையை உணர வேண்டும் என்பதை, 'மூலமதை யறிந்துரைப்போன் குருவுமாகும்' (ப.சி.பெ.கோ 615) என அகத்தியர் குறிப்பிடுவர். இதனை, அரன் செய்வதாக 'முத்திக்கு வித்து குருவருள் என்பது ஆன்றோர் கண்ட முடிவு'[2] என்னும் கூற்று உள்ளது.

குருகுலத்தில் இருந்து கல்வி கற்பதுதான் உயர்ந்தது. குருவின் வழிகாட்டலினால்தான் உயர முடியும் என்பது முற்றிலும் உண்மையாகும்.

இக்கருத்தினை வலியுறுத்துவதாக

> பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் ஆகியவற்றில்
> உள்ள ஆசிரியர்கள் மூலம் உலகக்கல்வி
> பயில்வது போல ஆன்மீகத்திலும் ஆன்மீகக்
> கல்வி குருவின் மூலம் தான் பெற முடியும்.
> சிறந்ததொரு குருவின் மூலம் உபதேசம்
> பெற்றுக்கொள்ள வேண்டும்.[3]

என மொழிவது இங்கு மனங் கொள்ளத்தக்கது.

குருவை இறைவனாகக் காணவேண்டுமென்ற கருத்தை வற்புறுத்தவே இறைவனுக்குக் குருவின் வடிவம் தந்து, இறைவனை ஆசிரியனாக வழிபடுகிற ஒரு மரபு தமிழகத்தில் தோன்றி வளர்ந்து வந்துள்ளதாகக் கூறுவர்.[4]

இவற்றால் இறைவனே குரு; குருவே இறைவன் என்பது தெளிவாகிறது.

நூலறிவால் ஞானத்தை முழுமையாக எய்திட இயலாது என்பது சித்தர்களின் முடிபு. ஆசானாகிய குருவின் அறிவுரைப்படி அனுபவ அறிவு உடைய அவர் வழிகாட்டலால் அன்றி சித்தி பெற இயலாது என்பது நன்கு புலனாகிறது.

### 3.1.1 குரு சீடர் மரபு

சித்தர் மரபு என்பது தொன்மையானது. சித்தர்கள் குருசீடர் என்ற முறையில் வழிவழி தோன்றியுள்ளனர். முருகனின் சீடர் அகத்தியர் என்று சித்தர்கள் அருளிய ஞான நூல்[5] கூறுகிறது.

சட்டை முனிவர் இம்மரபினைத்தம் பாடலில் சுட்டிக் காட்டுகின்றார். இதனைக்

"கேளப்பா மூலர்க்குகா லாங்கி பிள்ளை
கெடியான காலாங்கி மைந்தர் போகர்
நீளப்பா போகர்பிள்ளை கொங்கணர்தான்
நேராக நான்குமுறை பேரனாகித்..."

(ப.சி.பெ.ஞா.733)

எனும் பாடலால் அறியலாம்.

மேன்மையான உயர்ஞான நிலையை அறிந்தவர்களின் கு பட்டியலைச் சட்டை முனிவர் கூறுகின்றார். குரு வடிவில் வந்த தட்சணாமூர்த்திக்கு, திருமூலர், சண்டிகேசர், சனகாதி நால்வரான சனகர், சனந்தனர், சனாதனர், சனக்குமாரர் ஆகியவரும், வியாக்ரமர், பதஞ்சலியார், சட்டைமுனிவராகிய அடிவேலனையும் சேர்த்து ஒன்பது சீடர்கள் இருந்துள்ளனர் என சட்டைமுனிவர் கூறுவர். (ப.சி.பெ.கோ.734).

குரு - சீடர் மரபு தொன்று தொட்டுத் தொடர்ந்து வருகிறது என்பதை வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் யானும் ஒருவன் என இராமலிங்க சுவாமிகள் குறிப்பிடுதலால் தெளியலாம்.[6]

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய கல்வித்தனை ஆசானிடமிருந்து முறையாகக் கற்றிட, சீடர்கள் வருகிறார்கள் என்பதும் இது சங்கிலித் தொடர்புடையது போல உள்ளது என்பதும் தெரிய வருகின்றன.

"குருவை நினைக்கும்போது அருவத்தில் உலாவிக் கொண்டிருக்கும் சித்தர்கள் சீடர்களுக்கு உதவ வருவார்கள்" என்பர்[7]

சித்தர்கள் எல்லோரும் குரு ஆனவர்கள். அவர்களை வணங்குவது மிகச் சிறந்த ஞான வழிபாடாகும்.

பூவுலகில் பிறந்த ஒருவர் உண்மையை அறிந்திட குருவின் உபதேசம் கிடைக்கப் பெறவேண்டும். அவர் துணையின்றி ஆன்மீக வாழ்வில் முன்னேற்றம் காண முடியாது என்பது சித்தர் பாடல்களில் சுட்டிக் காட்டப்படுகின்ற செய்தியாகும். அவர் திருவடிகளைப் பற்றினாலன்றி, ஞானம் பெற முடியாது. அறியாமையாகிய இருட்டை ஞானம் எனும் வெளிச்சத்தால் நீக்குபவர் அவர் ஆவார். அவர் பெருமையைச் சொல்லால் சொல்லவும் எழுத்துக்களால் எழுதவும் இயலாது. அவர் இல்லையெனில் எதுவும் இல்லை என்பது ஞான வீட்டின் சிறப்பை உணர்பவர்கள் வெளிப்படுத்தும் கருத்தாகிறது.

## 3.2.0 பக்தி

இறைவன் மீது அன்பு செலுத்துவது பக்தி எனப்படும். மனிதன் அடைகின்ற உணர்வில் இதுவும் ஒன்று. இவ்வுணர்வு எளிதன்று. சித்தர்களிடம் செலுத்தும் பக்தி குரு பக்தி ஆகிறது. அவர் திருவடியை வணங்குவதே மேன்மையான வழிபாடாகிறது.

சிந்தனையைத் தந்து திருவருள் பெறுவதும் வந்தனம் செய்து மலரடி அடைவதும் செய்யத் தக்கக் கடமையாகிறது. குருபக்தி செய்யும் குவலயத்தோர்க்கு முத்தி கிட்டும் என்பது சித்தர்களின் கருத்தாகின்றது. பாரிலுயர்ந்தது பக்திதான் என்றும் அதைப்பற்றியோர்க்கு உண்டாவது முத்தி என்றும் கடுவெளிச்சித்தர் வலியுறுத்துகின்றார்.

(ப.சி.பெ.கோ.257) தொண்டு செய்கின்ற சீடன் அளவிடற்கரிய அன்பைத் திருவடிக்குக் காணிக்கையாக்கும் செயலைப் பக்தி என சித்தர்கள் கருதினர்.

3.2.1 திருவடி வணக்கம்

குருவின் திருவடியை மனங்குளிர நினைத்தால் பற்றற்ற மனம் உண்டாகும் என்பது பட்டினத்தார் உணர்த்தும் வழிபாட்டு நெறியாகும். (ப.சி.பெ.கோ.169)

"வாமென்ற அவன்பாதம் பூசை பண்ணு
மற்றொன்றும் பூசையல்ல மகனே சொன்னேன்"
(ப.சி.பெ.கோ. 613)

உயர்ஞானம் பெற்ற குருவை மனதில் எண்ணி அவர் திருவடியை நினைந்து பூசை பண்ண வேண்டும். அதுவன்றி மற்றொன்றும் பூசையல்ல என்று அகத்திய முனிவர் திருவடி வணக்கத்தை வலியுறுத்திக் கூறுகிறார்.

குருவின் திருவடிகளை வணங்கினால் நன்மை. அவருடைய திருவடியை வணங்க அருள் கிடைக்கும் என்பதைச் சிவவாக்கியர், 'நன்னு நீர்மை நின்றபாதம் நண்ணுமா றருளிடாய்" (ப.சி.பெ.கோ.4) எனக் கூறுவர்.

அடி பணிந்தால் மடியாமல் வாழலாம். இறவா நிலையை அடையலாம். இஃது எல்லோர்க்கும் உடனே கிட்டாதெனினும், முயல்வது நன்மைதரும். பணிந்து மெய்ப்பொருள் என்னும் அருட்செல்வத்தைப் பெற்றிட அடியவர்கள் அடிபணிதல் வேண்டும் என்பதை 'அடியார்க் கெளியவர் அம்பல வாணர் அடிபணிந்தால்/மடியாமற் செல்வ வரம்பெற லாம்...'

(ப.சி.பெ.கோ.101) என பட்டினத்தார் குறிப்பிடுவர், குருவின் அடிபணிவது உண்மையை உணர வாய்ப்பாக அமைகிறது.

பிறவாதிருக்கவும் இறவாதிருக்கவும் வேண்டும் என விரும்பு கிறவர்களுக்கு மருந்து உண்டு என்கிறார் பட்டினத்தார். தலைவனின் அடிக்கமலத்தை மறவாதிருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். மனதுக்கு அதுவே மருந்தாகும் என்று வழிகாட்டுகிறார். திருவடியே மருந்தாகிறது. இதனை, '...அடிக்கமலம்/மறவா திருமன மேஅது காண் மருந்துனக்கே' (ப.சி.பெ.கோ.101) என்பதால் அறியலாம்.

உண்மையான குருவினை அறிந்து திருவடி வணங்க வேண்டும் என்று பாம்பாட்டிச் சித்தர் 'மெய்க்குருவின் பதம்போற்றி ஆடாய் பாம்பே' (ப.சி.பெ.கோ.200) எனக்கூறுவர்.

குருவின் திருவடிகளைப் போற்ற வேண்டியதன் இன்றியமையாமையைப் பற்றி தவத்திரு.ரெங்கராஜ தேசிக சுவாமிகள்,

> "உண்மைப் பொருளை அறிந்த ஆசான் பாதம் பற்றிப் பூசிக்காமல், உண்மைப் பொருள் அறியவும், ஆன்மலாபம் பெறவும் முடியாது"[8] என்றும்

> "இறைவனை நாம் ஆராய்ந்து அறிந்து அடைய வேண்டுமென்றால், பல அரிய நூல்களைக் கற்க வேண்டும். பல ஆண்டுகள் படித்து ஆராய்ந்து தெளிய வேண்டும். காலமோ குறுகியது. ஆகவே இதை விட்டுவிட்டு அணுவின் அணுவாக இருக்கக்கூடிய, தலைவனை, ஆராய்ந்து, தெளிந்து அணுகிட

> வல்லவர்களாகிய ஞானியரின் திருவடிகளை
> அன்புடன் பூசித்தால் அதிருஷ்டமாகிய கடவுள்
> தன்மையை நாம் அறிந்து அடைவதற்கு அவர்கள்
> அருளாசி வழங்குவார்கள்"[9]

என்னும் கூறுவது உளங்கொள்ளத்தக்கது.

குருவின் திருவடிகளை வணங்கினால் ஞானமும் தெளிவும் கைகூடும் என்பது உணர்த்தப்படுகிறது. மறைந்திட்ட தலைவனாகிய சற்குருவின் பாதத்தைப் பூசை செய்ய வேண்டும் என்பதும், நடமாடும் சொற்குருவின் பாதத்துக்குப் பூசை செய்ய வேண்டும் என்பதும், சித்தர் பாடல்களில் காணப்படும் கருத்துகளாகின்றன.

<u>3.2.2 அகவழிபாடு</u>

திருவடியை அகத்தில் கொண்டு மனம் கசிந்து உருகி வழிபடுதல் அகவழிபாடாகிறது. குருவை வணங்கும்போது நெஞ்சார நினைக்க வேண்டும். வஞ்சனையான மனம் தெளிவைத் தராது. தூய்மையான அகம்தான் திருவடியைப் பற்றிட விரும்பும். புறவழிபாடு சாதாரணமான சடங்கும் சம்பிரதாயமும் கூடியது. அகவழிபாடு சிந்தனை வயப்பட்டதும் அறிவு நெறிப்பட்டது.

குருவை மேலானவர் என எண்ண வேண்டும். புறவழிபாட்டு முறைகளை நீக்கி அகவழிபாடு தேவை என்பதைச் சிவவாக்கியர் அழுத்தமுறப் பதிவு செய்கின்றார். ஞானமுடைய குருவின் திருவடியை மனமெனும் ஞானப்பள்ளியில் வணங்கிட வணங்கிட காயமாகிய உடலினுள்ளே தலைவனைக் கண்டு மகிழ முடியும் என்பதை,

"கோயில்பள்ளி யேதடா குறித்துநின்ற தேதடா
வாயினால் தொழுதுநின்ற மந்திரங்க ளேதடா
ஞானமான பள்ளியில் நன்மையாய் வணங்கினால்
காயமான பள்ளியிற் காணலா மிறையையே"

(ப.சி.பெ.கோ.30) எனும் பாடலின் மூலம் வெளிப்படுத்துவர். அகவழிபாடே உயர்வானது என்பது இதனால் தெளிவாகிறது.

உள்ளன்பு கொண்டு குருவை வணங்கும் போது அவர் திருவடியைச் சிறிதும் மறவாதிருக்க வேண்டும். 'உன்னையற்ப நேரமு மறந்திருக்க லாகுமோ' (ப.சி.பெ.கோ.39) என்ற அகவழிபாட்டின் இன்றியமையாமையை சிவவாக்கியர் வலியுறுத்துவர்.

இறைவன் மீது அன்பு கொண்டு உருகினால் உள்ளம் நெக்கு நெக்காய், சோறாய் கசிந்து உருகும். அவன் திருவடியைத் தவிர வேறொரு எண்ணம் இல்லாது தியானம் செய்து முழுமையான இன்பத்தை அடைய வேண்டும் என்றே சித்தர்களும் வழிகாட்டுகின்றனர். பக்தியின் வளர்ச்சியாகிய தியானமுறை சித்தர்கள் சுட்டிக்காட்டும் உயர்வான வழிமுறையாகிறது.

மனதில் குருவை எண்ணி, விழியால் புனல்சிந்தி, விம்மியழுது, உள்ளுருக நினைக்க வேண்டும் என்றும் (ப.சி.பெ.கோ.113) முன்னேற்றமான தவத்துக்கு நம்மை அழைத்துச் செல்பவர் அவரே என்றும் (ப.சி.பெ.கோ.136) பட்டினத்தார் புலப்படுத்துவர்.

அகவழிபாட்டில் குருவைப் போற்ற வேண்டும், மனதைவிட்டு அகன்று விடாமல் நினைத்துக் கொண்டிருந்து மிக்க அன்புடன் பணிந்து அவர்

பெருஞ்சிறப்புக்களை எட்டுத் திசைகளுக்கும் சென்று போற்றியும் புகழ்ந்தும் இறைஞ்சியும் வணங்கியும் வேறு ஒரு மனமின்றி ஒரே மனதாக நாடி இருக்க வேண்டும் என்று பாம்பாட்டிச் சித்தர் (ப.சி.பெ.கோ.199) மொழிவர்.

ஞானியரை வணங்கும் சீடன், தொழுது கொண்டே இருக்க வேண்டும். மனம் உறுதியடைய வேண்டும். அப்படிச் செய்யாவிடில் பக்தி நெறியும் அழிந்து, சக்தியான உடம்பும் கெட்டு, சித்தியடைந்திடாது முத்தி பெறாது வாழ்வு வீணாகும் என்று இடைக்காட்டுச் சித்தர் கூறுகிறார் (ப.சி.பெ.கோ.221).

"இம்மை மறுமையை வகுத்து எல்லாவுயிர்கட்கும்
உயிராய்த்துணை நின்று உதவி வரும் எல்லாம் வல்ல
இறைவனை எந்நேரமும் மனக்கசிவுடன் நினைந்து
வருதல் வேண்டும்" [10]

என்று அகவழிபாட்டினைப் பற்றி மறைமலையடிகள் கூறுவது இங்கு உரைத்தக்கது.

"குறிக்கோள் ஒன்றே எனினும் சித்தர் நெறி பக்திநெறியிலிருந்து பெரிதும் வேறுபடுகிறது. பக்தி நெறியைப் புறவழிபாடு என்றால் சித்தர் நெறியை அக வழிபாடு எனக் கூறலாம். பக்தி நெறியின் போலித் தனத்தைச் சாடுவதும் யோகமான மார்க்கங்களைப் போற்றுவதும் சித்தர் நெறியின் பொதுத் தன்மை. ஆலயம் உருவ வழிபாடு எனும் அச்சுகளைச் சுற்றிச்

> சூழ்வது பக்திநெறி, அகவழிபாடான சித்தர் நெறியில் அவற்றுக்கு இடமில்லை. சமய எல்லைகளைக் கடந்து எல்லோருக்கும் பொதுவான கோட்பாடுகளைக் கொண்டது சித்தர் நெறி"[11]

என்னும் கூற்று இங்குக் குறிப்பிடத்தக்கது.

அகவழிபாட்டு நெறியினைச் சித்தர்கள் வலியுறுத்துகின்றனர். தெளிந்த மனமுடையவரே சித்தர்களின் சிந்தனை வயப்பட்ட வழிபாட்டு முறையினை உணர முடிகிறது. குருவின் நாமத்தைத் தியானம் செய்வதும், அருள் பெற்ற ஞானியரைக் கனிந்துருகி பூசிப்பதும், சித்தர் அறிவுறுத்தும் வழிபாட்டு நெறிகளாகும்.

## 3.3 குரு உபதேசம்

ஞானத்தை அடைந்திட குருவின் துணை தேவை. அவர் உணர்த்தினாலன்றி, தாமே உணர முடியாது. இதனைக் குரு உபதேசம் என்று பெரியோர்கள் கூறுவர். இதனைக் குருவின் அறிவுரை என்றும் கூறலாம். குருகுலக் கல்வி கற்க குருவின் இருப்பிடம் சென்று தொண்டு செய்ய வேண்டும். அவர் வழிகாட்டலை ஏற்றல் நன்மையைத் தரும்.

குருவுக்குத் தொண்டு செய்து அவர்தம் உயர்கருத்தைப் பெற்றிட வேண்டும் என்பதைக் காகபுசுண்டர்

> "கண்டோருஞ் சொல்வார் கருத்தாற் பெரியோரைத்
> தொண்டுசெய்து பெற்ற சுகம்"

(ப.சி.பெ.கோ.804) என உரைப்பர். உண்மைப் பொருளைக் கண்டு தெளிந்தவராகிய, குருவின் திருவடிக்குத் தொண்டு செய்து, அவரால் ஞானஅறிவு புகட்டப் பெற்று, அதனால் அடைகின்ற ஞானஇன்பம் நிலையானது ஆகும்.

குருவின் அறிவுரைகள் பற்றி சிவவாக்கியர்

"குருவிருந்து சொன்னவார்த்தை குறித்துநோக்க வல்லிரேல்.."
(ப.சி.பெ.கோ.13) என்றும்

"விளங்குஞான மேலியே மிக்கோர்சொல்லைக் கேட்பிரேல்.."
(ப.சி.பெ.கோ.63) என்றும் அறிவுறுத்துவர்.

ஞானத்தை விரும்பியவர்கள் குருவின் சொற்களைக் கேட்க வேண்டும். அதுவே தெளிவான நிலைக்கு வழிவகுக்கும்.

பலவீரர்கள் போரிட்டுக் கொண்டிருக்கும் போது, போர்க் களத்திற்குச் சென்று ஊசியைத் தேடுதல் போல, உலகில் ஞானமுத்தியை அடைய பலகாலம் முயன்றும் பலரிடம் சென்றும் உண்மை உணர முடியாமல் அலைந்து திரிவர் பலர். ஆனால், உண்மையறிந்த அருளாளராகிய குருவின் சொல், செயலால் இன்பம் கண்டிடலாம் என்று பாம்பாட்டிச் சித்தர் அறிவுறுத்துவர். (ப.சி.பெ.கோ.212)

குருவின் வார்த்தையைக் கேட்கும் வாய்ப்பு கிடைத்தால் அதுவே சிறப்பறிவை உண்டாக்கும். மறைந்துள்ள பொருளும் வெளிப்படும் என்று இடைக்காட்டுச் சித்தர் உணர்த்துவர். (ப.சி.பெ.கோ.223)

மெய்ப்பொருளை அறிந்திட கேள்விஞானம் வழியாகத் திகழ்கிறது. அந்தக் கேள்வியறிவும் குருவினால் உணர்த்தப்படுவது. அவர் அருள் என்னும் வழிகாட்டல் கிடைப்பின் பேரின்ப நிலையை அடைந்திட இயலும். என்னதான் படித்தாலும் ஏதேது செய்தாலும் அவர் காட்டிக்காட்டினாலன்றி, ஞானம் கிட்டாது. உலகக் கல்வியைத் தாமே கற்று அறிந்திடலாம். அழியாத ஞானக் கல்விக்குக் குருவின் உபதேசம் வழிகாட்டுதலாய் அமைகிறது என்று அகப்பேய்ச் சித்தர் விளக்குவர் (ப.சி.பெ.கோ.248).

சிவானந்த போதம் கூறும் போது

"உறுதிகொண்ட பிள்ளையென்றால் ஆசான் வைத்த
உபதேசங் கேட்டளவி லுறுதி கொண்டே"

(ப.சி.பெ.கோ.424) என உரைக்கின்றது. இதனால் சீடர்கள் குருவின் அருள் வார்த்தையை உறுதியாகப் பற்றிக் கொள்ள வேண்டும் என்பது உணர்த்தப்படுகிறது.

ஆசானுக்கு உடல், பொருள், ஆவி மூன்றையும் சீடர் அர்ப்பணம் செய்து தொண்டு செய்து வருவாரேயாயின் அவர் மகிழ்ச்சியுடன் உபதேசிப்பார் என சிவானந்தபோதம் கூறுகிறது. (ப.சி.பெ.கோ.439).

இன்பம் தரும் நாயகனைத் தேடி விரும்பிடும் இளம்பெண் போல, தலைவனாகிய குருவின் உபதேசத்தைக் குறிப்புடன் நிதமுந்தேடிக் கேட்டுத் தெளிந்து பேரின்ப நிலையை அடைந்திடலாம்.

"விரகநா யகனைத் தேடி விரும்பிய மங்கை போலக்
குரவனா ருபதே சத்தைக் குறிப்புடன் நிதமுந் தேடி..."

(ப.சி.பெ.கோ.553) என்பதின் மூலம் கணபதிதாசர் அறிவுறுத்துவர்.

குருவின் சொல் பூரணம் என்னும் முழுமையை உணர்த்தும்; பிரம்ம நிலையை உணர்த்தும். அவர் உபதேசம் ஞானநிலைக்கு அழைத்துச் செல்லும் என சட்டை முனிவர் கூறுவர். (ப.சி.பெ.கோ.746)

யோகமும் ஞானமும் அறிய குருவின் உபதேசம் கிட்ட வேண்டும். அதுவே உறுதியான செயற்பாட்டுக்கு வலியூட்டும். உபதேசம் பெற்ற பின்புதான் உண்மையறிந்திட முடியும். வெறுமனே நின்று தலையை அண்ணாந்து பார்த்திருந்தால் மட்டும் ஞானம் வந்திடாது என்பதைப் பின்வருமாறு

"ஒன்னான யோகமல்லோ இந்த நிட்டை
உபதேசம் பெற்றவர்க்கே உண்மை யாகும்
அன்னாந்து பார்த்திருந்தால் வருமோ ஞானம்..."

(ப.சி.பெ.கோ.792) காகபுசுண்டர் விளக்குவர்.

குருவின் உபதேசம் சீடனுக்குப் பெரிதும் உதவுகிறது. அவர் இல்லாவிடில் கண்ணில்லாதவர் படும் துன்பம் போல் சீடன் அடைவன். அவர் வழிகாட்டல்கள் சீடனின் அறியாமை, வாதனை, மாயை ஆகியவற்றை நீக்குகின்றன. குரு இல்லா வித்தை வெற்றி பெறாது. அவரே மேல்நிலைக்கு அழைத்துச் செல்வர். அவர் உறுதுணையால் ஞானம் பெறலாம். அவர் பாதம் பற்றி வணங்க வேண்டும். அவர் கருத்துரைகளை எப்பொழுதும் நெஞ்சில் நிறுத்திட வேண்டும். மனம் எப்போதும் அவர் சொற்களுக்குக் கட்டுப்பட்டுச் செயல்பட வேண்டும். உண்மைப் பொருளை அவர் உணர்த்திட உணர வேண்டும்.

### 3.4.0 மெய்யுணர்தல்

மனிதப் பிறப்பின்/வாழ்வின் உண்மைப் பொருள்களையும், உறுதிப் பொருள்களையும் குரு உணர்த்த உணர்ந்து கொள்வது மெய்யுணர்வு எனப்படும்.

குருவின் வார்த்தை பிறவிப் பிணிக்கு மருந்து எனத் தேர்ந்து தெளிதல் வேண்டும். அவர் 'மெய்' 'பொய்' என்பனவற்றின் நுட்பம் அறிந்தவர் என அறிய வேண்டும். மெய் என்பது உடலின் தன்மைகளை நன்கு அறிந்து, அதனைத் தயத்துக்கு ஏற்பப் பயன்படுத்திக்கொள்ளும் வழிமுறையைக்

கடைபிடிப்பதும், அழியும் உடலை அழியாத நிலைக்கு மாற்றிக் கொள்வதுமாகும்.
சித்தர்களுக்கு மட்டும் இச்செய்கை தொன்று தொட்டுத் தொடர்ந்து வந்ததொரு ஆற்றலாகிறது. ஆதலின் சித்தர் பாடல்கள் பொய்மை நீக்கி, மெய்மை உணர்த்துவதாய் அமைந்திருக்கின்றன.

இலக்குடைய பாதைதான் ஞானப்பாதை. ஒரு குருவின் [illegible] கடைபிடிப்பதுதான் நன்மையைத் தரும். மெய்ப்பொருள் என்பது அழியாதது. மெய்யுணர்வு வழிதான் மெய்ப்பொருளை அறியவும், உணரவும், தெளியவும், அடையவும் முடியும். அவ்வறிவும் தெளிவும் தாமே தோன்றாது; பயின்று வருவ அவை குருவின் அருத்துரைகளால் வருவன.

குருவை நெஞ்சில் நிறுத்தி வணங்கினால்தான் மனக்கோணல் அறுபடும். அதன்பின் மெய்யுணர்வு தோன்றும். மெய்ப்பொருளை அறியாமல் நிகழ்த்தும் செயலால் பயன்விளையாது என்பதை,

"குருவி ருப்பதும் உள்ளத்தி லேமனக்
கோணல் அறுப்பதுந் தனக்குள்ளே
பொருளி ருப்ப தறியா மற்புடம்
போடுவ தெப்படி ஞானப்பெண்ணே"

(ப.சி.பெ.கோ.591) என மதுரை வாலைசாமி புகல்வர்.

குருவின் அருத்துரைகளால் மெய்யுணர்வு வரப்பெற்று அதன்மூலம் உண்டாகும் பயன்களை

"புத்திதரும் வித்தைதரும் பொல்லாப்பில் லாமல்நெஞ்சே
சித்திமுத்தி போகம் சேர்ந்திடலாம் - நித்தநித்தம்
தானந்த மானதொரு சற்குருவோ டேபழகி
ஆனந்த முன்னிருந்தக் கால்"

(ப.சி.பெ.கோ.165) என பட்டினத்தார் பட்டியலிடுவர்.

எக்காலமும் நிலையானதும் சோதி வடிவமானதுமான, அற்புதம் என்றழைக்கப்படும் மெய்யுணர்வினால் அடைந்த மெய்ப்பொருளை ஞானிகளாகிய சித்தர்கள் தம் நூல்களில் கூறியுள்ளார்கள். அவற்றைப் படித்து அறிவது எளிதல்ல. கற்றும் வருவதல்ல, குரு உபதேசத்தின் வழி ஒரே நோக்கமாக இருந்து காண்பது சிறப்பறிவு என்பதை,

"காலா காலங் கடந்திடு சோதியைக்
கற்பனை கடந்த அற்புதத்தை
ஞானம் பெரியவர் சொன்னதும் பொருளை
நோக்கத்திற் காண்பது கோளாறே"

(ப.சி.பெ.கோ.222) எனும் பாடல்வழி இடைக்காட்டுச் சித்தர் உணர்த்துவர்.

குருவின் அறிவுரையால் மெய்யுணர்வு கிட்டும் என்பதும், அது எக்காலத்திற்கும் பொருந்தியது என்பதும், அதை உறுதியாக இருந்து பெறவேண்டும் என்பதும் சித்தர்கள் கருத்துகளாகின்றன.

<u>3.4.1 பஞ்ச பூதங்களின் தன்மை அறிதல்</u>

மெய்யுணர்தல் என்பதன் முதற்படியாக பஞ்ச பூதங்களின் தன்மை அறிதல் வேண்டும்.

நிலம், நீர், காற்று, அனல், ஆகாயம் ஆகியவை பஞ்ச பூதங்களாகும். இவ்வைந்தும் ஒன்று சேர்ந்த நிலையில் இருப்பதால்தான் உயிரினங்கள் தோன்றி வாழ்ந்து வருகின்றன. உயிரினத்தில் மனிதன் சிறப்புடையவனாக உள்ளான். பகுத்து அறியும் நிலை மனிதனுக்கு மட்டுமே உண்டு. உலக இன்பதுன்ப நிகழ்வுகளுக்கு ஆட்படும் மனிதன்

பல்வேறு நிலைகளிலும் ஆயத்தலைப்பட்டான். இயற்கையின் நுட்பத்தை அவன் உணர்ந்தான். இயற்கைக்கும் தமக்குமுள்ள தொடர்பினை அவன் ஆய்ந்தான். இயற்கை தம்மைத் தோற்றுவித்து வாழ்வித்து பின் மாய்வித்து விடுகின்ற இயல்பினை அவன் அறிந்தான்.

இயற்கையின் நிகழ்ச்சிகளிலிருந்து மாறுபட்ட எண்ணப்பதின் விளைவாக இயற்கையின் செயல்களை/இயக்கங்களை அறிந்து செயற்பட வேண்டும் என்று சித்தர்கள் வலியுறுத்துகின்றனர்.

ஐந்தெழுத்து என்பது நமசிவய என்பதாம். நமசிவய என்றால் பஞ்ச பூதங்கள் என்று பொருள். இக்கருத்தைச் சித்தர்கள் வெளியிடுகின்றனர். இயற்கையாகிய பஞ்சபூதத்தை அதன் துணைகொண்டே வென்று விடுகிறார்கள் சித்தர்கள். இதனை

"ஒத்துநின்ற ஓங்காரம் மண்ணை யுண்ணும்
உருவியந்த மண்சென்று சலத்தை யுண்ணும்
பத்திநின்ற சலமதுதான் தீயை யுண்ணும்
பாங்கான தீச்சென்று காலை யுண்ணும்
வெத்திநின்ற கால்சென்று விண்ணை யுண்ணும்
விருந்ததப்பா சடமென்வே தாந்தப் பேச்சு..."

(ப.சி.பெ.ஞா.703) என்னும் கூற்றால் தெளியலாம்.

உடம்பினுள் நமசிவய என்று மூலாதாரத்திலிருந்து சுழுமுனை வரை ஐந்து பகுதிகளாகப் பிரித்து, அந்த ஐந்து இடங்களுக்குப் பஞ்ச பூதங்களைக் குறிப்பிட்டு, அவற்றை அறிந்துகொள்ள வேண்டும் என சட்டை முனிவர் அறிவுறுத்துவர்.

சித்தர்கள் மொழி குழூஉக்குறியாக, பல இடங்களில் காணப்படுகின்றது. அவற்றை உணர்ந்தவர்களின் உதவியால் தான் உணரமுடியும்.

பஞ்சபூதங்களின் சிறப்பை அறிந்திடவேண்டும் என்பதை சிவவாக்கியர் அழுத்தமாகக் குறிப்பிடுவர். (ப.சி.பெ.கோ 48) நமசிவய என்பதன் வகையறியாமல் உள்ளனர் என்பதைப் பட்டினத்தார் மொழிவர். (ப.சி.பெ.கோ 154) இயற்கையாகிய பஞ்சபூதங்களின் தன்மையறிந்து உண்மையைத் தேடுவதன் சிறப்பைக் கடுவெளிச்சித்தர் குறிப்பிடுவர் (ப.சி.பெ.கோ 237).

சித்தர் பாடல்களில் காணப்படும் பஞ்சபூதக் கருத்துகள்.

| எழுத்து | பெயர் | கடவுள் | தொழில் |
|---|---|---|---|
| ந | மண் | பிரமன் | ஆக்கல் |
| ம | நீர் | திருமால் | காத்தல் |
| சி | அனல் | உருத்திரன் | அழித்தல் |
| வ | காற்று | மகேசுவரன் | மறைத்தல் |
| ய | விண் | சதாசிவம் | அருளல் |

என வகைப்படுத்திடப்பட்டுள்ளன.

கொங்கணரும் (ப.சி.பெ.கோ 328, 329) மதுரை வாலைசாமியும் (ப.சி.பெ.கோ 575, 589) இவற்றைத் தெளிவாக்குகின்றனர். இதனை அரன் செய்வதாக தவத்திரு. ரெங்கராஜ தேசிக சுவாமிகள் கூற்றும் அமைந்துள்ளது.[12]

இயற்கையாகிய பஞ்சபூதங்களின் கலவையால் ஏற்படும் செய்கைகளைக் கொங்கணர் பின்வருமாறு கூறுவர்.

"செகம்ப டைத்ததும் அஞ்செழுத்தாம் பின்னும்
சீவன் படைத்ததும் அஞ்செழுத்தாம்
உகமு டிந்தது மஞ்செழுத் தாம்பின்னும்
உற்பன மானது மஞ்செழுத்தாம்"

(ப.சி.பெ.கோ.325) ஐந்தெழுத்து என்னும் பஞ்சபூதத்தின் செய்கையால் உலகம் தோன்றியது. இயற்கையாய் உள்ள பஞ்சபூதங்களின் துணையால் உயிரினங்கள் தோன்றி வருகின்றன. உயிரினங்கள் வாழவும் அவை உதவுகின்றன. வாழும் உயிரினங்கள் அழிந்திடவும் அதே பஞ்சபூதங்களே காரணமாக உள்ளன. இயற்கை, உயிரினங்களைத் தோற்றி, வளர்த்து, அழித்திடவும் செய்கிறது. பின் மீண்டும் தோற்றமெடுக்கவும் அது காரணமாகிறது.

மனிதன் பஞ்சபூதங்களின் கூட்டமைப்பாக உள்ளான். உடம்பினுள் பஞ்சபூதங்களின் செயல்களை மனிதன் அறிந்திட வேண்டும். உடம்பமைந்த தன்மை அறிந்து, பஞ்சபூதங்களின் சிறப்பும், அதனைப் பற்றிய அறிவும் அறிந்திட வேண்டும் என்பது சித்தர்களின் கருத்தாகும்.

பஞ்சபூதங்கள் தனிப்பட்டிருக்கும்போது அறிவோ உணர்வோ கிடையாது. ஐந்தும் கலக்கும்போது ஓரறிவு முதல் ஆறறிவு வரை உயிரினங்கள் தோன்றி, வளர்ந்து, அழிந்து விடுகின்ற உணர்வை

உணர்ந்திட வைப்பதுதான் சித்தர் பாடல்களில் காணப்படும் புதுமையாகும்.

சித்தர்கள், பஞ்சபூதங்களாகிய இயற்கையை வென்று அதனை எய்தியவர்கள். இயற்கை எய்திய நிலை முத்தி பெறுவதாகும். அந்நிலை இறப்பு அன்று. தவமியற்றி, பஞ்ச பூதங்களாலான உடம்பினைப் பயன்படுத்திடும் வழியைச் சித்தர்கள் அறிந்து வெளிப்படுத்தியுள்ளனர்.

பஞ்ச பூதங்களின் தன்மைகளை உணர்ந்து வென்றவர் இறைநிலையை அடைந்தவர்களாகக் கருதப்படுவர் என்பதும் சித்தர்கள் அவர்களையே குருவாகக் கொள்வர் என்பதும் புலனாகின்றன.

3.4.2 தலைவனை அறிதல்

குருவாக உள்ளவர்தான் ஞானத்தை உணர்த்துவர். ஞானத் தலைவனை அறிந்து ஒழுகுதல் சீடர்களின் கடமையாகும். தலைவனின் பெருமை, செயல், அருளாற்றல் முதலிய குணங்களை உணர்ந்து மேல்நிலை அடைய சீடன் முற்பட வேண்டும்.

உலகியலை அறிந்தபின் உயர்ஞானம் கைகூட குருவை/தலைவனை அறிந்திட வேண்டும். குருவே தலைவனாக உள்ளார். தலைவனின் சிறப்பையெல்லாம் அறிந்து, தொடர்ந்து நினைத்துக் கொண்டு மனதால் வணங்கி வழிபடுதல் வேண்டும் என்பதைப் பத்திரகிரியார்,

"தெரிவையுறும் பக்குவத்தின் சீராட்டெல் லாமறிந்து
குருவையறிந் தேறினைத்துக் கும்பிடுவ தெக்காலம்'

(ப.சி.பெ.கோ.178) எனத் தெரிவிப்பர்.

குருவின் பெருமையை உணர்ந்தவர்கள் அவர் அடியொற்றிச் செயற்படுவர் என அகத்தியர் கூறுவர். குரு கூர்மையான நுண்ணறிவு படைத்தவர். அவரை அறிவது நன்னெறியை அறிவதாகும். புத்தியுள்ளவராய்ப் புண்ணியம் மிகுந்தவராய்ப் புவியில் கோடிக்கு ஒருவர் தான் 'குரு'வாக இருப்பார்கள். அவரைப்பின்பற்றி நன்னெறி அடைய முயல வேண்டும் என்பதை அகத்தியர்,

"புத்தியினா லறிந்தவர்கள் புண்ணி யோர்கள்
பூதலத்தில் கோடியிலே யொருவருண்டு..."(ப.சி.பெ.கோ.306)

என்றும்

"கோடாய கோடியிலே யொருவ னுண்டு..."(ப.சி.பெ.கோ.307)

என்றும் வலியுறுத்துவர்

தலைவன் கருணையாளன்; பெருமைக்குரியவன்; அவன் அருளால் யோகம், ஞானம் முதலியவை சித்திக்கும், ஆகவே, குருவாகிய தலைவனே அருளுகின்றான் என்றெண்ணி, அவன் ஆணைக்குட்பட்டு, செயல் செய்து வெற்றி பெற வேண்டும் என்று காகபுசுண்டர் 'நாமென்ற சொல்லற்று யோக ஞானம்... (ப.சி.பெ.கோ.761) எனப்புலப்படுத்துவர்.

தலைவன் சிந்தையாகவும், உறக்கமாகவும் உணர்வாகவும், எல்லாமாகவும் இருக்கின்றான். அவனை அறிய விரும்புபவர்களின் சிந்தையில் உள்ளான். தலைவனின் திருவடியை மறந்ததே இல்லை என்றும் ஒருபொழுது தாம் மறந்தாலும் தமை மறவாது தம்முள் குடிகொண்டு அருள் செய்ய வேண்டு

மென்றும் தலைவனை வேண்டுவர் சிவவாக்கியர் (ப.சி.பெ.கோ.39,62)

தலைவனைத் தேடி நாடினால் அவன் திருவடி கிட்டும் என்பதைப் பட்டினத்தார் 'ஐயம் அறுத்தவனை ஆராய்வர் ருண்டானால்/ வையகத்தே வந்து மலர்ப்பதம் வைத்திடுவான்' (ப.சி.பெ.கோ.136) எனக் குறிப்பிடுவர். இவற்றால் தலைவனை அறிய முற்படும் ஆர்வத்தைச் சித்தர்கள் தூண்டுதல் புலனாகும்.

நூல்கள்பல கற்றிருந்தாலும், பெருஞ்செல்வம் பெற்றிருந்தாலும், தலைவனை அறியாதோரால் நல்வழி அடைய முடியாது என்பதைப் பட்டினத்தார் 'என்னதான் கற்றாலென் எப்பொருளும் பெற்றாலென்/ உன்னை யறியாதார் உய்வரோ பூரணமே' (ப.சி.பெ.கோ.153) எனக் கூறுவர்.

குரு கற்ற கல்வி உயர்வானது. அவர் பிறப்பும் இறப்பும் அற்றவர். அவர் பேரறிவை அறிய முற்படுவது சீடரின் தலையாய கடமையாகும்.

தலைவன் அருளால் தெளிவு பெறலாம் என்பதும் அந்தத் தெளிவுடைய சிந்தையினால் தான் மேல்நிலையை அடைய முடியும் என்பதும் அவன் 1 திருவடியே கதி என்று இருப்பதே உய்யும் வழியாகும் என்பதும் சித்தர்கள் உணர்த்தும் கருத்துகளாகின்றன.

3.4.3 தன்னை அறிதல்

தலைவனின் நற்குணங்களை அறிய முற்படும் ஒரு சீடன் சிந்தித்துச் செயலாற்ற வேண்டும். ஒருவன் தன்னை அறிவதை அறிவு என்று சித்தர்கள் சொல்லுவர்.

ஞானம் என்பது மனிதனின் உடல் உயிர் பற்றிய செயற்பாட்டினைத் தவத்தால் நன்னெறிப்படுத்தி மேலோங்கச் செய்வதாகும். அந்த ஞானம் குரு காட்டிக்காட்டினால் தான் புலப்படும் என்பதை 'என்னிலே யிருந்ததொன்றை யானறிந்ததில்லையே/ . . . என்னிலே யிருந்துணர்ந்து யானுணர்ந்து கொண்டனே' (ப.சி.பெ.கோ.4) என சிவவாக்கியர் குறிப்பிடுவர்.

கடலில் வாழும் ஆமை கரையில் முட்டையிடும், பின்னர் கடலில் திரிந்து கொண்டிருக்கையில் அது முட்டையிட்டதை நினைத்தபொழுது முட்டையினின்றி உருவம் தோன்றி வெளிப்படும். நினைவுதான் தோற்றத்திற்குக் காரணம் என்பர். அதுபோல தலைவனை உணர்வு மூலமாக நினைத்திட உடலுக்குள் உள்ள மூலாதாரச் சக்தியைத் தட்டி எழுப்புவதே சிறந்த ஆன்மீக நெறியாகும். இதனைத் தன்னை அறிதல் என்பர். இதனை

"கடலிலே திரியுமாமை கரையிலேறி முட்டையிட்டுக்
கடலிலே திரிந்தபோது ருபமான வாறுபோல்
மடலுளே யிருக்குமெங்கள் மணியரங்க சோதியை
உடலுளே நினைந்து நல்ல வுண்மையான தன்மையே"

(ப.சி.பெ.கோ.18) என விளக்குவர்.

மனிதன் பொய், களவு முதலிய பல தீய செயல்களைச் செய்கிறான். அந்நிலையையுடைய அவன் மேல்நிலையடைய முயலும்போது தன்னிலையறிந்து

தான் செய்யும் இழிச்செயலை உணர்ந்து தெளிவு பெற வேண்டும் என விரும்புவதே தன்னையறிய முற்படுகிற செயலாகும் என்று சிவவாக்கியர் குறிப்பிடுவர். (ப.சி.பெ.கோ.43).

ஞானத்தைத் தேடி எங்கும் அலைய வேண்டுவதில்லை. அதனை ஒருவர் தம்முள் காண்பது சிறப்பறிவாகும். அவ்வறிவை உணராத வரைப் பாவிகள் என சிவவாக்கியர் அழைப்பர் (ப.சி.பெ.கோ.44) இறைவனை நாடி அங்குமிங்கும் ஓடித் திரிந்து, தேடி, பின்பு வாடி, முடிவில் தன்னுள்ளே தலைவனைக் கண்டு மகிழ வேண்டும் என்று அறிவதும் உணர்வதும் எப்பொழுது என வினா எழுப்புவதன் வழி தன்னையறிந்திட அறிவுரை பகர்வர் பத்திரகிரியார் (ப.சி.பெ.கோ.181).

பட்டினத்தார், தன்னையறியும் அறிவே தகுதியுடையது; தன்னையறியாமலும் தலைவனின் சிறப்பை உணராமலும் அழிந்து படுவது குறையறிவு என்று கூறுவர். உடலுக்குள்ளே தலைவன் தங்குவதை யறிந்திடாமல் யாரும் தன்னை அழித்துக் கொள்வதை அவர் விரும்பவில்லை (ப.சி.பெ.கோ.150)

தன்னையறியும் அறிவு உயர்வானது என்றும் மற்றைய அறிவெல்லாம் பேய் அறிவாகும் என்றும் அப்பேயறிவினால் நிலையான இன்பம் கிட்டாது என்றும் அகப்பேய்ச்சித்தர் உணர்த்துவர். (ப.சி.பெ.கோ.248)

தனையறியாதாரிக்கு ஞானம் கிட்டாது, ஞானவின் பாதம் கிடைக்காது; வாசியடங்காது; மேலான வீடு காணவரிது. சோதி ஏற்ற முடியாது; பளிங்கு மேடை எனும் சுழுமுனைச் சிறப்பு கிட்டிடாது என்றும் ஞானநிலை எய்த வாய்ப்பில்லை என்றும் கணபதிதாசர் குறிப்பிடுவர். (ப.சி.பெ.கோ.552)

தன்னையறிதலின் சிறப்பைப் பற்றி,

"இன்று உலகின் சாதிமதப் பேதச் சழக்குகளும் அதனால் எழும் துன்பங்களும், பொன் பொருளாசையால் தோன்றும் பூசல்களும் போர்களும் அழிந்து ஒழிந்து அமைதி நிலவ அடிப்படைத் தத்துவம் 'தன்னை அறிவ தொன்றே' ஆகும்" [13]

எனக் குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது.

ஞான உணர்வைத் தூண்டுவதும், தம்முள் உள்ள உயர்தன்மையைப் பெருக்கிக் கொள்வதும், வெற்றிப்பாதைக்கு வழி வகுக்கும். தன்னுள் தலைவனைத் தங்க வைக்க வேண்டும் என்பதை அறியும் அறிவே தன்னையறியும் அறிவாகும் என்பதையும் தன்னையறியும் அறிவு உயர்வானது என்பதையும் அவ்வறிவைப் பெற முயல்வது சிறப்பறிவாகும் என்பதையும் சித்தர் பாடல்கள் உணர்த்துகின்றன.

## 3.4.4 வினை அறிதல்

மனித வாழ்வில் நல்வினை, தீவினை எனும் இரு வினைகள் நிகழ்கின்றன. வினையின் நீங்கி விளங்கிய அறிவு பெறல் வேண்டும். உடல், உயிர் இரண்டிற்கும் வினைகளால் தொடர்பு உண்டு என்றும் அவ்வினைகளே அவற்றைச் செயற்பட வைக்கின்றன என்றும் அவ்வினைகளை செய்வதற்குத் தேவையான வழிகளைப் பற்றி அறிவதும் வினை அறிதல் என்பதாகும்.

ஒட்டியிருக்கும் உடலும், உயிரும் வெட்டிக்கொள்கிற நிலையை உருவாக்குவதே அவ்வினைகள் என்று சிவவாக்கியர் கூறுவர். உடல், உயிர் பிணக்கு என்பது இறப்புதான். இறப்பைத் தவிர்ப்பது தான் வினை வென்றவர் செய்கை. இறைவன் மரணம் தவிர்த்தவன். வினை நீங்கினால் பேரின்பநிலை கிட்டும் என்பதை,

"பிணங்குமோ ரிருவினை பிணக்கறுக்க வல்லிரேல்
பிணங்கிலாத பெரியவின்பம் பெற்றிருக்க லாகுமே"

என சிவவாக்கியர் குறிப்பிடுவர்.

ஞானக்கனல் எழுந்திட, எழுந்திட வல்வினைகள் சிதறி அழிந்தொழியும் என்று சிவவாக்கியர் வினைகள் அழியும் வகைபற்றிக் கூறி, வினையறிதலின் தேவையையும் வலியுறுத்துவர் (ப.சி.பெ.கோ.67).

காலன் வருமுன் வினையை அறுக்கும் ஞான வழிமுறையைத் தேடி அடைந்திட வேண்டும் என பட்டினத்தார் அறிவுறுத்துவர் (ப.சி.பெ.கோ.159) வினை அறுத்தல் பற்றி பத்திரகிரியார்

"இம்மைதனிற் பாதகனாய் இருவினைக்கீ டாயெடுத்த
பொம்மைதனைப் போட்டுன்னைப் போற்றிநிற்ப தெக்காலம்"
(ப.சி.பெ.கோ.177)

என விளங்குவர்.

தலைவனின் திருவடியில் சேர்ந்திட்டால் வினைக்குழியில் அழுந்தாமல் இருக்க முடியும் என சிவானந்த போதம் கூறுதலும் இங்கு மனங்கொள்ளத்தக்கது. (ப.சி.பெ.கோ.411)

வினைப் பயனை உணரவில்லையெனில் உயிர்கீழான புலனின்பங்களை நுகர்ந்து பேரின்பக் கரையை யடையாது திகைக்கும் என்பர்.[14] மேலும் அது தொடர்ந்து வரும் தன்மையது.[15]

வினை என்பது மனித முயற்சிகளுக்குத் தடையாக வரும் என்பதும், அதுவே மடமையை உண்டுபண்ணும் என்பதும் அதனை வெல்லவேண்டும் என்பதும் சித்தர் பாடல்வழி ஒப்புறப்படுகிறது.

3.4.5 தன்பிழை உணர்தல்

தாம் செய்த பிழையை உணர்ந்தால் தான் மெய்யுணர்வு கிட்டும். பிழைகளையும் குற்றங்களையும் ஆராயும்வழி உண்மை உணர்வு தோன்றும். தம்குற்றம் காணின் துன்ப நிலை மாறும். தலைவனின் திருவடியை வணங்கிட அருள்கிட்டும். அருளால் மேன்மையடையும் உருவாகிறது.

செய்யும் செயலில் நல்உணர்வோடு ஈடுபட வேண்டும் இந்நிலை எய்துவதற்குத் தன்பிழையை உணர வேண்டும்.

வினையின் செயலால் உழன்று நாளுக்கு நாள் மெலிந்து, நலிந்து தட்டுத் தடுமாறுகிற மனத்தை நல்வழிப்படுத்தி மெய்யுணர்வு அடைய தன்பிழை உணர்தல் உதவுகிறது.

ஆன்மீக நெறியில் சித்தர்கள் தூய்மையை நாடிச்செல்வர். தாம் செய்த பிழையை எண்ணி அவர்கள் வருந்துவர், பிறர் தமக்கும் உணர்த்துவர். 'எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய்' என்று பட்டினத்தார் இறைஞ்சுவார். (ப.சி.பெ.ஞா.94)

தூயநெறியில் செல்லும் சீடன் சொல்லாலும் சிந்தனையாலும், பொல்லாத தீவினையாலும், பார்வையாலும் பிழை செய்யக்கூடும் என்றும் தலைவனின் திருநாமத்தை நினையாதது பிழை என்றும் பட்டினத்தார் குறிப்பிடுவார். (ப.சி.பெ.கோ.94)

பல உயிர்களைக் கொன்றேன்; அவற்றைத் தின்றேன்; அவையன்றி பல தீங்குகள் செய்தேன். ஆயினும் குற்றங்களைப் பொறுப்பாய் என்று பட்டினத்தார் வேண்டுவர் (ப.சி.பெ.கோ.98) தன் பிழையைப் பிறரும் உணர வேண்டும் என்பதே அதன் உட்பொருளாகும்.

பிழையை உணர்வதன்வழி ஞானம்பாதை எளிதாகிறது என்பதும் பந்தபாசம், காமம், வெகுளி, மயக்கம் முதலியவற்றில் உழலாமல், 'யான்', 'எனது' என்னும் செருக்கிற்கு ஆட்படாமல் உயர்வடைய வேண்டும் என்பதும் சித்தர்கள் உணர்த்தும் கருத்துகளாகின்றன.

## 3.4.6 காமம் வெல்லல்

மனித வாழ்வியலில் சிற்றின்பம் தருவது காமம் துய்த்தல் ஆகும். பொதுவாக பலரும் அதனை விரும்புவர். அதனை ஆண் பெண் இணைவிழைச்சு என அழைப்பர். அதனைத் துய்த்தல் என்பதும் வெல்லல் என்பதும் வேறாகும். அதன் உணர்வுகளை விட்டுவிட்டு மேன்மையான தூய ஆன்மீக நெறிவழிச்செல்வோர் மெய்யுணர்வை அடைய முற்படுவர். நல்லுணர்வுகளால் ஒழுங்குபட்ட மனம் தான் ஞானவழிமுறையனைக் கண்டுபிடிக்க முடியும். அந்நல்வெறிகளில் ஒன்று தான் காமம் வெல்லல் ஆகும்.

காமத்தின் தன்மையைப் படிப்படியாகக் குறைத்து, வெற்றி பெற்ற தலைவனின் திருவடிகளைத் தொடர்ந்து பூசித்தால், பற்றற்றவன் மீது பற்றுவைத்தால், பற்றற்ற தன்மையைப் பற்றிட முடியும் என்பது சித்தர்களின் கருத்தாகும். சிற்றின்பம் நீக்கி, பேரின்பம் அடைய விரும்புவோரின் செயலாக்கமே காமம் வெல்லல் ஆகும்.

துறவு மேற்கொண்டவர் தம் மனத்தின்கண் காமம் எனும் மாசு இல்லாதவராக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் மெய்யுணர்வு எய்த முடியும். துறவு, தவம், தியானம், யோகம், ஞானம் என்பன வெல்லாம் மெய்யுணர்வுச் சொற்கள். 'வீடு' நோக்கிய தவசிகள் கடந்திடும் பாதைதான் காமம் வெல்லல். அவர்கள் கைக்கொள்ள வேண்டுவனவற்றுள் இதுவும் ஒன்றாகிறது. இது பேச்சளவில் மட்டுமின்றி மனதால் விலகிநிற்கும் நிலைமையைக் குறிப்பதாகும்.

மனத்திடை மாசற்றவர்கள் சிற்றின்பத்திற்குரிய மகளிர் அருகில் இருப்பினும் மனதால் விலகிப்பிறப்பறுத்திடும் தவச்செயலில் சார்வர். இதனைச் சிவவாக்கியர்

"மனத்தகத் தழுக்கறுத்த மவுனஞான யோகிகள்
முலைத்தடத் திருக்கினும் பிறப்பறுத் திருப்பரே"

(ப.சி.பெ.கோ.31)

எனச் சொல்வர்.

'பெண்ணாசையை நீக்குதல்' சித்தர்கள் சுட்டிக் காட்டும் தவநெறிகளில் ஒன்றாகும். அழகிய கால்களையும் நீண்ட கைகளையும், நல்ல கண்களையும், வட்ட முகத்தையும் காட்டி ஆசையைத் தூண்டும் மங்கையரை மறந்து பேரின்ப

வாழ்வினை எண்ணிச் செயற்பட வேண்டும் என்பதைப் பத்திரகிரியார்,

"கால்காட்டிக் கைக்காட்டிக் கண்கள் முகங்காட்டி
மால்காட்டு மங்கையரை மறந்திருப்ப தெக்காலம்"
(ப.சி.பெ.கோ.174)

என அறிவுறுத்துவார்.

மனித நிலையில் இருக்கும் ஒவ்வொருவரும் காமத்தினால் இன்பம் துய்த்திடுவர்; அதனைக் கடப்பது எளிதன்று. உயிர் பிரியும் வரையும் அவ்வுணர்வு நீடிக்கும். அதனைக் கடக்க முடியும் என்பதைச் சித்தர்களின் பாடல்கள் விளக்குகின்றன.

இதனை பத்திரகிரியார்

"காமக் கடல்கடந்து கரையேறிப் போவதற்கே
ஓமக் கனல் வளர்த்தி யுள்ளிருப்ப தெக்காலம்"

(ப.சி.பெ.கோ.185)

எனப் புலப்படுத்துவர்.

காமக்கடலைக் கடந்து, கரை ஏறிட, உடலின் உள்ளே மூலாதாரத்தில்ia தலைவனின் வழிகாட்டுதலினால் ஓமக்கனல் வளர்த்திட வேண்டும். அதன்பின் காமஉணர்வு எரிந்துவிடும். இதனையே மன்மதனை எரித்தல் என்பர் உலகோர். இந்நிலை அடைய விரும்புவோர் கைக்கொள்ளும் செயல்தான் காமம் தவிர்த்தலாகும்.

ஆசைதரும் மாதரை நீங்கி, ஓங்கார ஓசைதரும் குருவின் திருவடியை அடைந்து மேன்மை பெறவிரும்புவது சித்தர்களின் நோக்கமாகிறது.

நல்ல உணர்வே நன்மைதரும். தூயவால் பேரின்பத்தையும் அடைந்திட, நிலையில்லாச் சிற்றின்பத்தை நீக்கிட வேண்டும் என்று இடைக்காட்டுச் சித்தர். 'சிற்றின்பம் நீக்கினேன் மற்றின்பம் நோக்கினேன்' (ப.சி.பெ.கோ.225) என்றோதுவார்.

பெண் மீது அன்புகொண்டு வாழ்வு எய்துதல் இல்லறமாகும். பெண் உயர்வினை மாற்றித்தலைவன் மீது பற்று வைத்து வாழ்வது துறவறமாகும். காமனின் கணை என்னும் ஆசையுணர்வு கனல்போல் உருவாகி மனிதனை வேக்காடு காட்டிச் சாக்காட்டிற்கு அனுப்பிவைக்கும்.

பொங்கி எழும் அந்தக் காம உணர்வு போன்று தம்மிடமுள்ள நல்லுணர்வை ஒருவர் தலைவன் மீது செலுத்தித் தவம் இயற்றும் வாய்ப்புக் கிட்டுமானால் மூன்றாம்கண் என்னும் சுழிமுனைக்கண் தவத்தின் வலிமையால் திறந்திடுமேயானால் அவருக்கு அக்காம உணர்வுகளையெல்லாம் அழிந்திடும் அவ்வுணர்வுகள் வெந்துபோகும்; மாண்டுபோகும்; தூய நல்லுணர்வு ஆகிய மெய்யுணர்வு கிட்டும்; செயற்பாடுகள் மேன்மையடையும் இதனை அழுகணி சித்தர்

"மாமன் மகளடியோ மச்சினியோ நானறியேன்
காமன் கணையெனக்குக் கனலாக வேகுதடி
மாமன் மகளாகி மச்சினியும் நீயானால்
காமன் கணைகளெல்லாம் என்கண் ணம்மா
கண்விழிக்க வேகாவோ" (ப.சி.பெ.கோ.311)

என உணர்த்துவார். இதனால், தவத்தால்தான் காமத்தை வெல்ல முடியும் என்பது புலனாகிறது.

பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் பல பெண்ணாசையைக் கடிந்து கூறுகின்றன. பெண்ணின்பத்தை விரும்பி, புகழ்ந்து, போற்றாமல் துறவு பூண்டோம் என்றும் பாம்பாட்டிச் சித்தர் கூறுவார். (ப.சி.பெ.கோ.207 ))

"பெண்ணார்தம் ஆசைதன்னை விட்டு வந்தால்
பேரின்ப முத்திவழி பேசுவேனே"

(ப.சி.பெ.கோ.340)

என்று, ஆசான் சீடனுக்குக் கூறும் நிலையில் உரோமரிஷி பெண்ணாசையை நீக்க வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்துவார்.

மதுரை வாலைசாமியும் இக்கருத்தினை,

"கண்ணா லேமனக் கண்ணா லேயதைக்
கண்டா லேவழி யுண்டாகும்
பெண்ணாசை தன்னை யடுக்கா மல்வழி
பேசிப் பாரடி ஞானப்பெண்ணே"

(ப.சி.பெ.கோ.580) என வெளிப்படுத்துவர்.

மேற்காட்டியவைகளிலிருந்து சித்தர்கள் மாயையாகிய காம உணர்வினை வென்றவர்கள் என்பது புலனாகிறது. இதனை அரன் செய்வதாக

உலக விவகாரங்கள் யாவும் மாயைதான்,
யோகிகள் இந்த மாயைக்கு அப்பாற்பட்டவர்கள்.
யோகியின் நெற்றிக்கண் திறந்ததும் மாயை
தன்சக்தியை இழந்துவிடும். அப்போது மாயை

> செயலாற்ற முடியாது. இந்நிலையே சிவநிலையாகும்.
> சிவன் நெற்றிக் கண்ணைத் திறந்து, மன்மதனை
> எரித்த தத்துவம் இதுவேயாகும்[16]

என்னும் கூற்று உள்ளது.

ஞான உணர்வு மிகும் காலம், ஊன உணர்வுகள் மங்கிட வேண்டும் என்பதும் ஞானப்பாதையில் செல்லும் போது பெண்ணின்பம் விரும்புவது தவத்துக்கு அடுக்காத செயலாகும் என்பதும், அது உடல் அழிவுக்கு வழி வகுக்கும் என்பதும் சித்தர்கள் கருத்துகளாக வெளிப்படுகின்றன.

### 3.4.7 ஐம்பொறி அடக்கம்

பெண்ணின்பத்தைத் தூண்டச் செய்வது ஐம்புலன்கள். அப்புலன்களை அடங்கச் செய்வதே அடுத்தபடி நிலையாகிறது. ஐம்பொறிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவை தத்தம் செயலால் மனிதனைச் செயற்படுத்துகின்றன. பொறிவழியே சென்றால் நெறியறிய முடியாது. பொறியின் வாயில்கள் ஐந்தையும் மனத்தின் தவ வலிமையால் அவித்துவிடுவது துறவு மேற்கொண்டோர் அடையும் மெய்யுணர்வாம்.

ஐந்து பொறிகளும் மனிதனை ஆட்டிப்படைக்கும். அவ்வைந்தும் தம்வழியே இழுத்துச் செல்லும். அவற்றின் வழியே சென்றால் அலைந்திட வேண்டிவரும். அந்த அலைச்சலுக்குப் பின் மனம் பாழ்பட்டுப்போகும். உண்மையுணராததால் மனமானது வெந்து நொந்துபோகும். அப்படிப்பட்டச் சூழலில் இருந்து தப்பித்து உண்மையான உணர்வினைக் குருவினால் உணர்த்தப்பட்டு LQ) நல்வழியை விழிப்புணர்வுடன் அறிந்து தெளிந்திட வேண்டும் என்பதைப் பத்திரகிரியார்,

"ஐந்து பொறிவழிபோய் அலையுமிந்தப் பாழ்மனத்தை
வெந்து விழப்பார்த்து விழிப்பதினி எக்காலம்"

(ப.சி.பெ.கோ.180)

என உணர்ந்தவர்.

இதனால், பொறிகள் அடங்காதவர்க்கு மேன்மை கிட்டாது என்பது புலனாகிறது.

இடைக்காட்டுச் சித்தர் பொறிகள் பற்றி

"கட்டாத நாயெல்லாங் காவலுக் கெப்போதும்
கிட்டாவென் றூதுகுழல் - கோனே
கிட்டாவென் றூதுகுழல்"

(ப.சி.பெ.கோ.233) எனக் கூறுவர். அவர் ஐம்பொறிகளை நாய்கள் என்றும் அவைகள் ஒரு கட்டுப்பாட்டுக்குள் இருக்க வேண்டும் என்றும் அறிவுறுத்துவது மனங்கொள்ளத்தக்கது. புலனடக்கம் என்பது புலன்களைப் பயனுள்ள பாதைகளில் மடைமாற்றலாகும்.[17]

ஐம்புலன்களையும் அடக்கி, அறிவு வழி மெய்யுணர்வுதனை அடைய முற்பட வேண்டும் என்பது சித்தர்களின் நோக்கமாகிறது. இதனை

"அல்லல்வாச லொன்பது மறுத்தடைந்த வாசலும்
சொல்லும்வாச லோரைந்தும் சொம்மிவிம்மி நின்றதும்
நல்ல வாச லைத்திறந்து ஞானவாச லூடுபோய்
எல்லைவாசல் கண்டவ ரினிப்பிறப்ப தில்லையே"

(ப.சி.பெ.கோ.20)

என்னும் பாடலால் அறியலாம்.

'அல்லல் வாசல் ஒன்பது' என்பதும், 'சொல்லும் வாசல்' ஐம்பொறிகள் என்பதும், 'ஞானவாசல்' பத்தாம் வாசலாகிய சுழிமுனை என்பதும் புலப்படுகின்றன. இங்கு

"சொல்லும் வாசல் ஐந்து என்பது ஐம்புலன்களைக் குறிக்கும். ஆசைகளை வளர்ப்பது இந்த ஐம்புலன்களே. இந்த ஐம்புலன்களையும் அடக்கினால் மனம் ஒருமைப்பட்டு புதிய வாசல் திறந்து அது ஞானவாசலுக்கு வழிகாட்டும். அந்த ஞானவாசல் வழியாகப் போய், அதன் எல்லையை உணர்ந்தவர்கள் பரப்பிரம்மத்தோடு ஐக்கியமாகிப் போகிறார்கள், பேரானந்த பெரு வெளியில் அவர்கள் சங்கமித்து விடுகிறார்கள்" [18]

என்னும் விளக்கம் கருதத்தக்கது.

பேரின்ப வாழ்வுக்குப் புலனடக்கம் பெரிதும் துணை நிற்கிறது. ஆசைகளில் இருந்து விடுபடுகின்றவர்கள் மெய்யுணர்வு எய்தி மெய்ப்பொருள் பெற்று உயர்வடைகிறார்கள்.

ஐம்புலன்களின் செயல்பாட்டினை உள்ளடக்கியது மனம் என்பதும் இந்த ஐம்புலன்களின் மூலமாகத்தான் மெய்யுணர்வினை அது பெறுகிறது என்பதும் அது இழுக்கின்ற திசைகளில் எல்லாம் அலைந்து பிறவியை வீணாக்கிக் கொள்ளக்கூடாது என்பதும் சித்தர்களின் கருத்துகளாகின்றன.

## 3.4.8 பற்றறுத்தல்

அவா என்னும் ஆசையை நீக்குதல் பற்றறுத்தல் என்பதாகும். ஆசைகளை ஒழுங்குப்படுத்தி ஞானப்பாதையில் செலுத்தியோர் பற்றை அறுத்திடும் வல்லமை பெற முடியும். பொறிபுலன்களின் வழி ஆசைகளை

அகற்றினால், பற்றற்ற தன்மை கிட்டும். பற்றற்ற நிலை அடைய பற்று அறுத்தல் வேண்டும். அகத்தில் ஆவின் மீது பற்றுவைத்து பிறபற்றுகளை ஒழித்து மெய்யுணர்வினை அடைய வேண்டும் என்று சித்தர்கள் குறிப்பிடுவதை பற்றறுத்தல் எனும் சொல் உள்ளீடாகக் கொண்டுள்ளது.

பற்றறுத்த பின்புதான் உயர்வான ஞானநிலைக்குச் செல்ல முடியும் என்பதை, 'பற்றறுத்து நின்றநீர் பராபரங்க ளெய்துவீர்' (ப.சி.பெ.கோ.12) என சிவவாக்கியர் வலியுறுத்துவர்.

சுற்றத்தினர் மீது பற்றுவைப்பதும், தவசிகளுக்கு ஆகாது. நீரில் படர்ந்திடும் தாமரையிலைபோல் ஒட்டுறவு இல்லாமல் சுற்றத்திலருடன் கலந்தும், மனதால் நீங்கியும், செயலால் தனித்திருந்தும், உணர்வால் ஞானத்தினை நாடியும் இருந்திட வேண்டும் என்பதை

"பற்றற்று நீரிற் படர்தா மரையிலைபோல்
சுற்றத்தை நீங்கிமனந் தூ ரநிற்ப தெக்காலம்"

(ப.சி.பெ.கோ.178) என பத்திரகிரியார் உணர்த்துவர்.

இக்கருத்தை ஒத்தே பாம்பாட்டிச் சித்தரும்,

"சொல்லும்புளி யம்பழத்தின் வோடு போலவே
சுற்றத்திருந் தாலுமவர் தொந்தங் களற்று..."

(ப.சி.பெ.கோ.209)என்று புளியம்பழத்தினின்று ஓடுதனியே பிரிந்து செல்வது போலச் சுற்றத்தினரும் தாமும் ஒன்று சேர்ந்து வாழ்ந்திட்ட போதிலும் காலம் செல்லச் செல்ல பற்று நீங்கித் தெளிவு அடைந்திட வேண்டும் என்று சுட்டுவர்.

சேற்றில் திரிந்து கொண்டிருக்கும் பிள்ளைப்பூச்சி, அச்சேற்றினைத் தன்மீது படாதவாறு வாழ்வதுபோல், தேசத்தோடு ஒத்து வாழ்ந்து கொண்டிருந்தாலும் தவசிகள் தனித்திருக்கும் தன்மையறிந்தவர்கள் என்றும் பாம்பாட்டிச் சித்தர் குறிப்பிடுகிறார். (ப.சி.பெ.கோ.209)

உலகப் பற்றுகள் பிறப்புக்கு வித்தாகின்றன. ஆகையால், பற்றினைப் பற்றாது அறுத்துவிட்டால் பிறப்பில்லை என்பதை இடைக்காட்டுச் சித்தர்

"பற்றே பிறப்புண்டாக்குந் தாண்ட வக்கோனே -

உன்னுள்

பற்றா தறுத்துவிடு தாண்ட வக்கோனே"

(ப.சி.பெ.கோ.223) எனும் பாடல்வழி உணர்த்துவர்.

"மூவாசை விட்டோமென்றே தும்பிபற - பர

முத்திநிலை சித்தியென்றே தும்பிபற..."

(ப.சி.பெ.கோ.230) எனும் பாடல்வழி மண், பெண், பொன் என்ற மூன்று ஆசைகளை விட்டுவிட வேண்டும் என்றும் விட்டுவிட்டால் மேலான முத்திநிலை சித்தியாகும் என்றும் இடைக்காடர் அறிவுறுத்துவர்.

இச்சையற்ற இடத்திலேதான் இறைவனிருப்பான் என்று அகப்பேய்ச் சித்தர் கூறுவர் (ப.சி.பெ.கோ.248)

தவம் என்பது துறந்த பின்புதான் சிறக்கும்; துறவும் பற்றினை நீக்கிய பின்பே வெற்றிபெறும்; பற்று நீங்கிய பின்பு மேலான உயர் எண்ணங்களின் செயலால் இறையுணர்வு கிட்டும்; ஆன்ம ஈடேற்றம் அடைய முடியும். ஆதலால், பற்றறுத்து மேன்மை அடைய வேண்டும் என்பர் சித்தர்கள் குறிப்பிடுவர்.

மெய்யுணர்தல் என்னும் இப்பகுதியில் சித்தர்களின் பாடல்கள் வெளிப்படுத்தும் கருத்துகள் துறவு நெறியில் செல்வோர்க்கு இன்றியமையாதவை எனத் தெளியலாம்.

3.5.0 ஞானவழி முறைகள்

ஆன்மிக நெறியில் இறையை உணர சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்குபடி நிலைகள் உள்ளன. சித்தர்கள் யோகம், ஞானம் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றனர். யோகம் பெற்றவர் யோகியர் ஆவர். ஞானத்தைப் பெற்றவர்கள் ஞானியர் ஆவர். உயர்நிலை மெய்யுணர்வும் ஞானமும் பெற வழிமுறைகள் உள்ளன. ஞானவழி முறைகளைக் கைக்கொள்பவர்கள் வெற்றி பெறுவர்.

இப்பகுதியில்,

1. தவத்தின் சிறப்பு,
2. தவசியின் உணவு முறை,
3. உடல் உயிர்தன்மை அறிதல்,
4. விந்து நிலையறிதல்,
5. வாசிநெறியறிதல்
6. சுழுமுனையறிவு,
7. தசநாத ஓசை,
8. 'சும்மா இரு' என்னும் சமாதிநிலை,
9. காயசித்தி
10. குண்டலினி சக்தி

ஆகிய கருத்துகள் ஆராயப்பெறுகின்றன.

3.5.1 தவத்தின் சிறப்பு

துறவு மேற்கொண்டோர் ஒழுகும் நெறி தவம். தவம் செய்பவர் தாம்மேற்கொண்ட செயலில் வெற்றிபெற முடியும், குருவின் அறிவுரைப்படிச் செயற்பட வேண்டும். தவம் என்பது உயர் குறிக்கோளை அடையும் நிலையாகும். மேன்மையான பேரின்ப நிலையை அடைந்திடவே தவம் தொடர வேண்டியுள்ளது. தவம் மேற்கொள்வதால் அழியாத மெய்யைப்பெற்று ஞானநிலையை அடையலாம். தவநிலையில் துன்பம் பல வரும்; அவற்றைப் பொறுத்துக்கொள்ள வேண்டும். துன்பங்கள் தொடரத் தொடர ஞானநிலை கிட்டும்; சோதிநிலையை அடைந்திட முடியும் என்பது தவத்தின் மேன்மையாகிறது. இதனை நிட்டை என்றும் கூறுவர்.

தலைவனின் அருளால் அருட்கண் விழிப்பிக்கப்பட்டால்தான் தெளிவு கிட்டும். மயக்கத்தினை அறுத்துத் தெளிவுபெற உதவுவது தவம் தான்.

தலைவனின் திருவடியை மனதில் எண்ணி பக்தி செலுத்தி, தவப்பயனால் விளைவதே இன்பம் என்பதைப் பாம்பாட்டிச்சித்தர்,

"...

பண்ணிய தவப்பயன் பத்தி யில்லையேற்

பாழ்படு மென்றுதுணிந் தாடாய் பாம்பே"

(ப.சி.பெ.கோ.214) எனப் புலப்படுத்துவார்.

தொல்லைக்கு அடிப்படையானது பிறவிதான். பிறவி என்பது தொடர் நிகழ்ச்சியாகும். அதனுடைய உறவை அறுத்துக்கொள்வதே விடுதலை அடைதல் அல்லது மோட்சம் செல்லல் என்பதாகும். தலைவனின்

பாதத்தை வணங்கிச் சோம்பலில்லாமல் தவம் செய்யாவிடில், சிறப்பு எய்த முடியாது என உணர்த்துகின்றார் இடைக்காட்டுச்சித்தர். இக்கருத்தைப் பின்வருமாறு அவர் தெரிவிப்பர்.

"தொல்லைப் பிறவியின் தொந்தமுற் றறவே
சோம்பலற் றுத்தவஞ் செய்யாக்கால்
எல்லையில் கடவு ளெய்தும் பதமுமக்கு
இல்லையென் றெண்ணுவீர் கோனாரே"

(ப.சி.பெ.கோ.221)

தவமியற்றும் தவசிகளுக்கு ஞானக்கனல் எழும்பும், வயிறு, கொல்லன் உலைபோலக் கொதிக்கும். தலைவன் அருளால் அக்கனலை அடங்கச் செய்து, கொல்ல வரும் நமன் அஞ்சியோடிடும்படியான ஞானநிலையைத் தவத்தால் தான் பெறமுடியும் என்று அழுகணிச்சித்தர் பகர்வர். (ப.சி.பெ.கோ.310)

குருவினைக் குற்றமற்ற அன்பால் துதிக்க வேண்டும். அவரை நோக்கித் தவமியற்ற வேண்டும். குரு மீதுமட்டும் பற்றுவைக்க வேண்டும். அப்போது குருவே தாம்போல் வந்து அருளுவான் என்பதைக் காகபுசுண்டர்,

"குற்றமது வையாமல் மனமன் பாலே
குருபரனை நோக்கியடா தவமே செய்து
பற்றாசை வைத்து மிகப் பார்க்கும்போது
பராபரையுங் கைவசமே யாகு வாளே"

(ப.சி.பெ.கோ.780) என வெளிப்படுத்துவர்.

நிட்டை எனும் தவம் செய்து இப்பநிலை அடைய வேண்டும் என்பது சித்தர்கள் காட்டும் வழிமுறையாகிறது.

3.5.2. தவசியின் உணவுமுறை

தவசிகள் தவம் செய்வதால் உடல் நிலையில் மாற்றம் ஏற்படும். உடல் மிகுவெப்பம் அடையும். வழக்கமான, இயல்பான உணவுகள் பொருந்தா.

பெருமை தரும் செயலைச் செய்பவர்களாகிய தவசிகள், பற்றற்ற நிலையை அடைய வேண்டி, உணவு முறையையும் மாற்றிக்கொள்கின்றனர்.

இதனை மதுரை வாலைசாமி

"சோம்பலுந் தூக்கமு மான தேஅன்ன
சுகியும் சோகமுங் கொள்ளாதே..."

(ப.சி.பெ.கோ.595) எனக் கூறுவர். 'அன்னசுகி' எனும் சொல் 'அறுசுவை உணவைச் சுவைத்தல்' என்பதைக் குறிக்கிறது.

'அன்னவிசாரம் அதுவே விசாரம்' என்று பட்டினத்தார் பகர்வர் (ப.சி.பெ.கோ.94) தவத்திலிருக்கும்போது பால், பழம், பச்சரிசி, சீனி ஆகியவற்றை உண்பர் சைவ உணவையே மேற்கொள்வர்.

"உப்பை விடுவதும் ஆசையடி அன்னம்
ஓர்பொழு துண்பதும் ஆசையடி..."

(ப.சி.பெ.கோ.594) என்று மதுரை வாலைசாமி கூறுவதன்வழி உப்பு, புளி, காரம் இல்லாமல் உண்பர் என்பதும், மதியம் ஒருவேளை உண்பது அவர் விருப்பம் என்பதும் குறிப்பாகத் தெரிய வருகின்றன.

மரணமிலாப் பெருவாழ்வை விரும்பும் தவசிகளின்/சித்தர்களின் உணவு முறைகளைப்பற்றி

"அஃதாவது அவர்கள் பலபொழுது பசித்திருந்து ஒருபொழுது உண்டவர்களாம். வேளைக்கு வேளை உணவு கொள்வது இல்லறத்தாருக்குப் பொருந்தலாம். ஆனால் மரணமிலாப் பெருவாழ்வை விரும்பும் சன்மார்க்கிகளுக்குப் பொருந்தாது"[19] என

ம.பொ.சிவஞானம் குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது.

'தவசிகள் பச்சரிசி கஞ்சியில் பாலும் சர்க்கரையும் கலந்து ஒருநாளைக்கு ஒருவேளை மட்டும் உண்ண வேண்டும்" என தவத்திரு ரெங்கராஜதேசிக சுவாமிகள் கூறுவர்.[20]

தவசிகள் தாங்கள் மேற்கொண்டுள்ள தவத்தினை முன்னிலைப்படுத்தி வாழ்வதால் மனஉறுதியுடன் இருக்கின்றனர். ஆதலின் அவர்கள் குறிப்பிட்ட உணவை உண்டு ஞானப்பாலாகிய அமிழ்தை உண்பதையே தலையாய நோக்காகக் கொள்வர்.

3.5.3 உடல் உயிர் தன்மையறிதல்

ஞானத்தை நாடிச் செல்லும் மனிதன் முதலில் உடலின்தன்மையையும், உயிரின் தன்மையையும் அறிந்துகொள்ள வேண்டும். மனித வாழ்வில் உடல் நிலையில்லாத ஒன்றாக உள்ளது. அழியும் உடலுக்கு 'மெய்' என்பது பெயராக உள்ளது. உடல், உயிர் ஆகியவற்றின் இயல்புகளைக் காணலாம்.

உடல் அழியும், அது நிலையானதன்று; உயிர் அழியாதது, அது நிலையானது. இவ்விரண்டின் முழுத்தன்மையைச் சித்தர்களின் பாடல்கள் தெளிவாக உணர்த்துகின்றன. உடம்பும் உயிரும் பின்னிப்பிணைந்திருந்தாலும் முடிவில் பிரிந்து விடுகின்றன. பிறப்புக்குமுன் உயிர், உடம்பு ஆகியவற்றின் நிலை, அவை தோன்றும் நிலை, அவ்விரண்டும் ஒன்றுபடும் நிலை முதலியவை பற்றிய கருத்துகள் சித்தர் பாடல்களில் விளக்கமாக அமைந்திருக்கின்றன.

உயிர் உடம்பை எடுக்கும்; அப்போது உருவம் உண்டாகும். உடம்பு உயிரை எடுக்கும் போது உருவம் உண்டாகாது. உடம்பு இறக்கும், உயிர் இறக்காது உயிரின் அழியாத் தன்மையையும், உடம்பின் அழியும் தன்மையையும்

"உடம்புயி றெடுத்ததோ வுயிருடம் பெடுத்ததோ
உடம்புயி றெடுத்தபோ துருவமேது செப்புவீர்
உடம்புயி ரிறந்தபோ துயிரிறப்ப தில்லையே
உடம்புமெய் மறந்துகண் டுணர்ந்தஞான மோதுமே"

(ப.சி.பெ.கோ.17) என சிவவாக்கியர் உணர்த்துவர்.

ஆணும் பெண்ணும் கூடியதாய் கருத்தரித்துக் குழந்தை பிறக்கிறது. கருத்தரிப்பதற்கு முன் அந்த உடல் எங்கே இருந்தது என்றும், கருத்தரித்து உருவம் பெறுவதற்கு முன் உயிர் எங்கே இருந்தது என்றும் வினாக்களை எழுப்பும் முறையும் அதற்கான விடைகூறும் முறையும் சிவவாக்கியரிடம் காணப்படுகின்றன.

"ஊருத்தரிக்கு முன்னெலாங் காயம்நின்ற தெவ்விடம்
உருத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்ற தெவ்விடம்..."
(ப.சி.பெ.கோ.28) என சிவவாக்கியர் வினவுவார்.

ஊருத்தரிப்பதற்கு முன் காயம் என்பது வெப்பமாய் இருந்தது. உருவம் தரிப்பதற்கு முன் உயிர் என்பது நீராய் (குளிர்ச்சியாய்) இருந்தது என்பதை,

"ஊருத்தரிக்கு முன்னெலாங் காயம்நின்ற தேயுவில்
உருத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்ற தப்புவில்..."
(ப.சி.பெ.கோ.28) என அவர் குறிப்பிடுவார்.

உருத்தரிப்பதற்கு முன்பு உயிர், ஆடவரிடம் விந்து என்ற நாதத்துடன் கலந்துவிற்கும். ஊருத்தரிப்பதற்கு முன்பு உடல் எனும் காயம், பெண்ணிடம் தோன்றும் சுரோணிதம் என்ற சோணிதமே என்பதை,

"உருத்தரிப்ப தற்குமுன் னுயிர்புகுந்த நாதமும்
ஊருத்தரிப்ப தற்குமுன் காயமென்ன சோணிதம்..."
(ப.சி.பெ.கோ.36) என அவர் கூறுவர்.

"..............................
உயிரையு முடம்பையு மொன்றுவிப்ப தேதடா
உயிரினா லுடம்பெடுத்த வுண்மைஞான சொல்லடா"
(ப.சி.பெ.கோ.35) எனும் வினாவின் மூலம் உடல் உயிர் இரண்டும் தொடர்ந்து இணைந்திருக்கத் தேவையான வழியை மனிதன் அறிந்திட வேண்டும் என விரும்புவர் சிவவாக்கியர்.

உயிர்தான் உடம்பு எடுக்கும், உடம்பு உயிர் எடுக்காது. உடம்பு எடுப்பதற்கு முன் உயிரானது அகத்தில் நின்றிடும் என்பதையும் உயிர் உடம்பு இவ்விரண்டையும் ஒன்றாக்குவது சிவம் என்பதையும்

"உயிரகத்தில் நின்றிடு முடம்பெடுத்த தற்குமுன்
உயிரகார மாயிடு முடலுகார மாயிடும்
உயிரையு முடம்பையு மொன்றுவிப்ப தச்சிவம்
உயிரினா லுடம்புதா னெடுத்தவா றுரைக்கிறேன்"

(ப.சி.பெ.கோ.37) என சிவவாக்கியர் தெளிவு செய்வர்.

இக்கருத்தினையே

"சத்தியாவ தும்முடல் தயங்குசீவ னுட்சிவம்..."

(ப.சி.பெ.கோ.48) என மீண்டும் வலியுறுத்துவர்.

சிவம் என்பது உயிர் என்றும், சத்தியாவது உடல் என்றும், உடல் உயிர் இணைப்பை அறிவது தவசியின் கடன் என்றும் மேலும் அவர் உணர்த்துவர். இதனை அறியாதவரைப் பித்தர்கள் என்று அவர் மொழிவர்.

உடல், உயிர் ஆகியவற்றின் இணைப்பைப்பற்றி,

"உயிரை அகாரமாகவும், உடலை உகாரமாகவும் ஞானியர் விளக்குவர். அகார உகார இணைப்புதான் ஞானம். அதுவே யோகமுறை; அவரே ஞானி. அகாரமுடு முகாரமும் உணர்கிறார். அந்நிலையே

பேரின்பநிலை. அவரே, பெருஞ்சோதி மயமாகிறார்;
அழைத்தன்மை பெற்றவராகிறார். மும்மலம் நீக்கப்
பட்டவராகிறார்; நீர்த்தாராகிறார்; மயக்க
மில்லாதவராகிறார் என ஞானநூல் விளக்குகின்றன"[21]

எனக்கூறுவது இங்குக் கருதத்தக்கது.

ஞானத்தை உடம்பின் துணைகொண்டு அடைவர் என்பதையும் உடலுயிர் பிரியாத நிலையை எய்துவதே அடிப்படை என்பதையும் அதற்கு என்று ஒரு நெறி உள்ளது என்பதையும் அறிவது சிறப்பறிவாகிறது.

உடலை, ஊற்றைச் சடலம் என்றும் நிலையற்ற பாண்டம் என்றும், சோறிடும் தோற்பை என்றும் ஓர்பிடி நீறுமிலாத உடம்பு என்றும் உட்பட்ட பாண்டம் என்றும் சித்தர்கள் குறிப்பிடுகின்றனர். உயிர்போன பின்பு அவ்வுடல் அரைக்காசுக்கும் ஆகாது என்றும் வறகோட்டுக்கும் ஆகாதென்றும் அவர்கள் மேலும் கூறுவர்.

உடம்பின் தன்மையைக் கடுவெளிச் சித்தர் பின்வருமாறு விளக்குவர்.

"நந்த வனத்திலோ ராண்டி - அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டுவந் தானொரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி"

(ப.சி.பெ.கோ.255).

நந்தவனம் என்ற உலகத்தில் பிறக்கும் ஒவ்வொரு மனிதரும் நாலாறு எனும் பத்து மாதமாய் குயவன் எனும் தலைவனை வணங்கி, தோண்டி எனும் இவ்வுடலைப் பெற்று வருகின்றனர். வாழ்வு எனும் கூத்து ஆடிஆடி முடிவில் போட்டு உடைத்துவிடுகின்றனர். அதாவது உடல், உயிர் எனப் பிரிந்து அழிகின்றனர். உடலுயிர் பிரியாமல் இணைக்க வேண்டும் என்ற ஞானக்கருத்தை உணர்த்தவே அவர் இங்ஙனம் விளக்குவர்.

உயிர் உள்ளவரை உடலானது உலகில் பற்பல ஆட்டங்கள் போடுகிறது. அது பல பொறிபுலன்களால் பொலிகிறது. [illegible] ஆடுகிறது. உயிரானது பிரிந்துவிட்டால் அவ்வுடல் பிணமாகி வாட்டம் அடைகிறது; நாற்றமெடுக்கிறது. இவ்வியல்புகளைச் சுட்டிக்காட்டி, மேலான கதிபெற ஞானநாட்டம் வேண்டும் என்பதை, 'ஊனமாம் உடலை நம்பி உண்மைகெட் டலைந்தாய் நீ...' (ப.சி.பெ.கோ.550) என்றும் 'கூடொன்றும் அழிந்தாற்கூடத் தொடருமோ கூறுநெஞ்சே' (ப.சி.பெ.கோ.552) என்றும் கணபதிதாசர் உணர்த்துவர்.

'பெற்ற உடம்பு சாகடிப்பதற்கு அல்ல என்பது சித்தர்களின் முடிவு'[22] என சி.ஆ.பெ.விசுவநாதம் கூறுவது இங்கு மனங்கொள்ளத் தக்கது.

உடம்பின் சிறப்பையும், முதன்மையையும் பற்றி

"ஆம் உடல்தான் ஓடம்! வாழ்வுதான் கடல். அந்த உடலாம் ஓடத்தைக் கொண்டுதான் வாழ்வாம் கடலில் பெறவேண்டுவனவெல்லாம் பெற்றாக வேண்டும்.

உடலாம் ஓடம் உடைந்தால் பொறியும் இல்லை
புலனும் இல்லை, பொருளும் சுற்றமும் பிறவும் இல்லை.
ஆதலால் உடல் இருக்கும் போதே செய்ய வேண்டிய
வற்றைச் செய்துவிட வேண்டும் என வலியுறுத்துகிறார்
சிவவாக்கியர்"[23]

எனக் கூறுவது ஈண்டுச் சுட்டத்தக்கது.

மேற்கண்ட கருத்தினை
"மனிதப் பிறவியே இறையுடன் ஒன்ற உதவிபுரியும்
பிறவியாம். எனவே இறப்பினைச் சித்தர்கள்
விரும்புவதில்லை. இவ்வுடலிலிருந்து உயிர் பிரிந்து
விட்டதெனில் இறைவனை எய்துதல் இயலாது.
இவ்வுடலுடன் உயிர் இருக்கும் பொழுதே உடலைத்
திடப்படுத்தி உயிரினை வெளியில் கலக்க வேண்டும்.
அதுவே சீவன்முத்தி நிலையாகும்"[24]

என்னும் கூற்று அரண் செய்வதாக உள்ளது.

சித்தர்கள் உடலை அற்பமாக மதித்து இழித்துப் பேசுபவர்கள் என்று எண்ண வேண்டியதில்லை. பொய்மையில் உழல்பவர்கட்கு இது பொய்யுடல் என்று கூறும் சித்தர்கள் இவ்வுடலை மெய்யுடலாக்கும் தன்மையினையும் கூறுகின்றனர். இந்த உடல் பேரின்ப வாழ்வுக்கு வழிகாட்டி; ஞானத்தின் செம்பொருள் என உணர்த்திடவே உடலையும் உடலின் தன்மையையும் விரிவாக விளக்குகின்றனர்.

உயிர், உடல் இவ்விரண்டும் உயரிய ஞானச்செயலில் ஈடுபட வேண்டும் என்பதும் உயிரின் நிலையறிந்து, காயத்தை வலுப்படுத்தி, இளமைப்பேற்றுடன் விளங்கியவர்கள் சித்தர்கள் என்பதும் அவர்கள் உயிருடல் இரண்டும் பிரியாது ஞானஒளியில் மறைந்தனர் என்பதும் சித்தர் பாடல்கள் வெளிப்படுத்தும் மெய்ம்மையாகின்றன.

3.5.4 விந்து நிலையறிதல்

உலக வாழ்க்கையில் மனிதன் இன்பம் அடைகின்றான். பெண்ணுடன் புணர்தல் இயல்பான நிகழ்வாக உள்ளது. ஆடவரிடத்தில் தோற்றமாவது 'விந்து' என்பதாகும். அதனையும் அதனால் எழும் தன்மையையும் அறிய வேண்டியது துறவு மேற்கொண்டவரின் செயல் என சித்தர்கள் கூறுகின்றனர். அதை அறிவதே விந்து நிலையறிதலாகும்.

விந்து என்ற சுக்கிலம் மானுடப் பிறப்புக்கு வித்தாகிறது. அந்த வெண்ணிறமாகிய நீரே பெண்ணுடன் கலந்தபின் கருத்தரித்து உருவமாகிறது. மீண்டும் அவ்வுருப்பெற்ற மனிதனிடமிருந்து தோற்றமெடுப்பது அதுவே, அது தொடர்ந்து இடையறாமல் செயல்படுகிறது. பிறப்புக்கு வித்தாக இருப்பதுபோல் ஞான வழிச் செல்லும் தவசிகளுக்கு அது உதவியாகவும் இருக்கிறது. அதன் இருப்பு நிலைதான் ஒரு மனிதனின் உடல் வலிமையையும் உணர்வையும் செயல்படுத்துகிறது. அதுவே ஞானத்துக்கு அடிப்படையாகிறது என்பதை

"உண்மையான சுக்கில முபாயமா யிருந்ததும்
வெண்மையாகி நீரிலே விரைந்து நீரதானதும்
தண்மையான காயமே தரித்துருப மானதும்
பெண்மையான ஞானிகாள் பிரிந்துரைக்க வேணுமே"

(ப.சி.பெ.கோ.40) என சிவவாக்கியர் உணர்த்துவார்.

தூய்மையான சுக்கிலம் ஞானியராக உயர்ந்திட உதவுகிறது. குருவின் வழி விந்துவின் இரகசியங்களைத் தெளிந்திட வேண்டும். அது இறவா நெறிக்கு அழைத்துச் செல்லும். பிறப்பு இறப்புக்கு ஆட்படுத்துவது மாசுற்ற சுக்கிலம் ஆகும். இவ்வாறு சுக்கிலத்தின் சூக்குமத்தை சித்தர்கள் தெளிந்துரைப்பர்.

மனிதனிடமுள்ள சுக்கிலம் என்னும் விந்து அவனுக்கு ஆசையையுண்டாக்கி, அவனைத் துன்பத்தில் ஆழ்த்துகிறது. அதே விந்துவினை ஞானத்திற்கும் பயன் படுத்துகின்றனர் சித்தர்கள். மாசுற்ற விந்துவினால் பயனில்லை. அதனை உள்ளுணர்வினாலும் தவத்தினாலும் உள்ளெழும் மூலக்கனலினாலும் தூய்மை செய்து, அமிழ்தாக்கி உண்டு மகிழ்வது சித்தர்களின் செய்கையாகும். இச்செயலுக்கு ஆசானின் துணை வேண்டும். புதுவிதமான, நாதமான விந்துவைக் கண்டவர்களே 'குரு' என்னும் உயர் நிலையை அடைகின்றனர். ஆற்றல் மிக்க இவ்விந்து முளைத்திடாதவாறு தவத்தால் அவித்து விடுவதால் அப்பிறப்பே அவர்கட்கு அந்தம் எனும் முடிவாகிறது. குருவின் தயவினால் இந்நிலையை ஒருவன் அடைகிறான் என்பதை உணர்த்துகிறார் அகத்திய முனிவர். இந்நிலையில் சொற்குருவாய் இருக்கின்ற ஞானியே மேம்பட்டு சற்குருவாக மாறிவிடுகிறார். அவரே ஆதியும் அந்தமுமான குரு என உரைப்பார். இதனை

"விந்து நிலை தனையறிந்து விந்தைக் கண்டால்
விதமான நாதமது குருவாய்ப் போகும்
அந்தமுள்ள நாதமது குருவாய்ப் போனால்
ஆதியந்த மானகுரு நீயே யாவாய்..."

(ப.சி.பெ.கோ.298) என்பதால் அறியலாம்.

விந்துவின் சிறப்பினை அறியாமல் இருந்தால் அழிய வேண்டும் என்பதை

"நாதவிந்து தன்னை நயமுடனே பாராமல்
போத மயங்கிப் பொறியழிந்தேன் பூரணமே"

(ப.சி.பெ.கோ.148) என பட்டினத்தார் பகர்வர்.

தவவழிச் செல்வோர் முறையாக விந்துவின் தன்மையை அறிவார்கள். அப்படிப்பட்டவர்க்கே குருவின் அருள்கிட்டும். குருவின் அருளால் விந்துவைக் கட்ட வேண்டும். அப்படிப்பட்ட விந்துவே ஞானத்துக்கு உதவும். குருவின் அனுபவ அறிவினால் உணர்த்தப்பட்டு உயர வேண்டும் என்பதை மதுரை வாலைசாமி,

"கட்டிக்கொள் விந்துவைத் தள்ளா தே..."

(ப.சி.பெ.கோ.585) என உரைப்பர். விந்துதான் சிறப்பறிவைத் தருகிறது என்பதையும், யோகத்திற்கு அதுவே முதன்மை என்பதையும் அவர் குறிப்பிடுவர். இதனை,

"சேவிப்ப துந்தவ வந்தியடி யோக
யாம்றிந்ப தும்விந்து நாதயடி..."

(ப.சி.பெ.கோ.586) என்பதால் அறியலாம்.

விந்துவின் சிறப்பை அறிவதும் அதனைக் கட்டுவதும் தள்ளுவதும் எங்ஙனம் என்பதைக் குருவின் சொற்படிக் கேட்டு உணர வேண்டும் என்பது சித்தர்களால் உணர்த்தப்படும் கருத்தாகும்.

3.5.5 வாசி நெறியறிதல்

மூச்சுக் காற்றுக்கு 'வாசி' என்ற பெயர் உண்டு. தவசிகள் மூச்சுக் காற்றின் இயல்பை அறிவார்கள். வாசி நெறியறிதல் என்பது சுவாசத்தினால் உடலில் ஏற்படும் மாற்றங்களை அறிந்து கொள்ளலாகும். உயிர் எனும் காற்று பிரிவதால் நிகழ்வது மரணம்; இதனை உணர்த்துவதுடன் உயிர் பிரியாமல் மூச்சுக் காற்றினைக் கட்டி, எழும்பச் செய்யும் யோக ஞானத்தின் சிறப்புக்களைச் சுட்டிக் காட்டுவதும் வாசி நெறியறிதலாகும்.

ஒரு நாளைக்கு மனிதனுக்கு இருபத்தோராயிரத்து அறுநூறு முறை சுவாசம் வந்து போகிறது. ஏதோ ஒரு நாள் உயிரும் முடிவில் போய் விடுகிறது. சுவாசம் போகப்போக வாழ்வு குறைந்துகொண்டே செல்கிறது. மூச்சு என்னும் உயிர் போகாமல் செய்வதே யோகம். இறப்பைத் தவிர்ப்பதுதான் ஞானம். ஆசானின் வழி காட்டுதலால் மூச்சுப் பயிற்சி அறிந்து, கட்டும் நெறி அறிந்து, அதன்வழி அனல் எழுப்பி, உடலை ஞானவழிக்குத் தக்கவாறு மாற்ற வேண்டும் என்று உரோமரிஷி கூறுகின்றார். இக்கருத்தினை,

"ஆமென்றே இருபத்தோ ராயி ரத்தோ
டறுநூறு சுவாசமல்லோ ஒருநா ளைக்குப்
போமென்று போவதனால் நாள்குறைந்து
போச்சுதுபோ னாவிட்டால் போவ தில்லை..."

(ப.சி.பா.ஞா.343) என்பதால் அறியலாம்.

தலைவனின் அன்பு வேண்டுவோர் வாசி நெறி அறிய வேண்டும். வாசியின் உயர்நிலையால் உயரலாம். வாசியைக் கணக்கறிந்து கட்ட வேண்டும். இல்லையேல் காயம் அழிந்துவிடும். காயம் அழிந்தபின் இறைவனைக் காண்பது எப்பொழுதோ என்பதை

"இறந்திடும் இருபத் தோரா யிரத்தறு நூறு பேரும்
இறந்திடக் காயம் போனா லீசனைக் காண்ப தெந்நாள்..."

என கணபதிதாசர் கூறுவர். (ப.சி.பெ.கோ.563)

வாசிப் பழக்கத்தை அறிய வேண்டும். உடம்பிலுள் அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம் என மூன்று மண்டலங்கள் உள்ளன. அவை யோக நாட்டமுடையவர்க்கே எளிதில் கிட்டும். அம்மூன்று மண்டலங்களையும் கடந்து, வாசியேற்றி, குருவின் துணையால் மேன்மையடைய வேண்டும் என்று வழிகாட்டுகின்றார் கொங்கணர். இவ்வழி முறையை அவர்

"வாசிப் பழக்க மறியவே னுமற்ற
மண்டல வீடுகள் கட்டவேணும்
நாசி வழிக்கொண்டு யோகமும் வாசியும்
நாட்டத்தைப் பாரடி வாலைப்பெண்ணே"

(ப.சி.பெ.கோ.327) என உணர்த்துவர்.

மூச்சுக் காற்றைக் காளை என்று கொங்கணரும் (ப.சி.பெ.கோ.329) புரவி என்று அழுகணிச் சித்தரும் (ப.சி.பெ.கோ.310) குறிப்பிடுவர். அதனைக் கட்ட வேண்டும் என்று சித்தர்கள் கூறுவர்.

வாசியை அறிந்து குருவின் அருள்பெற்று வாழ வேண்டும் என்பதை,

"காசினியெ லாநடந்து காலோய்ந்து போகாமல்
வாசி தனிலேறி வருவதினி யெக்காலம்"

(ப.சி.பெ.கோ.181) என பத்திரிகிரியார் உணர்த்துவார்.

மூச்சுக் காற்றின் வழி பிரணாயாமம் என்னும் வாசி நெறியறிந்து, பிரம்ம நாடி என்னும் உருத்தரித்த நாடியில் ஒடுங்கும் வாயுவைத் தவத்தால் மேலெழும்பச் செய்தால் ஞானநிலை கிட்டும். இதனை சிவவாக்கியர்

"உருத்தரித்த நாடியி லொடுங்குகின்ற வாயுவை
கருத்தினா லிருத்தியே கபாலமேற்ற வல்லிரே
விருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருட்தரித்த நாதரிபாத மம்மைபாத முண்மையே"

(ப.சி.பெ.கோ.4) எனப் புலப்படுத்துகிறார்.

வாசி நெறியறியாது 'மங்கி மாளுதே உலகில் மானுடங்கள்' என்று வேதனைப் படுவார் சிவவாக்கியர் (ப.சி.பெ.கோ.6).

வாசி நெறிபயின்று ஒழுகுவது தவம் எனப்படும். காற்றின் தன்மையை உடம்பினுள் கணக்கறிந்து கட்டி, வீடுபேறு எய்து தலைச் சித்தர்கள் மேற்கொண்டிருக்கின்றனர் என்பதை இவற்றால் அறியலாம்.

3.5.6 சுழுமுனை அறிவு

ஞானத்தின் சிறப்பை உணர்ந்து, நாட்டம் கொண்டு, வாசி நெறியறிந்து, அவ்வாசியை ஆசான் துணை கொண்டு நடுவணை என்ற சுழுமுனையில் நிறுத்தலே சுழுமுனை அறிவாகும்.

சுழு முனையைச் சேர்ந்திட்டவர் பின்னாளில் வாட்டமில்லாமல் இருக்கலாம் என்பதைக் குதம்பைச்சித்தர்

"நாட்டத்தைப் பற்றி நடுவணை சேர்வோர்க்கு
வாட்டங்க ளேதுக்கடி - குதம்பாய்
வாட்டங்க ளேதுக்கடி"

(ப.சி.பெ.கோ.252) எனத் தெரிவிப்பர்.

இடமூக்கு வழிச்செல்லும் காற்று இடக்கலை என்றும், வலமூக்கு வழிச்செல்லும் காற்று பிங்கலை என்றும் சித்தர்கள் உரைக்கின்றனர். புருவமத்தி என்னும் சுழுமுனையில் மூச்சுக்காற்று தங்குவது எல்லோர்க்கும் இயலும் ஒன்றன்று. ஆசான் அருள் கிட்டியவர்க்கே அது வாய்க்கும். உண்மையை அறிந்த ஆசானின் அருளால் தடையில்லாமல் தவம் செய்திட்டால்தான் வெற்றிகிட்டும் என்பதைப் பத்திரகிரியார்

"இடைபிங் கலைநடுவே இயங்கும் சுழுமுனையில்
தடையறவே நின்று சலித்திருப்ப தெக்காலம்"

(ப.சி.பெ.கோ.181) என அறிவுறுத்துவர்.

மூச்சுக் காற்றுக்கு 'கால்' என்று பெயர். நாட்டுகின்ற இரண்டுகால் என்பது ஒன்று இடகலை; மற்றொன்று பிங்கலை. இவ்விரண்டுக்கும் இடையில், நடுவில் உள்ள சுழுமுனை வாசலில் வாசியை நிறுத்தி நிட்டையில் அமர வேண்டும் என்று பத்திரகிரியார் குறிப்பிடுவார். இதனை

"நாட்டுக்கா லிரண்டும்விட்டு நடுவுக்கா லூடேபோய்
ஆட்டுக்கா லிரண்டிலுள்ளே அமர்ந்திருப்ப தெக்காலம்"

(ப.சி.பெ.கோ.185) என மொழிவதால்

சுழு முனையைத் தந்திரமான தலம் என்பர் குதம்பைச் சித்தர் (ப.சி.பெ.கோ.251).

பரிதி என்பது பிங்கலை; மதி என்பது இடகலை. இவ்விரண்டையும் விட்டு, சுழுமுனையில் வாசி உதிக்கும்பொழுது மேன்மையான ஞானம் கிடைத்திடும் என்பதை அகத்தியர்,

"பாரப்பா வுதயத்தி லெழுந்தி ருந்து
பதறாமற் சுழுமுனையில் மனத்தை வைத்துக்
காரப்பா பரிதிமதி யிரண்டு மாறிக்
கருவான சுழுமுனையி லுதிக்கும் போது..."

(ப.சி.பெ.கோ.303) எனக் குறிப்பிடுவர்.

சுழுமுனையின் நிலையறிந்தவர் முத்தியடைவர் என்பதை,

"சத்தியே யலைவதில்லைச் சூட்சஞ் சூட்சஞ்
சுழியிலே நிலையறிந்தால் மோட்சந் தானே"

(ப.சி.பெ.கோ.306) எனப் புலப்படுத்துவர் அகத்தியர்.

சுழுமுனை அறிவை உணர்ந்தவரின் பெருமையை,

"நல்லவாச லைத்திறந்து ஞானவாச லூடுபோய்
எல்லைவாசல் கண்டவ ரினிப்பிறப்ப தில்லையே"

(ப.சி.பெ.கோ.20) என சிவவாக்கியர் கூறுவதன் வழி அறியலாம்.

பிறவாநெறி அடைந்திட சுழுமுனை அறிவு உதவுகிறது. எனவே, மூன்றாம் கண்ணான ஞானக் கண்ணினைத் திடமுடன் அறிந்து கொள்ள வேண்டும் என்பது இதனால் பெறப்படுகிறது.

3.5.7 தசநாத ஓசை

பல ஆண்டுகள் வாசியோடு தொடர்பு கொண்டு தவப்பயிற்சியால் தசநாத ஓசை எழும்பும். அதுவும் தவத்தின் தொடர் செயலால் உருவாகிறது. தவசிகள் வாசியைக் கட்டி, தவம் செய்யும் போது அவர்களுக்குச் செவியில் நாதவித ஓசை கேட்கும். அதனையே ஓங்காரம் என்பர். மேலும் பத்துவித ஓசைகள் என்பர். அவை மணி, கடல், யானை, வார், குழல், மேகம், வண்டு, தும்பி, பேரிகை, யாழ் என்பனவாகும் என திருமந்திரம் கூறுகிறது.[25] எனவே அது தசநாத ஓசை என்று அழைக்கப்படுகிறது.

மூலாதாரத்திற்குச் சென்ற வாசியின்று எழும் ஓசையைக் கண்டு, அறிய வேண்டும் என இடைக்காட்டுச் சித்தர் இயம்புவர். இதனை, 'ஓசையுள்ள டங்குமுன்னந் தாண்ட வக்கோனே - மூல/ஒங்காரங் கண்டறிந் தாண்ட வக்கோனே' (ப.சி.பெ.கோ.223) என உரைப்பதால் அறியலாம்.

வாசி வசப்பட்ட தவசிகளுக்குக் காதில் சிலம்பொலிப்பது போல், ஓசை கேட்டுக் கொண்டே இருக்கும். வலம்புரிச் சங்கு ஊதுவது போன்று ஓசை செவியில் எழும்பும் என்பதை கொங்கணர்,

"சிலம்பொ லியெல்லக் கேட்கும டிமெத்த
 சிக்குள்ள பாதை துடுக்கமடி
வலம்புரி யச்சங்க மூது மடிமேலே
 வாசியைப் பாரடி வாலைப்பெண்ணே"

(ப.சி.பெ.கோ.327) எனக் குறிப்பிடுவர்.

'அந்த ஓங்காரத்தில் மனதை நாட்டிக் கேட்டுக்கொண்டு இருந்தால் அந்த ஓங்காரத்திலிருந்து பத்துவித நாத சப்தங்களையும் கேட்கலாம்'[26] என்னும் கூற்று இங்குக் கருதத்தக்கது.

வாதி வசப்பட்டு, பல ஆண்டுகள் தவம் செய்யும்போது மூலக்கனல் தோன்றுகிறது என்பதும் அப்படி தோன்றிய பின் தசநாத ஓசை இரு செவிகளிலும் எப்போதும் கேட்டுக்கொண்டு இருக்கும் என்பதும் இவற்றால் புலப்படுகின்றன.

3.5.8 சும்மாஇரு என்ற சமாதி நிலை

பற்றற்றவன் திருவடியை வணங்கி அருள்பெற வேண்டும் என்பர் சித்தர்கள். தவம் என்பது பல ஆண்டுகளாகத் தொடர்ந்து செய்ய வேண்டிய செயலாகும். வாசியானது சுழுமுனையில் ஒடுங்கியபின் மோனநிலை அல்லது சமாதிநிலை என்னும் சும்மா இருத்தல் நிலையை அடைகிறது.

பொறி புலன்களின் செயற்பாடுகள் எல்லாம் அடங்கிய நிலையில் வாசி ஒடுங்கிய பின், மௌனநிலை எய்த முடியும் என்பர் சித்தர்கள். அப்படி அவர்கள் அடைந்திடும் நிலையினை உரைப்பது அரிது; உணர்வுதான் அறிவு என்று சிவவாக்கியர் கூறுவர். இதனை,

"வாயினாலு ரைப்பதாகு மோமவுன ஞானமே"

(ப.சி.பெ.கோ.40) என உணர்த்துவர்.

தலைவனிடம் நாள்தோறும் மனதால் தொடர்பு கொண்டு வந்தால் சும்மா இருத்தல் என்னும் ஞானப்பாதை புலப்பட்டு, ஆனந்தமான சுகம் தருகின்ற பேரின்ப வாழ்வு கிட்டும். இதனை

"சோறுண்டு தூங்கிப்பின் சும்மா விருக்கச் சுகமுமுண்டே"

(ப.சி.பெ.கோ.108) என பட்டினத்தார் உணர்த்துவர்.

மோனநிலை என்ற சும்மா இருக்கும் இரகசியம் (மறைபொருள்) தலைவனின் அருளால் கிட்டும். அதை உணர முடியுமேயன்றி இப்படித்தான் இருக்கும் என்று யாரும் எடுத்தியம்ப முடியாது. அச்செயலைச் 'சும்மா இருத்தல்' என்று சித்தர்கள் கூறுகின்றனர். மூச்சுக் காற்று சுழுமுனையில் அடங்கியபின் அது சமாதி செய்யப்படுகிறது. புருவமத்தியே சமாதியாகிறது. அதுவே மோனம் என்னும் மௌனநிலையை உணர்த்துகிறது.

சும்மா இருத்தல் எனும் நிலையைத் தலைவன் தெளிவிப்பான் என்பதைப் பட்டினத்தார்

"சும்மா இருக்கவைத்தான் சூத்திரத்தை நானறியேன்
அம்மா பொருளிதென அடைய விழுங்கினன்டி"

எனத் தெரிவிப்பார். தலைவனின் அருளால் எய்தினேன் என்பதே இதன் உட்பொருளாகும். இதனைப் 'பேசாதிருக்கும் பிரமம்' என்பர் பட்டினத்தார் (ப.சி.பெ.கோ.140).

தலைவன் சுட்டிக்காட்டியபடி எல்லா உண்மைகளையும் அறிந்து தெளிந்த பின், அவ்வறிவு கிட்டியபின் சும்மா இருக்கும் இரகசியத்தைத் தெரிந்து கொண்டு, தெளிந்த ஞானத்தினை அடைய வேண்டும் என்பதை, 'சும்மா இருந்தவிடம் அகப்பேய்/சுட்டது கண்டாயே' (ப.சி.பெ.கோ.242) என்றும் 'துறவி யானவர்கள் அகப்பேய்/சும்மா இருப்பார்கள்' (ப.சி.பெ.கோ.245) என்றும் அகப்பேய்ச் சித்தர் அறிவுறுத்துவர்.

அதன் சிறப்பை

"இக்காலத்தில் கல்லறைகளைச் சமாதிகள் என்பர். இறப்பிற்கும் சமாதிக்கும் வேறுபாடு உண்டு. இறப்பின்போது எல்லாம் வெளியே போய்விடும். சமாதியில் எல்லாம் உள்ளே இருக்கும். இறப்பில் உடல் அழியும்; சமாதியில் உடல் அழியாது"[27]

என விளக்குவர்.

சும்மா இருப்பது என்பது ஞான நிலையில் ஒருசெயற்பாடுதான். வெறுமனே இருப்பது அன்று. உடல் உயிர் தன்மையைத் தவத்தால் உயரச் செய்யும் செயல் என்பதாகும். தவசிகள் பலவகையான தவ உணர்வுகளால் தூண்டப்பட்டுப் பழைமையான தீய சிந்தனைகளை அடக்கி சும்மா இருப்பர்.

சித்தர்களின் ஆன்மப் பயணத்தில் மேன்மையான நிலையானது சும்மா இருக்கும் நிலையாகும். ஆசானின் வழிகாட்டல் இன்றி இதனை உரை முடியாது.

### 3.5.9 காயசித்தி

காயம் எனும் உடல் மாசு நீங்க வேண்டும். மாசற்ற உடல் பெறவே தவம் மேற்கொள்வர். தவத்தின் சிறப்பினால் உடம்பில் உள்ள மும்மலக் கசடுகளை அறியலாம். கசடு நீங்க காயசித்தி செய்ய வேண்டும். மும்மலத்தை நீக்கி காயசித்தி அடைதலே சித்தர்களின் செயற்பாடாகும்.

மும்மலங்கள் ஆணவம், கன்மம், மாயை ஆகியனவாம். இவற்றையே சித்தர்கள் மலம், சலம், சுக்கிலம் என உரைப்பர். மும்மலக் கசடாகியதை மாடு எனக் குறிப்பிடுவர் இடைக்காடர். மும்மலத்தை அறிந்து, உணர்ந்து நீக்கிக் கொள்ளலை, 'மும்மலத்துள் எனுமாட்டை முறுக்கிக்கட் டுக்கோனே – மிக/முக்கால நேர்மையெல்லாம் முன்பறிவாய் கோனே' (ப.சி.பெ.கோ.235) என எடுத்தோதுவர். இக்கருத்தையே 'அப்புடன் மலமறுத்தே ஆசைநீக்க வல்லிரேல்...' (ப.சி.பெ.கோ.64) என சிவவாக்கியர் உணர்த்துவர்.

காயசித்தி என்பது காயம் அழியாத நிலையை அடைவது ஆகும். சித்தர்கள் தெளிந்த பாதையை மற்றவர்க்குச் சொல்கிறார்கள். அருளாளராகிய அவர்களின் கருத்துக்கள் அடங்கிய பாடல்களை மட்டும் அறிவதில் சிறப்பில்லை. காயசித்தி அடைதலே சிறப்பாகும். காயசித்தி என்பது பட்டறிவால் விளைவது. இதனை மேலும் விளக்கும் வகையில்,

"சித்தர்களது முயற்சியில் முக்கியமானது ஒன்று காயசித்தி பெறுவது. அஃதாவது இந்த உடல் அழியாது பாதுகாத்து மரணத்தை வெல்வதாகும்"[28]

என அமைந்திருக்கும் கூற்று இங்குக் கருதத்தக்கது.

ஆசான் துணையோடு அழுக்கு நீங்கிய வழி உடல் 'மெய்' ஆகியது என்பதையும் காயசித்தி அடைகிறது என்பதையும் இவற்றால் அறியலாம்.

3.5.10 குண்டலினி சக்தி

ஞானவழிமுறைகளில் உடல் உயிர் இரண்டும் தெளிவு பெற்று, புதுவகையான ஆற்றல், பெறலே சித்தர்களின் செயலாகும். அவ்வாறு தவம் செய்து ஈட்டும் சக்தியைக் 'குண்டலினி சக்தி' என்று கூறுவர்.

சித்தர்கள், உடலில் உள்ள ஆறு ஆதாரங்களை அதாவது இடங்களைச் சுட்டுகின்றனர். அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்நேயம் ஆகும். இவற்றை முறையே மூலம், கொப்பூழ், மேல்வயிறு, நெஞ்சம், மிடறு, புருவநடு எனவும் குறிப்பிடலாம்.

மூலாதாரத்தில் தோன்றும் சக்தியே குண்டலினி சக்தியாகும். இதனை நினைவால், உணர்வால் எழுப்பிட வேண்டும். சுழுமுனையைத் திறந்து மேல்நிலை எய்திடலை 'ஒளிபடருங் குண்டலியை உன்னியுணர் வாலெழுப்பிச்/சுழுமுனையின் தாள்திறந்து தூண்டுவது மெக்காலம்' (ப.சி.பெ.கோ.181) என பத்திரகிரியார் இயம்புவார்.

தவம், தியானம் ஆகிய செயல்களே குண்டலினி சக்தியை எழுப்ப இயலும். குருவின் துணை கொண்டு இச்செயல்களை இயற்றல் வேண்டும். நூல்களைப் படித்து இதனை அடைய முடியாது, பட்டறிவால் உயர்ந்த குருவே மற்றவர்க்கு உணர்த்த முடியும்.

குண்டலினியின் சிறப்பைப் பெற வேண்டும் என்பதை '... ஓங்கார மூல வட்டக்/குண்டலியாய் நின்றிடத்திற் குணாதீ தந்தான்...' (ப.சி.பெ.கோ. 792) என காகபுசுண்டர் குறிப்பிடுவர்.

மோட்சம் என்னும் ஆன்ம விடுதலையை அடைய குண்டலினி சக்தி துணையாக உள்ளது எனக் கருதலாம். ஞானவழிமுறைகளை முறையாகக் கைக்கொண்டு, குருவின் பால் அன்பு வைத்து, தவமியற்றி குண்டலினி சக்தியாகிய மேன்மையை அடையலாம்.

3.6 சோதி நோக்குதல்

தவசிகள் தலைவன் ஆசியினால் தவம் மேற்கொள்ளும் போது மூலநாடியில் எழுகின்ற சோதியின் தன்மையைக் கண்டுடிக் காண்பர். சித்தர்கள் அருட்பெருஞ்சோதியைக் கண்டு மகிழ்வர். அந்த நிலை கிடைக்கப் பெற்றால் என்றும் இளமையுடன் வாழலாம் என்பதை

"மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை
நாலுநாழி யும்முளே நாடியே யிருந்தபின்
பாலனாகி வாழலாம்..."

(ப.சி.பெ.கோ.14) என சிவவாக்கியர் குறிப்பிடுவார்.

மூலாதாரத்தில் ஏற்படுகின்ற வன்னி, சுழுமுனையில் ஒளியாகி, சோதியாக வெளிப்பட்டால் அது நெருப்பறை போல ஒளிவீசும். அந்நிலையில் தலைவனும் தவமியற்றும் தவசியும் ஒன்றாகின்றனர் என்பதை 'நெருப்பறை திறந்தபின்பு நீயுநானு மீசனே' (ப.சி.பெ.கோ.22) என்னும் சிவவாக்கியர் வாக்கால் அறியலாம்.

முக்கண்ணில் தோன்றும் நீலவிளக்கினையும் அதன் உள்ளொளிரும் சோதியையும் பற்றி

"நெற்றியிற் றயங்குகின்ற நீலமாம் விளக்கினை
யுத்துணர்ந்து பாரடா வுள்ளிருந்த சோதியைப்..."

(ப.சி.பெ.கோ.28) என சிவவாக்கியர் விளக்குவர். சோதி தோற்ற மெடுத்தல் ஞானம் கைவரப் பெற்றமையைக் குறிக்கும் என சிவவாக்கியர் உணர்த்துவர்.

கடலில் நீரோடு நெருப்பும் உண்டு; அதில் பிழப்பும் உண்டு; காற்றும் உண்டு. பெருங்கொந்தளிப்பு உண்டாகும்பொழுது நெருப்பின் கூறுகள் வெளிப்படும். அதுபோல உடலில் மறைந்திருந்த சிவம் எனும் ஒளி தவத்தின் செயலால் வெளிப்படும் என்பதை

"கடலில் ஒளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்
உடலில் ஒளித்தசிவம் ஒளிசெய்வ தெக்காலம்"

(ப.சி.பெ.கோ.187) என பத்திரகிரியார் குறிப்பிடுவர்.

நெருப்பு, கதிரவன், ஒளிதரும் பொருட்கள் போன்றவற்றை நேருக்கு நேர் பார்க்கிறபொழுது கண்ணுக்கு இடர் உண்டாகின்றன. ஆனால் சுழுமுனையில் உருவாகும் சோதியைத் தொடர்ந்து பார்த்திடலாம். கண் எரிச்சல் காணாது; இன்பம் பிறக்கும்; ஆனந்தமாய் இருக்கும். இதனை,

"உற்றுற்றுப் பார்க்க ஒளிதருமா னந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நிலைப்பதினி எக்காலம்"

(ப.சி.பெ.கோ.191) என பத்திரகிரியார் குறிப்பிடுவர்.

தவத்தின் சிறப்பினால் உச்சிக்கு நேரே உள்நாக்கு உள்ள பகுதிக்கு மேலே வைத்திட்ட ஞானவிளக்கு சுழுமுனையில் எரிந்து கொண்டிருக்கும். அதாவது சோதி தோன்றிடும். அந்த விளக்கு தலைவனின் தயவினால் கிட்டியது. அது அணையா விளக்காக எரிந்திடும் தன்மையது என்பதைக் கொங்கணர்

"உச்சிக்கு நேராயுள் ளாவுக்கு மேல்நிதம்
வைத்த விளக்கும் எரியுதடி
அச்சுள்ள விளக்கு வாலைய டியவி
யாம லெரியுது வாலைப்பெண்ணே"

(ப.சி.பெ.கோ.327) என உணர்த்துவர். ஆதலின் அது சிறப்புடையதாகும். இக்கருத்தினை அரன் செய்வதாக,

"புருவமையத்தில் பிரம்மாண்டமான, ஒரு கோடி
சூரியனுக்கு நிகரான ஜோதி தோன்றுகிறது.
அதுவே அளவிலா மகிழ்ச்சியைத் தரவல்லது!" [29]

என்னும் கூற்று அமைந்துள்ளது.

தவத்தின் வலிமையால் உள்உடலாகிய சூக்கும உடல் ஒளிபெற்றுப் பிரகாசித்திட, வெளி உடல் என்னும் தூல உடல் வீழ்ச்சியடைந்து உடம்பெல்லாம் சோதிமயமாய் தோற்றமெடுக்கும். இதனை

"சொருபமுத்திக் கடையாள மேதென் றக்கால்
சுடர்போலக் காணுமடா தூல தேகம்..."

(ப.சி.பெ.கோ.342) என உரோமரிஷி சுட்டுவார்.

சோதியைக் கண்ணுற்றால் வெளியுடம்பு அழிந்து, உள்ளுடல் ஆக்கம் பெற்று இறவா நிலை எய்தும் என்பதும் சித்தர்கள் சித்தி முத்தி நிலைகளை எய்துவர் என்பதும் இவற்றால் தெளிவாகின்றன.

3.7 அமிழ்துண்ணல்

புருவமையத்தில் சோதி கண்ட சித்தர்கள் அமிழ்து உண்பது பற்றியும் குறிப்பிடுகின்றனர். அவர்கள் முக்கண் திறந்தவழி உச்சிக்குக் கீழ் சிந்தும் அமிழ்தத்தை உள்நாக்குப் பகுதியின் வழியாக அருந்துவர். இவ்வுண்மையை

"உடுபதிக்க ணமுதருந்தி யுண்மைஞான உவகையுள்
உச்சிப்பட்டி றங்குகின்ற யோகிநல்ல யோகியே"

(ப.சி.பெ.கோ.57) என சிவவாக்கியர் வெளிப்படுத்துவர்.

தவத்தால் ஊன் உருகும். ஊன் உருக உருக மெய்யுணர்வு கிட்டும். பின் ஊசிமுனை வாசல் வழியாக அமுது சிந்தச் செய்து அதனை அருந்துவர். இச்செயலும் தலைவன் அருளால் கிடைத்தது என்று கூறுவர் அழுகணிச்சித்தர் (ப.சி.பெ.கோ.311).

மூலாதாரவன்னி என்னும் நெருப்பை மூட்டச் செய்து சுழுமுனை மண்டபத்தில் சோதி கண்டு பின், ஞானப்பாலை (அமிழ்தத்தை) இறங்கச் செய்து முறைப்படி உண்டு, பசியே இல்லாது போகின்ற தன்மையை அடைதலை,

"மூல நெருப்பைவிட்டு மூட்டுநிலா மண்டபத்தில்
பாலை யிறக்கியுண்டு பசியொழிவ தெக்காலம்"

(ப.சி.பெ.கோ.181) என பத்திரகிரியார் உணர்த்துவர்.

கொக்கு குளக்கரையில் நிறைய மீனைப் பிடித்து உண்டு, பின் அதனைக் கக்கியும் விக்கியும் விழுங்கி மகிழ்வதால் தடுமாறி நிற்கும். அதுபோல நம்முடலில் தவத்தினால் உருவாகிக் கசியும் தேன் எனும் அமிழ்தை உண்டு மனம் மிகு இன்பம் அடைய வேண்டும் என்று உரைப்பர் பத்திரகிரியார். (ப.சி.பெ.கோ.189)

'பால்' என்று அமிழ்தை இடைக்காடர் விளம்புவர். இதனை

"அண்ணாவின் மேல்வரும் பால்கற - பேர்
அண்டத்தி லூறிடும் பால்கற..."

(ப.சி.பெ.கோ.235) என்றும்

"சாவா திருந்திடப் பால்கற - சிரம்
தன்னி லிருந்திடும் பால்கற..."

(ப.சி.பெ.கோ.234) என்றும் இடைக்காட்டுச் சித்தர் சுட்டுவார்.

உடம்பு, ஞானத்துக்கு வழி வகுக்கும். காயத்தைச் சுத்தி செய்து, தலைவனின் அருளினால் சிரசில் இருந்து கசியும் அமிழ்தத்தை பருகிக் கொண்டிருக்கும் தவசிகட்கு, உலக மாந்தர்கள் விரும்பி உண்ணும் மற்றைய உணவுகளோ, அவற்றுள் குறிப்பாக தேங்காய்ப் பாலோ தேவையற்றவையாகும் என்று குதம்பைச் சித்தர் கூறுகின்றார். மலைமேல் இருப்பவர்கள் என்று சித்தர்களைக் கூறுவதன் காரணம் என்னவெனில், மலை என்பது சுழுமுனை என்ற மேலான இடமாகும். அதன் வழியாகவே முன்பு சொல்லப்பட்ட ஞானம் கிட்டியது. அதன் பிறகு அமிழ்து உண்பவர்கள் சித்தர்கள். ஆதலால் அவர்களுக்குத் தேங்காய்ப்பால் தேவையில்லை என்பர். இதனை

"மாங்காய்ப்பா லுண்டு மலைமே லிருப்போர்க்குத்
தேங்காய்ப்பா லேதுக்கடி - குதம்பாய்
தேங்காய்ப்பா லேதுக்கடி

(ப.சி.பெ.கோ.254) என்னும் பாடலில் குதம்பைச் சித்தர் குறிப்பிடுவதால் அறியலாம்.

'மாங்காய்ப் பாலுண்டு' என்னும் பாடலைப் பலரும் அறிந்திருப்பர். இப்பாடல் மேற்போக்காகப் படிப்பவர்க்கு ஒரு பொருளும், சித்தர் தம் 'பரிபாஷை' அறிந்தவர்க்கு வேறொரு பொருளும் தரும் தகையது.

"மாங்காயின் பாலை உண்டு மலையின் மேல்
இருப்பவருக்குத் தேங்காயின் பால் எதற்கு?
என்று மேற்போக்காகத் தோன்றும் கருத்து;
.....மாங்காய் பால் என்பதை மா, காயம்,
பால் எனப் பிரித்து, சிறப்புடைய உடம்பின் பாலாகிய
அமிழ்தம் என பொருள் கொள்ளுதல் வேண்டும்"[30]

எனக் குறிப்பிடுவர்.

இப்பாடலுக்கு அமையும்

"சிறப்பு மிக்க காயத்தின் பாலாகிய
அமிர்தத்தை உண்டு அம்பலத்தில் தன்னை நிறுத்திக்
கொள்ளும் பேறு பெற்றவர்களுக்கு, யோகப்
பயிற்சியில் ஈடுபடுகின்றவர்கள் உட் கொள்ளுகின்ற
மென்மையான உணவுப் பொருட்களாகிய தேன்,
காய், பால் முதலியன தேவையில்லை.
அதாவது உணவே தேவையில்லை என்பது
இவ்வரிகளின் பொருளாகும்"[31]

என்னும் விளக்கம் இங்குக் கருதத்தக்கது.

பாலையிறக்கி உண்டவர்களுக்குப் பசி இல்லை என்பது இப்பாடல் உணர்த்தும் கருத்தாகிறது.

மதி எனும் உடம்பினுள்ளே தோன்றிடும் அமுதப்பாலை உண்டு, அழிக்கும் பசியை இல்லாதாக்கி விட்டவர்கள் சித்தர்கள் என்பதை,

"ஆலவட்டந் தங்கிமதி யமுதப் பாலைக்
கண்டுபசி யாற்றிமனக் கவடு நீக்கி..."

(ப.சி.பெ.ஞா.340) என உரோமரிஷி உணர்த்துவர்.

பசியில்லை என்றால் மல, சல, சுக்கிலம் இல்லை; என்பதும் அமிழ்துண்டால் சாக மாட்டார்கள் என்பதும் இறவா நெறிக்கு மருந்து உண்டு என்பதும் சித்தர் பாடல்களால் தெளிவாகின்றன.

அமிழ்துண்டால் இறவா நிலை எய்த முடியும் என்பதை, உருசிய நாட்டு உயிரியல் விஞ்ஞானி வெசிலியோ விலோவிஉக் குப்ரிவிஉக் என்பவர் பின்வருமாறு கூறுவர்.

"நாம் மரணமிலாப் பெருவாழ்வில் வழக்கூடிய காலம் நெருங்கியுள்ளது. நமது உடலமைப்பு முழுமை அடைவதை-மூப்பு-நோக்கி அமைந்து விட்டது. அதனால் மரணம் சம்பவிக்கிறது. ஆனால் மூப்பு என்பது மனித இயல்புக்கே புறம்பானது. மூவாதிருக்க வழி செய்தால் மரணத்தைத் தவிர்க்கலாம். அதற்கு மூப்பு எப்படி ஏற்படுகிறது என்பதை ஆராய வேண்டும்.

> உயிரணுக்களில் உள்ள டி.என்.ஏ.; ஆர்.என்.ஏ. என்ற அமிலங்கள் கணந்தோறும் பழுதடைந்து வருகின்றன. அவற்றைச் சிதையாமல் பார்த்துக் கொண்டால் உயிரணு மூவாது இருக்கும். அங்ஙனம் மூவாதிருப்பதற்கு வேண்டிய சாதனமும் உயிரணுவில் இல்லாமல் இல்லை. பழுதாகிக் கொண்டு வரும் அவ்விரு அமிலங்களைப் பழுதடையாமல் நிலைக்கச் செய்யும் மூவா மருந்து (Elixir) உயிரணுவில் இயல்பாக அமைந்துள்ளது. அந்த அமுதத்தைச் சுரக்கச் செய்ய மனிதனால் முடியும்"[32]

இக்கருத்து சித்தர்கள் கருத்திற்கு ஒத்துள்ளமை மனங்கொள்ளத்தக்கது.

சித்தர்கள் குறிப்பிடும் அமிழ்து சாகாக்கலைக்கு மருந்தாகிறது. அது தவத்தினால் கிட்டும் நிலை என்பதும் தலைவனின் அருளினால் கிடைக்கும் என்பதும் சித்தர் பாடல்களின் வழி புலனாகின்றன.

அமிழ்து உண்டால் பசி அடங்கும் என்பதும் இறப்பு இல்லை என்பதும் சித்தர்களின் கருத்தாகும் என்பதும் தெளிவாகின்றன.

பிறவித் தொல்லையையும் மனவேதனையையும் கெடுக்கும் தன்மையான உயர்வான அமிழ்தப் பாலைக் கறந்து உய்யும் வழியை மேற்கொள்ள வழிகாட்டுகின்றனர் சித்தர்கள் எல்லாம்.

3.8 மரணந்தவிர்த்தல்

இயல்பாக வரும் இறப்பைத் தவச் செய்கைகளினால் இறையுணர்வு பெற்றுத் தவிர்த்துக் கொள்ளும் நிலை மரணந்தவிர்த்தலாகும்.

சித்தர்கள் பிறவியை நீக்க முற்பட்டு வெற்றிக் கண்டவர்கள். பிறப்பு எனும் பேதைமை நீங்கி, மரணத்தை அடையாமலேயே பிறப்பை அறுத்தவர்கள் சித்தர்கள்.

ஆதி என்கிற பிறப்பும் அந்தம் என்கிற இறப்பும் கடந்து வீடுபேற்றினை அவர்கள் அடைகின்றனர் என்பதை

"ஆதியந்த முங்கடந்த தரியவீட தாகுமே"

(ப.சி.பெ.கோ.22) என சிவவாக்கியர் குறிப்பிடுவர்.

பிறவா நெறியைத் தலைவன் அருளால், விடா முயற்சியுடன் துறவு பூண்டு, காலங்கருதி இருந்து, அன்பு செய்து, அமிழ்துண்டு, இறவா நிலையை அடைதலைப்

"பிறப்பது மிறப்பதும் பிறந்திடா திருப்பதும்
மறப்பது நினைப்பது மறந்ததைத் தெளிந்ததும்
துறப்பதுந் தொடுப்பதுஞ் சுகித்துவாதி யுண்பதும்
பிறப்பது மிறப்பதும் பிறந்துவீ டடங்குமே"

(ப.சி.பெ.கோ.38) என சிவவாக்கியர் உணர்த்துவர்.

தவம் முற்ற முற்ற சித்தர்கள் மனித நிலையைக் கடந்து தெய்வ நிலையை அடைகின்றனர். அவர்கள் உடல் சோதி வடிவம் பெற அருவநிலையை அடைகின்றனர்; இறவா நிலையை எய்துகின்றனர். பழைய உருவமில்லை. ஆயினும் மரணம் தவிர்த்து ஒளி உடம்பாய் இருப்பதால், இரண்டும் இல்லாத உருவமாகிய அருவமாய்த் திகழ்கின்றனர். இதனை

"இருக்கிலே பிறக்கிலே பிரண்டுமற் றிருந்ததே"

(ப.சி.பெ.கோ.74) என சிவவாக்கியர் தெரிவிப்பர்.

இக்கருத்தை வேறு சொற்களில் பத்திரகிரியார் மாயாப்பிறவி மயக்கறுத்தவால்தான் ஓயாக் கவலையை உதறித்தள்ள முடியும் என விளக்குவர் (ப.சி.பெ.கோ.174).

சித்தர்கள் ஞானவாழ்வுக்கான ஞானவழி முறைகளைச் சாதனைகளாகச் செய்து முழுமையான வெற்றி பெற்றவர்கள். அவர்கள் இறவாதர்கள் எனச் சாற்றுகிறார் இடைக்காட்டுச்சித்தர். இதனைச்

"சாதனங்கள் செய்தவர்கள் சாவார்குயிலே..."

(ப.சி.பெ.கோ.231) என்பதால் அறியலாம்.

மூச்சுக் காற்று உட்செல்லுதலையும் வெளிச் செல்லுதலையும் போக்குவரத்து என சித்தர்கள் குறிப்பிடுகின்றனர். ஆசானின் அருள் பெற்று, வாசியின் உண்மையறிந்து தவமியற்றிடலாம். பொய் என இருந்த மூச்சுக்காற்று நீங்கினால் இறப்பர். அதியாற்றை பொய் என இருத்தி ஞானவழிகளைக் கைக்கொண்டவர்கள் வீறுபேறடைவர். இது திண்ணம். இதனைப்

"பொய்யென்று சொல்லாதே அகப்பேய்
போக்கு வரத்துதானே
மெய்யென்று சொன்னவர்கள் அகப்பேய்
வீடு பெறலாமே"

என அகப்பேய்ச்சித்தர் விளக்குவர் (ப.சி.பெ.கோ.249)

உலக மக்கள் வீடுகட்டி, மகிழ்ந்து வாழ்வர், தாழ்வாரம் போல் இறக்கி, சிறிய அளவான வீடாவது ஏழைகள் கட்டி வாழ்வர். இவ்வுடலாகிய வீட்டினுள் உயிர் சில ஆண்டுகள் தங்கி, பின்னர் பிரிந்து விடுகின்றது. இவ்வுயிருக்கு நிரந்தரமான வீடு ஒன்று கட்டி வாழ்வதே ஞானமாகும். அதுவே வீடுபேறு அடைதல் என்பதாகும்.

அவ்வாறான ஞானவீடு கட்டிக்கொள்ள அறியாமல் வாழ்வது வீண்வாழ்வாகும். மேலான உள்ளுணர்வின்றி, பற்றற்றவன் திருவடியைப் பற்றாமல், அவர்களின் இன்ப வெளிப்பாடான எழுத்துக்களைக் கற்பதனாலும் வாயாரப்பாடி மகிழ்வதனாலும் உயர்வான ஞானத்தை அடைய இயலாது. குதம்பைச்சித்தர் இதனைத்

"தாவார மில்லை தனக்கொரு வீடில்லை
தேவார மேதுக்கடி – குதம்பாய்
தேவார மேதுக்கடி"

என உணர்த்துவதால் அறியலாம். (ப.சி.பெ.கோ.254)

கள்ளப் புலனால் வீட்டைக் காண முடியாது, தவத்தின் விளைவால் எழும் ஞானக் கனலால், புலன்களை வெட்டி எரித்திட்டால் வீடு அடையலாம். இல்லையேல் காடுதான் அடைய வேண்டிவரும் என்று கடுவெளிச்சித்தர் கூறுவர். (ப.சி.பெ.கோ.257)

உயர்ஞானம் கைவரப்பெற்ற தவசிகள் முறைப்படி தவமிருந்து தன்உயிர் உடலை அழியாமல் பதப்படுத்திக் கொள்ளும் தன்மையைப் பெறுவர் அவர்கள் மண்ணுள்ளவரை பல்லூழிக்காலம் தொடர்ந்து வாழ்வர்; இறப்புக்குட்படாமல் தப்பித்துக் கொள்வர். அதாவது அவர்கள் காலனுக்கு அகப்படாமல் நற்செயலாற்றுகின்றனர். இந்த ஞானத்தை மனிதனாகப் பிறந்தவன் விரும்ப வேண்டும் என்பதை அகத்தியர் 'மண்ணூழி காலமட்டும் வாழ்வர் பாரு/மறலிகையில் அகப்படவு மாட்டார் தானே' (ப.சி.பெ.கோ.297) என மொழிவர்.

மனித வடிவாய் இருக்கின்ற மனிதர்களில் பலவகைக் குணங்கள் கொண்ட மனிதர்கள் இருக்கின்றனர். மனிதரில் கல், மரம், பறவை, மனிதர், வானவர் என பல்வகையினர் இருப்பதாக சிவானந்தபோதம் கூறும் (ப.சி.பெ.கோ.409)

பிறப்பறுத்தலே மானுடப்பிறப்பின் முதன்மையான நோக்கமாகும். அவ்வரிய செயலைச் செய்து வெற்றி பெற்றவர்கள் முன்னோர்கள் என்பதை, 'மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே/அருமையென வகுத்தார் முன்னோர்' (ப.சி.பெ.கோ.409) என சிவானந்தபோதம் பேசும்.

மரணமிலாப் பெருவாழ்வின் உயர்வை, 'நீட்டை கூடி நிலைவற்று ஞான ஒளியில் நாதனைக் கண்டு சித்திப்பு பெறுவதே பிறப்பில்லா பெருவாழ்வு என்பர்'[33] எனப்போற்றுவது இங்கு எண்ணத்தக்கது.

மனிதர்கள் இறப்பர். மகான்களாகிய சித்தர்கள் இறப்பையே தமது தவத்தினால் வென்று விடுவர். அவர்கள் பிறப்பு எனும் சங்கிலியிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டவர்கள். பிறப்பில்லை என்பதும் இறவா நிலை என்பதும் ஒன்றேயாகும்.

சித்தர்கள் இறவா நிலை அடைந்ததால் சூக்கும உடல் என்கிற ஒளிவுடம்பில் ஞான வாழ்வு வாழ்வர் என்பதும், அவர்களை நோக்கி அன்பு செய்தால் அவர்கள் அருள் செய்வர் என்பதும் பெறப்படும் கருத்துகளாகும்.

3.9 அநுபூதி நெறிக்கொள்கை

சித்தர்கள் பேரின்பம் அடைந்தவர்கள். ஞானப்பால் எனும் அமிழ்தை உண்டு, மரணம் தவிர்த்த ஞானிகளின் இறை அநுபவமே அநுபூதி நெறியாகும். ஞானவழி முறைகள் அனைத்தும் அவர்தம் கொள்கைகளாகின்றன.

பட்டினத்தார் பேரின்பத்தை யறிந்து மகிழ்ந்திருந்தார். இவர் ஞானத்தைப் பெற்றார் என்பதைவிட ஞானம் இவரை விரும்பியதாகக்

கூறுவர். இதுவே பட்டறிவு ஆகும். இதனை, 'எட்டாத பேரின்பம் என்னை விழுங்கி யிருக்கின்றதே' (ப.சி.பெ.கோ 109) எனும் அவர்தம் பாடலிலிருந்து அறியலாம்.

செய்கின்ற தவத்தால் யாக்கை மிக உருக, என்பு உருக, பட்டறிவு பொருந்த வேண்டும் என பத்திரகிரியார் தெரிவிப்பர். மேலும் அவர் அறிந்த ஒன்றை அடைவது உயர்வு என மொழிவர். இதனை அவர் 'போக வநுபூதி பொருந்துவது எக்காலம்' (ப.சி.பெ.கோ 176) என உரைப்பர். இதன் வழி அநுபூதி நெறிதான் உறுதிப் பொருளாகிய வீட்டை அடைய சிறந்த வழியாகும் என்பது தெளிவாகிறது.

ஞானம் என்பது அவரவரே முயன்று அடையும் தகைமையது என்பதை

"ஒருவர்தின வொருவர்சொரிந் துற்ற போதே
உற்றவர்க்கோ சொரிந்தவர்க்கோ வுறுப் பாராய்
மருவுமந்தச் சொப்பனத்திற் கண்ட காட்சி
மகிழ்ந்தவர்க்கோ கேட்டவர்க்கோ மதித்துப் பாராய்
உருசியுடன் அறுசுவைகொண் டுண்டவர்க்கோ
உவகையுடன் கண்டவர்க்கோ வுன்றிப் பாராய்
தெரிசனமும் கண்டுசிந்தை யுற்ற பேர்க்குச்
சிவஞானம் அவரவர்க்கே தெளியுந் தானே"

(ப.சி.பெ.கோ 424) என்று சிவானந்த போதம் கூறுகிறது.

இதன்வழி, ஒருவருக்குக்கிட்டிய ஞான அறிவு, பேரின்பம் முதலியவை மற்றவர் அடைந்திடும் முன் அவர்க்கு எவ்வளவு சொல்லியும் அறிவுறுத்தியும் அவர் முழுப்பயனை அடையார் என்பதும் அவரவர்கள் கண்டு களித்திடும் பொழுதே உண்மை விளங்கும் என்பதும் தெரியவருகிறது.

அனுபவ அறிவின் சிறப்பைப்பற்றி,

"ஞானம் என்பது அவரவர் அனுபவத்தின் அறிவு
பேரானந்தம் அடைவதாகும். இதை மற்றவர்
களுக்கு எடுத்து சொல்ல முடியாது".[34]

எனக் கூறுவது இங்கு மனங்கொள்ளத்தக்கது.

வாழ்வியல் களஞ்சியம் அநுபூதி நெறியை,

"அநுபூதி என்பது நேரடிக் கடவுள் உணர்வு
சாதாரணமாக நம்முடைய பட்டறிவுகள்
புலன் மூலம் கிடைப்பவை. அறிவு புலன்
வழியாகவும் தருக்க முறைகளாலும்
கிடைக்கிறது. ஆனால் அநுபூதி நிலை
புலன்கடந்த அனுபவம். அநுபூதிமான்கள்
இறைவனை நேரில் கண்டவர்களாகக்
அறியப்படுகிறார்கள். உண்மை நிலையினையும்
அறிந்து வெளியிடப்பட்ட உண்மைகள்
அநுபூதி நெறிக்கொள்கை
என்று கூறப்படுகின்றன."[35] என வரையறுக்கின்றது.

இவ்வரையறை சித்தர்களின் அநுபூதி நெறிக்கு ஒத்ததாக இருக்கிறது.

ஞான நூல்கள் அனைத்தும் அநுபவத்தின் வெளிப்பாடுகளாகும். அவ்வின்ப வெளிப்பாட்டினை யார் ஒருவர் அடைகின்றாரோ அவரே அநுபூதிமான் ஆகிறார். சித்தர் பாடல்கள் எல்லாம் அநுபவக் கூற்றுகள். அவற்றை நேரில் நாமே அனைத்துத் தெளிவது நல்லோர் கடனாகும். அதுவே வாழ்வியல் நெறியாகும்.

'வீடுபேறு' வாழ்க்கையின் குறிக்கோள். அதை ஞானத்தால் பெறலாம் என்றும் அநுபவத்தால் அடைய வேண்டும் என்றும் சித்தர்கள் உரைத்துவர்.

## 3.10 ஞானியருக்குச் சீடர் செய்யும் தொண்டு:

ஒளியுடம்பாய் மறைந்த ஞானிகள் 'சற்குரு' எனப்படுவர். நற்கருத்தைக் கூறும் நடமாடும் தவசிகள் 'சொற்குரு' என்பர். ஞானநிலையில் சென்று கொண்டு இருப்பவரும் அநுபவ நெறியில் செல்பவர்களையே நேரில் காண முடியும். அவர்களே குருவாக உள்ளார்கள். அப்படிப்பட்ட 'குரு'வைக்கண்டு, வணங்கி உண்மையை உணர வேண்டும். குருவின் உபதேசமே அறிவாகும். அப்பொழுதே தெளிவு பிறக்கும். நூல்களைக் கற்பதனால் மட்டுமே உயர்வு கிட்டாது. தூய அறிவு வடிவாய் உள்ள அத்தகு தலைவனின் திருவடியைப் போற்றினால் தான் உண்மையறியலாம். அத்தகு குருவின் தவத்திற்கு உதவியாகவும் அவருக்குத்

தொண்டனாகவும் இருத்தலே, ஞானநிலையை அடையும் வழியாகும்.

அன்பு செய்வதால் அன்பனாகி, தொண்டு செய்வதால் தொண்டனாகி, அடியை வணங்குவதால் அடியராகி, நேசிப்பதனால் நேசனாகி, அருளைப்பெற முயல வேண்டும். ஞானியர் சொல்லும் கருத்தினை முழுமையாக ஏற்று அவர்கள் செய்யும் அறச்செயலுக்குத் துணையாக இருந்து உதவுவது தொண்டாகும்.

தொண்டு செய்து தொழுது வணங்கி மேன்மையை அடைக என்பதைத்

"தொண்டுமட்டு மன்புடன் தொழுதுநோக்க வல்லிரேல்"

என சிவவாக்கியர் கூறுவர் (ப.சி.பெ.கோ.69)

தொண்டின் சிறப்பினை,

"தொண்டருக்குத் தொண் டுபட்டுத் தொண்டு
செய்வதெக்காலம்"

(ப.சி.பெ.கோ.176) என பத்திரகிரியார் புகல்வர்.

பெரியோர்க்குத் தொண்டு செய்க என்பதை

"யாவர்களும் பெரியோரை அடுத்துக் காத்தே
அவரடிக்கே பணிந்துமிக அன்பே செய்தே
ஆவலுடன் பன்னிரண்டு வருடங் காத்தும்..."

(ப.சி.பெ.கோ.427) என சிவானந்த போதம் கூறுகிறது. இதனால் குருவின் திருவடியை வணங்கி பல்லாண்டுகள் தொண்டு செய்து உண்மையை அறியலாம் என்பது புலனாகிறது.

இறையனுபவம் பெற்றோரின் செயல்கள் பல சொல்ல முடியாதவை எழுத்துக்களாகி பாடலாக்க முடியாதவை. அவை உணரத்தக்கவையாய் உள்ளன. அவற்றை தொண்டு செய்து உணர வேண்டும் என்பது சித்தர்களின் கருத்தாகிறது.

## 3.11 சன்மார்க்கம்

சன்மார்க்கம் என்பது தூயவழியாகும். இது உண்மையை எடுத்துரைப்பது. 'ஒளியுள்ள பாதையைச் சுட்டுவது. சமத்துவ நிலையாகும். இது சாதி, மத, இன, மொழி, நிறம் கடந்த மனித நிலையாகும். மக்கள் அனைவரும் ஒன்றென்னும் ஒப்பற்ற நிலை இதுவாகும்.

இந்நிலை குருவின் பாதத்தைத் துணையெனக் கருதி உறுதிபட தொண்டு செய்யத் தூண்டும். சுருங்கக் கூறின் இது பற்றற்ற நிலையாகும்.

துறவுக்குத் தன்னை தயார் செய்து கொள்ள விரும்பினால் முதலில் அறிய வேண்டியதும் முடிவில் அறிய வேண்டியதும் சன்மார்க்க நெறியாகும். ஆன்ம ஈடேற்றம் அடைய சன்மார்க்க நெறியே உயர்ந்தது.

சன்மார்க்கமில்லாத நூலை விரும்பாதே என்பதை, 'தவநிலை விட்டுத்தான் டாதே நல்ல/சன்மார்க்க மில்லாத நூலைவேண் டாதே' (ப.சி.பெ.கோ. 259) என கடுவெளிச்சித்தர் அறிவுறுத்துவர்.

தவத்திற்குக் கேடு செய்யும் தீயநெறிகளில் செல்லலாகாது என்பதை, '...துன்மார்க்கர்கள் கூட்டத்தில் மகிழ்ந்து சேராதே' (ப.சி.பெ.கோ. 258) என கடுவெளிச்சித்தர் கடிந்துரைப்பர்.

ஞானம் என்னும் தூயஅறிவு மனிதனுக்கு மட்டுமே கிட்டுகிறது. ஏனைய உயிர்களுக்கு இல்லை. மெய்ஞ்ஞானம் என்பது உடல் உயிர் பற்றியது. உடலில் மண் என்பது மூலாதாரப்பகுதியாகும். விண் என்பது உடம்பின் சிரசு, அதாவது புருவமையம் என்னும் சுழுமுனைப்பகுதியாகும். இவ்விரண்டிற்கும் தொடர்புண்டாக்கிக் கட்டி வைக்கும் மார்க்கம் தான்

நன்னெறியாகும். அதுவே சன்மார்க்கமாகும். உலகில் பெரும்பாலோர் செல்திடும் பொதுமார்க்கத்திற்கு அப்பாற்பட்டு ஆன்மாவின் மேன்மையை உணர்ந்து தெளிந்திடும் சன்மார்க்கத்தை "மண்ணையும் விண்ணையும் கட்டிப் பயிர் செய்த/மார்க்கத்தைக் கேளடி ஞானப்பெண்ணே" (ப.சி.பெ.பா.575) என வள்ளலார் வெளிப்படுத்துவார் சன்மார்க்கம் பற்றி,

> "சன்மார்க்கம் என்பது நன்னெறி எனப்பொருள்படும். இது சைவசமயம் கூறும் சரியை முதலிய நான்கு நெறிகளுள் நான்காம் நிலையாகிய ஞானநெறியைக் குறிப்பதாகும்"[36] என வாழ்வியற்களஞ்சியம் குறிப்பிடுகிறது.

இதன்வழி நான்காம் நிலையாகிய ஞான மார்க்கமே சன்மார்க்கம் என்பது புலப்படும்.

சமயங்கடந்த நிலையைச் சித்தர்கள் உணர்த்தினர் என்பதை

> "ஞானிகளும் சித்தர்களும் இடைக்கிடையே
> தோன்றி 'ஒரேபரம் பொருளைத்தான்
> அறுமதங்களும் வெவ்வேறு பெயர்கூறிப்
> புகழ்கின்றன' என்ற ஞானமதத்தை
> ஜனங்களுக்குள்ளே உறுதிப்படுத்திக்
> கொண்டு வந்தார்கள்."[37]

என மகாகவி சி.சுப்ரமணிய பாரதியார் விளக்குவர்.

சமய மத நெறிகட்கு அப்பாற்பட்ட ஓர் உண்மை நிலையை அறிதல் தேவையாகும். அந்நிலையே சன்மார்க்கமாகும். அதனை அடைந்தவரே சன்மார்க்கர் ஆவர். அவர்கள் தவசிகள்; ஞானப்பாதைக்கு வழிகாட்டுவர்.

## தொகுப்புரை:

இதுகாறும் ஆராய்ந்தவற்றால் கீழ்க்காணும் முடிவுகள் அறியப்பட்டுள்ளன.

சித்தர்கள் நூலறிவொன்றினாலேயே இறையுணர்வையும் ஞானத்தையும் முழுமையாக எய்த இயலாது எனக் கருதினர். ஆசானாகிய குருவின் வழிகாட்டலன்றி, ஒருவர் சித்தி பெற இயலாது. குருசீடர் மரபு தொன்று தொட்டு வந்து கொண்டிருக்கிறது.

தொண்டாற்றும் சீடன் அளவிடற்கரிய அன்பைத் திருவடிக்குக் காணிக்கையாக்குதல் பக்தியாகும். மறைந்த தலைவனாகிய சற்குருவிற்கும், நடமாடும் சொற்குருவிற்கும் பூசனை இயற்றல் வேண்டும்.

அவர்கள் இவ்வழிபாட்டு நெறியினை வலியுறுத்துகின்றனர். குருவின் திருநாமத்தைத் தியானிப்பதும், அருள்பெற்ற ஞானியரைப் பூசிப்பதும் அவர்கள் வழிபாட்டு நெறிகளாகும்.

குருவின் அறவுரை சீடனுக்குப் பெருந்துணையாய் அமைகிறது. அவர் வழிகாட்டுதல் இல்லாவிடத்து வெற்றி பெறாது. ஒருவற்கு மெய்ப்பொருளை அறிய மெய்யுணர்வு வேண்டும். அம் மெய்யுணர்வு ஆசான் உணர்த்த விளையும்.

பஞ்சபூதங்களின் இயல்புகளை உணர்ந்து வென்றவர், இறைநிலை எய்தியவராகக் கருதப்படுவர். அவரே குரு ஆவார். அவர் அருளால் தெளிவு கிட்டும். அத்தலைவனின் சிறப்பை அறிந்து ஒழுகுதலே உய்யும் நெறியாகும். தன்னை யறியும் அறிவு இன்றியமையாதது. அதனைப் பெற முயலும் ஆர்வம் சிறப்புடையதாகும்.

மனித முயற்சிகளுக்கு அமையும் தடை வினையாகும். அது மடமையைத் தோற்றுவிக்கும். அதனை வெல்லல் சிறப்பளிக்கும்.

ஒருவர் தம்பிழையை உணர்ந்து, தன்னையறியும் போது, அவருக்கு மெய்யுணர்வு தெளிவாகும்.

ஞானப்பாதையில் செல்லும் ஒருவர் விரும்பும் பெண்ணின்பம், அவர் மேற்கொண்டிருக்கும் உயர்தவத்துக்குத் தடையாகும். அஃது உடல் அழிவுக்கு வழிவகுக்கும்.

ஐம்பொறிகளை ஒரு கட்டுப்பாட்டிற்குள் இருக்கச் செய்தல் இன்றியமையாததாகும். அப்பொறிகளின் வழிச்செல்லல் பிறவியின் பெரும்பயனை விளக்கும்.

துறவுநெறி அறிவுறுத்தப்பட்ட பின், ஒருவர் மேற்கொள்ளும் தவம் சிறப்பானது. பற்றறுத்தலே துறவாகும். உணர் எல்லைகளின் செயல்களால் இறையுணர்வு கிட்டும்; ஆன்ம ஈடேற்றம் எய்தலாம்.

தவமில்லையேல் பேரின்பநிலை வாய்க்காது. தவத்தோர் தவஉணவினை உண்டு வாழ்வர். அவர்கள் உடலும் உயிரும் ஒன்றி, உயரிய ஞானச் செயலில் ஈடுபட்டனர்.

அவர்கள் காயத்தை வளப்படுத்தி, எப்பொழுதும் இளமைப் பொலிவுடன் விளங்கினர். அவர்கள் உடலுயிர் ஒன்றிய நிலையில் ஞான ஒளியில் திகழ்ந்தனர்.

குருவின் அறிவுறுத்தலால் ஒருவர் விந்துவின் சிறப்பை அறிய இயலும். காற்றின் கணக்கறிந்து கட்டுதல் எனும் வாசி நெறிப் பயின்று, அவர்கள் வீடுபேறு எய்தினர்.

மூன்றாம் கண்ணான சுழி முனையறிவு பிறவா நெறியை அடைய துணை புரிகிறது. பல ஆண்டுகள் நெறிப்படி தவமியற்றும் போது மூலக்கனல் தோன்றும். அந்நிலையில் தசநாத ஓசை எப்பொழுதும் இருசெவிகளில் கேட்டுக் கொண்டிருக்கும்.

சும்மா இருக்கும் நிலையே ஆன்மப் பயணத்தில் மேன்மையான நிலையாகும். ஆசான் துணையால் அழுக்கு நீங்கிய உடல், மெய்யாகி காயசித்தி அடைகிறது.

தவத்தால் குண்டலினி சக்தியை அடையலாம்.

அவர்கள் சோதியைக் கண்ணுற்று உள் உடல் ஆக்கம் பெற்று மேன்மையுறும் வழியைக் காட்டுவர். மேலும் அவர்கள் உயர்ஞான அமிழ்தப்பாலைக் கறந்து, உண்டு, உய்யும் வழியை உணர்த்துகின்றனர்.

மகான்களாகிய சித்தர்கள் தம் தவ வலிமையால் இறப்பை வெல்வர். அவர்கள் பிறப்பு என்னும் தளையிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வர்.

சித்தர்கள் இறவா நிலை எய்தி ஒளியுடம்பில் ஞானவாழ்வு வாழும் சற்குரு' ஆவர்.

அவர்கள் அடைந்த பேரின்பத்தை ஒருவர் சொல்லக் கேட்டோ, நூலில் கற்றோ அதன் முழுப்பயனை அடைய இயலாது. அவரவர் தம் அநுபவத்தால் அதனை அடைவதே சிறப்பாகும்.

மனித வாழ்க்கையின் குறிக்கோள், வீடுபேறு அடைதலாகும். அதை ஞானம் ஒன்றினாலேயே பெறலாம்.

சீடன், ஆசானுக்கு இயற்றும் தொண்டால் இறையனுபவத்தைப் பெறலாம்.

சித்தர்கள் நெறி சன்மார்க்கமாகும். அது சமய நெறிகளைக் கடந்தது. அந்நிலை எய்தியவர்கள் சன்மார்க்கர் ஆவர். சன்மார்க்க நெறியே உலகை உய்விக்கும்.

# சான்றெண் விளக்கம்

1. சுப்பிரமணியபிள்ளை கா., சைவசித்தாந்த வரலாறு ப.40
2. ஸ்வாமி ஸ்ரீராமானந்தா., யோகதாராவலி ப. 3
3. ஸ்ரீரங்கம் சித்தர்., வாழ்வின் திறவுகோல் ப.28
4. சோமு,மீ.ப., சித்தர் இலக்கியம் (முதல் பகுதி) ப.170
5. ரெங்கராஜு. பி., சித்தர்கள் அருளிய ஞானநூல் ப.138
6. இராமலிங்கசுவாமிகள்., திருவருட்பா பிரிவாற்றாமை பாடல் 1437 ப.265
7. ஸ்ரீரங்கம் சித்தர்., வாழ்வின் திறவுகோல் ப.29
8. தவத்திரு.ரெங்கராஜ தேசிக சுவாமிகள்., சித்தர்கள் போற்றித் தொகுப்பும் அகத்தியர் தத்துவ பூசைமுறையும் ப. 1
9. தவத்திரு.ரெங்கராஜ தேசிக சுவாமிகள்., அருள்ஞான அறச்சிறப்பு அகத்தியரின் அருள்முப்பு ப.23
10. மறைமலையடிகள் தமிழர் மதம் ப.244
11. நாராயணன்.க. சித்தர்தத்துவம் ப.126
12. தவத்திரு.ரெங்கராஜ தேசிக சுவாமிகள், ஆய்வாளருக்கு அளித்த நேர்முகப்பேட்டி நாள் 9.1.90 இடம்:- ஓங்காரக்குடில் - துறையூர்.
13. வேங்கட சுப்பிரமணியன், ச., சித்தர்கள் கண்ட சமுதாயம் (முன்னுரை) ப.இ.

14. ஸ்ரீராமானாது., யோகதாரவலி ப.(7)

15. தவத்திரு. ரெங்கராஜ தேசிக சுவாமிகள் போற்றினால் உனது வினை அகலுமப்பா ப.3

16. ஸ்ரீரங்கம் சித்தர்., வாழ்வின் திறவுகோல் ப.48

17. ஜெயா. பி., 7வது அகத்தரங்கு ஆய்வுக் கோவை (தொகுதி 1) ப.224

18. கணேசன். பி.சி., சித்தர்கள் கண்ட தத்துவங்கள் ப.49

19. சிவஞானம், ம.பொ., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு ப.93

20. ஆய்வாளருக்கு தவத்திரு. ரெங்கராஜ தேசிக சுவாமிகள் அளித்த நேர்முகப் பேட்டி நாள் 29.1.95 இடம் ஓங்காரக்குடில், துறையூர்.

21. பாண்டியன். கி., சித்தர் சிவவாக்கியர் பாடல்கள் ஓர் ஆய்வு ப.48

22. விசுவநாதம், கி.ஆ.பெ., வாழ்வின் திறவுகோல் (முன்னுரை) ப.1

23. இளங்குமரன், இரா., சித்தர் பாடல்கள் சிவவாக்கியர் ப.16

24. இளமதி சானகிராமன், க., சித்தர்களின் சிந்தனைகள் பக்.18,19

25. திருமந்திரம் தியானம் எண்.606 ப.98

26. தங்கவேல் சுவாமிகள், எம்.பி., குண்டலினி யோகம் ப.8

| | | | |
|---|---|---|---|
| 27. | இளமதி சானகிராமன், க., | பேரின்ப வாழ்வு | ப. 126 |
| 28. | முருகேசன், சி.எஸ்., | சித்தர்கள் கண்ட இறைமை | ப.55 |
| 29. | தவத்திரு. ரெங்கராஜ தேசிக சுவாமிகள் | சித்தர் வழிபாடும் உண்மை ஆன்மீக விளக்கமும் | ப. 27 |
| 30. | மாணிக்கவாசகம், இரா., | ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டு மலர் | பக். 274 275 |
| 31. | மாணிக்கவாசகம், இரா., | சித்தர்கள் பரிபாஷை அகராதி | ப. 12 |
| 32. | சீனிவாசன். கு., | அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆய்வுக் கோவை கட்டுரை - சாகாக்கலை | ப.344 |


குறிப்பு:-

உருசிய நாட்டு உயிரியல் விஞ்ஞானி வெசிலியோ விலோவிட்ச் குப்ரிவிட்ச் சாகாக்கலை பற்றி மாஸ்கோ லிட்டாரி கெஸட்டில் கட்டுரை ஒன்று எழுதியிருக்கிறார். காப்ரியல் லோரின்ஸ் என்பவர் அக்கட்டுரையை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். அம்மொழி பெயர்ப்பு 04.01.1969 இந்து நாளேட்டில் வெளிவந்தது. அச்செய்தி,

| | | | |
|---|---|---|---|
| 33. | தெய்வநாயகம், சி.வே., | [illegible] | பக். [illegible] |
| 34. | தவத்திரு ரெங்கராஜ தேசிக சுவாமிகள்., | போற்றினால் உனது வினை அகலுமப்பா | ப.இ |
| 35. | வாழ்வியற் களஞ்சியம்., | தொகுதி ஒன்று | ப.346 |
| 36. | வாழ்வியற் களஞ்சியம்., | தொகுதி எட்டு | ப.704 |
| 37. | சுப்பிரமணிய பாரதியார், சி., | தத்துவம் | ப.27 |

## 4.0 முன்னுரை

பன்னெடுங் காலமாய்த் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள் அறிவுறுத்தப்படுகின்றன. அவை பற்பல சான்றோர்களால் இயம்பப்படுகின்றன. அவர்களுள் சித்தர்களும் அடங்குவர். அவர்கள் தம்பாடல்களில் அவற்றை ஏற்ற இடங்களில் எடுத்துரைக்கின்றனர்.

அறத்திற்குட்பட்ட செயல்களையும், அதற்கு மாறான செயல்களையும் மாந்தர் மேற்கொள்வர். மாந்தரிடம் வாழ்வியலில் மேற்கொள்ளும் நன்மை பயக்கும் செயல்களை நன்னெறிகளாகவும்; தீமை பயக்கும் செயல்களைத் தீய நெறிகளாகவும் கருதலாம். நன்மையையும் தீமையையும் இனங்காட்டுவது சித்தர்களின் இயல்பு. அவர்கள் காட்டும் அறநெறிகளை அவர்தம் பாடல்களின் வழி அறியலாம். அவற்றைப் பகுத்தும் தொகுத்தும் காண்பது நன்மை பயக்கும்.

அறிவும் மனமும் ஒன்றிற்கொன்று இசையாமல் செயல்படுவது வாழ்வாகாது. முன்னோர்களாகிய சித்தர்கள், அறிவும் மனமும் பொருந்தி வாழ நன்னெறிகளை உணர்த்தியுள்ளனர். செய்ய வேண்டுவனவற்றைச் செய்யாதிருப்பதும்; செய்ய வேண்டாதவற்றை விரும்பிச் செய்வதும், வாழ்வின் நோக்கத்திற்குத் தடைகளாகும்.

ஆதலின் அவர்கள் காட்டும் அறநெறிகள், செய்யத்தக்கவை, செய்யத் தகாதவை எனப் பகுப்பெற்று இவ்வியலில் ஆராயப் பெறுகின்றன.

## 4.1 செய்யத் தக்கவை

மனிதர்கள் உலக வாழ்வியலில் மேற்கொண்டொழுகத் தக்க நன்னெறிகள் செய்யத் தக்கவை எனக் கொள்ளப்படுகின்றன. அந்நன்னெறிகளை அவர்கள் வாழ்வியலில் மேற்கொண்டொழுகின் மேன்மையெய்துவர். ஆகவே அவர்கள் போற்றத் தக்க நிலையை எய்துவர்.

செய்யத் தக்கவை என்பதை மேலும் 1.அன்பு 2.அறம் 3.ஞானியரிடம் தொடர்பு 4.மனஉறுதி எனப் பிரித்துக் காணலாம்.

### 4.1.1 அன்பு

மனிதர்கள் வாழ்வியலில் செய்யத் தக்கவற்றுள் முதன்மையானது அன்பு செய்தலாகும். சித்தர் பாடல்கள் அவர்கள் மற்றவர்களிடத்துச் செலுத்தும் அன்பையும், குருவின்மீது செலுத்தும் அன்பையும் குறிப்பிடுகின்றன. அன்பே எத்தகைய வாழ்வுக்கும் உயர்நிலையைத் தரவல்லது. குறிப்பாக ஆன்மீகத் துறையில் அன்பே முதன்மை பெறுகிறது எனலாம்.

"அன்புற்று அமர்ந்த வழக்கென்ப; வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு [1]

எனும் திருக்குறள் அன்பின் சிறப்பை நுவலுகிறது. இக்குறளுக்கு

'துறக்கத்துச் செல்வமுடையும் பேரின்பத்தை யடைதலை இல்வாழ்க்கையில் பொருந்திய அன்பின் பயன் என்று கூறுவர்'[2] என பரிமேலழகர் கூறும் விளக்கம் மனங்கொள்ளத் தக்கது.

அன்பால் இறைவனை அடையலாம். அன்பால் இறைவனை அடைந்தவரின் அடியார்களுக்கு அன்பு காட்டி வருவதே நல்வழியாகும். இவ்வாறு தொடர்ந்து செய்யும் அன்பே, ஞானத் துறையில் உயிரை உருக்கி, உள்ளொளி உண்டாக்கும் தன்மையைத் தரவல்லது. அடியாரிடம் அன்பு செய்து, குருவினால் ஞானம் உணர்த்தப் பெற்று உய்ய வேண்டும் என்பதைப் பட்டினத்தார், 'ஆன அடியார்க் கடிமை கொளக் கிட்டாதோ / ஊனமற வென்னை யுணர்த்துவித்தல் கிட்டாதோ' (ப.சி.பெ.கோ 131) எனத் தெரிவிப்பர்.

தாயின் கருவில் அகப்பட்டு, அதன்வழி பிறந்து, மீண்டும் இல்வாழ்வில் ஈடுபட்டு, அழிந்திடும் நிலைக்கு மனதைச் செலுத்தாமல், தலைவனின் மீது அன்பு வைத்து, அவ்வன்புக்காகக் காத்துக் கிடந்து, அருவி போன்று விழிகளில் நீர் சொரிந்து, மகிழும் காலம் சிறந்தது. இதனைக் 'கருவின் வழியறிந்து கருத்தைச் செலுத்தாமல் / அருவி வழிசொரிய அன்புவைப்ப தெக்காலம்' (ப.சி.பெ.கோ 179) எனக் கூறுவர் பத்திரகிரியார்.

மனதில் எள்ளளவு கூட அன்பு இல்லாதவர் முத்தி அடைதல் இயலாது என்பதை

'எள்ளளவும் அன்பகத்தில் இல்லா தார்முத்தி
எய்துவது தொல்லுலகில் இல்லை யெனவே'

(ப.சி.பெ.சோ 212) என பாம்பாட்டிச் சித்தர் உணர்த்துவர். இதன்வழி, அன்பு இல்லையேல் முத்தி இல்லை என அறுதியிட்டுக் கூறுவதை அறியலாம். இக்கருத்தை அரண் செய்யும் வகையில்

"எல்லாம் வல்ல - எங்கும் நிறைந்த
இறைவனை மனமொழி மெய்களால்
போற்றவேண்டும். அன்பு, இரக்கம்,
தொண்டு ஆகியவற்றைக் கொண்டவர்கள்
வாழ்வே சிறந்தது. இவையே சித்தர்
பின்பற்றிய நெறிகள்; உலகிற்கு
உணர்த்திய நெறிகள்"[3]

என்னும் கூற்று உள்ளமை இங்குக் கருதத்தக்கது.

இவற்றால் அன்பு வழியே சித்தர்கள் வழியாகும் என்பது புலனாகிறது. ஒவ்வொருவரும் அன்பு செய்து தம்நிலையை உயர்த்திக் கொள்ள முயலவேண்டும் என்பது அவர்கள் கருத்தாம்.

4.1.2 அறம் செய்

மனிதர்கள் தம்மால் இயன்றவரை பிறர்க்கு உதவி செய்வது உயர்ந்த செயலாகும். அறம், கொடை என்பனவெல்லாம் நற்குணங்களின் வெளிப்பாடுகளே. சித்தர்கள் பிறர்பால் மிக்க அன்புடையவர்கள். அவர்களின் செய்கைகள் எல்லாம் அறம் பற்றியதாகவே உள்ளன.

அறத்தின் ஆற்றலை

"முனிவரால் உயர்த்தப்பட்ட அம்மூன்றனுள்
ஏனைப் பொருளும் இன்பமும் போலாது,
அறன், இம்மை, மறுமை, வீடு என்னும்
மூன்றனையும் பயத்தலான் அவற்றின்
வலியுடைத்து"[4]

என பரிமேலழகர் இயம்புவது இங்கு நோக்கத்தக்கது.

உலகில் மனிதன் பிறக்கும் போது செல்வத்தோடு பிறக்கவில்லை. பின்னர் வாழ்ந்து, இறக்கும் போது செல்வத்தைத் தன்னோடு அவன் எடுத்துச் செல்வதில்லை. பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில், குறிப்பாக இச்செல்வத்தைப் பாடுபட்டுத் தேடியதாக அவன் எண்ணி; பிறர்க்குக் கொடுத்துப் பெரியோனாக விரும்பாது, யாருக்கும் தராமல் அதனை இறுகப்பற்றி இறந்து விடுகின்றான். பட்டினத்தார் அவனைக் 'குலாமர்' என அழைப்பர்.

இதனைப்

"பிறக்கும் பொழுது கொடுபோ வதில்லை பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோ வதில்லை இடைநடுவில்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியாது
இறக்குங் குலாமருக் கென்சொல்வேன் கச்சி ஏகம்பனே"

(ப.சி.பெ.கோ 94) எனும் பாடலால் அறியலாம். இப்பாடல் வழி வாழும் நாளில் செல்வம் சேர்ந்தால் அது தலைவனால் கொடுக்கப்பட்டது என எண்ணி அச்செல்வங்களை வறியாருக்குக் கொடுத்து வாழ வேண்டும் எனத் தெளியலாம்.

துறவிகளுக்கு உதவுவதும், உணவிடுவதும் உயர்ந்த செயல்களாகும். ஆனால் பலர் இவற்றைச் செய்வதில்லை. பட்டினத்தார் அத்தகையோரை நிலத்திற்குச் சுமை எனப் பழிப்பர் (ப.சி.பெ.கோ 95).

ஓர் ஆடவன் இறந்துவிட்டால் அவன் மனைவி வீதிவரை வந்து அழுது புரண்டெழுவாள். பெற்ற பிள்ளைகள் மயானக்கரை வரை வருவர். ஆனால் அவன் செய்த அறம் அவனுக்கு நல்ல நிலையை அளிக்கும் என்று சான்றோர் கூறுவர். இதனைப்

"பெண்டாட்டி மந்தை மட்டும்வரு வாள்பெற்ற
பிள்ளை மசானக் கரையின் மட்டும்
தெண்டாட்டுத் தர்மம் நடுவினி லேவந்து
சேர்ந்து பரகதி தான்கொடுக்கும்"

(ப.சி.பெ.கோ 335) எனும் பாடலால் அறியலாம்.

தர்மம் ஞானத்துக்கு வழிகாட்டும் என்பதைச்

'சீக்கிரந் தருமந் செய்யவேண் டுங்கொஞ்சந்
திருப்ப ணிகளு டிக்க வேண்டும்'

(ப.சி.பெ.கோ 335) என்று கொங்கணர் கூறுவர். இதனால் வாய்ப்பு கிட்டும் போது தம்மால் முடிந்தவரை தருமம் செய்ய வேண்டும் என்றும் திருப்பணிகள் செய்ய வேண்டும் என்றும் உணர்த்துவர். மேலான செயல்களைத் திருப்பணிகள் என்று சித்தர்கள் அழைப்பர்.

உலகில் எளியவர்களாக, பலர் உள்ளனர். ஆதலால் அவர்கள் பசி என்று கேட்டு நிற்கும் போது அவர்களுக்கு அன்னத்தைக் கொடுத்து மகிழ வேண்டும் என்றும் நாளைவா என்று சொல்லக்கூடாது என்றும் கொங்கணர் கூறுவர். இதனை

"ஏழை பணாதிக ளில்லையென் றாலவர்க்
கிருந்தா லன்னங் கொடுக்க வேண்டும்
நாளையென் றுசொல்ல லாகாதே..."

(ப.சி.பெ.கோ.335) என்பதால் அறியலாம்.

அறவாழி அந்தணனாக தலைவன் உள்ளான் என்பதும், பிற உயிர்கள் பால் இரக்கம் காட்டுகின்றவருக்குத் தலைவன் அருள் கிட்டும் என்பதும், அறம் செய்வோர் வாழ்க்கையில் மேன்மை எய்துவர் என்பதும் சித்தர்கள் கருத்துகளாம்.

### 4.1.3 ஞானியரிடம் தொடர்பு கொள்ளல்

ஞானியர் கூறும் அறிவுரைகளைக் கேட்டு, மனம் தெளிய வேண்டும். மனம் தூய்மையே அறமாகும். ஆதலால் அவர்களின் தொடர்பு இன்றியமையாதது.

மனம் கரைந்து உருகி, ஒன்றான தலைவனை உள்ளுணர்வினால் உணர்ந்து, தெளிவடைய வேண்டும் என அறிவுறுத்துவர். இதனை

'... கரைந்து கரைந்துருகி
உள்ளுணர்ந்து நெஞ்சே பார் ஒன்று'

(ப.சி.பெ.கோ.156)

என்பதால் தெளியலாம்.

நல்வழியைப் புலப்படுத்தும் சன்மார்க்க நெறியினை, எப்போதும் நாடியிருக்க வேண்டும் என்றும், ஒவ்வொரு நாளும் தலைவனைப் போற்றி வணங்கி, துறவியர் கூட்டத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டு வாழ வேண்டும் என்றும் கடுவெளிச்சித்தர் கூறுவார். இதனை,

"நல்ல வழிதனை நாடு - எந்த
நாளும் பரமனை நத்தியே தேடு
வல்லவர் கூட்டத்திற் கூடு - அந்த
வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக் கொண்டாடு".

(ப.சி.பெ.கோ.256) என்பதால் அறியலாம்.

ஞானியர் தொடர்பு நன்னெறியை அறிய உதவும் என்பதை

"செய்யதிரு மலரடியிற் சாத்தி ருந்தாற்
செலியதனி லுபதேசம் செய்வார் தாமே"

(ப.சி.பெ.கோ.422)

என்று சிவானந்த போதம் தெரிவிக்கிறது. இதன்வழி ஞானியரின் அறிவுரை கேட்டுத் தெளிய வேண்டும் என்பதும், அவர்தம் கருத்துகள் மேன்மைக்கு வழிகாட்டும் என்பதும் தெளிவாகின்றன.

ஞானியரை அண்டி, அருந்தவசியின் உண்மைப்பாதையை அறியாத மனம் பயன்படாது. ஆகவே, மனம் ஞானியரின் சொற்கேட்டு, உண்மையைக் குரு உணர்த்த உணர்ந்து, தெளிய வேண்டும். அவ்வழி வாழ்வது யாது பயனளிக்கும் என்று வினவி, ஞானியர் தொடர்பின் முதன்மையை உணர்த்துவர் பட்டினத்தார். இதனை

"ஆயாய் பலகலை ஆய்ந்திருந் தூய அருந்தவர்பாற்
போயா அவுண்மை யைத் தெரிந் தாயில்லை பூதலத்தில்"

(ப.சி.பெ.கோ.113)

என அவர் சொல்லுவர்.

உலகப்பற்றினைத் துறந்து, தன்னையறியும் தவநிலையைத் தெளிந்து, உணர்ந்த பெரியோர்களாகிய ஞானியர்களிடம் தொடர்பு கொண்டு, மேன்மையடைய வேண்டும் என்பதைச்

"சிந்தையற்ற பெரியோரை வணங்கிக் கொள்வாய்
சிவஞானி தன்னுடனே நேசஞ் செய்தே..."

(ப.சி.பெ.சோ.449) என்று சிவானந்த போதம் புலப்படுத்துகிறது. இக்கருத்தையே 'சிந்தை தெளிந்த பெரியோரைக் கண்டு சேவித்துக் கும்பி யடியுங்கடி' (ப.சி.பெ.சோ.586) என்று மதுரை வாலைசாமி வலியுறுத்துவர்.

சிந்தை தெளிந்த ஞானப்பெரியோர்களைக் கண்டு, அவர்களைக் குருவாக ஏற்றுத் தொடர்பு கொள்ள வேண்டும் என்பதும் அத்தொடர்பு உண்மையை உணர வாய்ப்பாக அமையும், என்பதும் அதன்வழி மனம் உறுதியான வழிமுறைகளைக் கைக்கொள்ள இயலும் என்பதும் சித்தர்களின் கருத்துகளாகின்றன.

4.1.4 மனஉறுதி

மனஉறுதியே தவநிலைக்கு அடிப்படை மனந்தூய்மையும், தெளிவும் பெற்றால் தான் ஞானவெற்றி கிட்டும். ஒரு செயலைச் செய்ய எண்ணித் துணிய வேண்டும். துறவு என்பது மிகவும் உறுதியாகச் செய்ய வேண்டிய ஒன்றாகும். தவம் செய்யவும், தியானம் செய்யவும், தானம் செய்யவும், நிட்டை செய்யவும் முதலில் தேவைப்படுவது மனவுறுதியாகும். அம்மனவுறுதியும் ஆசானை வணங்க வணங்க வளரும். மனவுறுதி இல்லையெனில் எது இருந்தும் பயனில்லை.

ஒரு செயலை ஆர்வத்தில் தொடங்கி, பாதியில் இடைமுறிந்து அழிவது மன உறுதியின்மைக்குச் சான்றாகும். முன்வைத்த காலைப்பின்

வைக்காத தீரம் வேண்டும். மனவுறுதி பெறாதவரை 'மட்டிகள்' என்றும் 'மாடுகள்' என்றும் விளிக்கின்றார் சிவவாக்கியர். இதனை 'மனவுறுதி தானிலாத மட்டிப் பேமாடுகள்' (ப.சி.பெ.சோ.82) எனும் அடியால் அறியலாம்.

வானில் விடுகின்ற பட்டம் காற்றில் ஆடிப் பறப்பது போல் மனம் எனும் பட்டம் வெவ்வினைக் காற்றினால் ஆடிஆடி உலகெனும் வானில், அறுந்து கொண்டுபோகிறது. எடுத்த செயலில் வெற்றி இல்லாமல் தடைபடுகிறது. மனம் நல்வினைப் பயனை உணர்ந்து தெளிந்திட வேண்டும் என்றும் உறுதிபடுத்துவர் பட்டினத்தார். (ப.சி.பெ.சோ.164)

நன்மையை அறிந்து, மாட்சிமையைப் பெற விரும்பாத மனம் சிறப்பினை அடைய முடியாது என்பதை 'மனமே உனக்கென்ன மாண்பு' (ப.சி.பெ.சோ.120) என வினவுவர்.

மனவுறுதி பெறாதவர்கள், மனச்செம்மையைப் போற்றி, அதை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று பட்டினத்தார் புலப்படுத்துவர்.

ஐயநிலையிலிருந்து நீங்கினால் தெளிவு பிறக்கும். அந்தத் தெளிவும் உண்மைப் பொருளை உணர்ந்த ஞானியின் வழிகாட்டலால் கிட்டும். அவ்வாறு ஞானி உணர்த்திய பின் அறிவதே தெளிவாகும். அத்தெளிவு மனஉறுதியை நல்கும்.

தெளிந்த மனம் மேற்கொள்ளும் அறச் செயல்கள் நற்பாதையைக் காட்டும் என்பதை

"தெளியத் தெளியத் தெளிந்த சிவானந்தத் தேன்
பொழியப் பொழியமனம் பூண்டிருப்பதெக்காலம்"

(ப.சி.பெ.கோ.179)

என பத்திரகிரியார் குறிப்பிடுவார்.

உலக மக்கள் பொருள்களிடத்துப்பற்று கொண்டு அலைகின்றனர். காலத்துக்கு ஏற்ப ஆசைகள் வளர்ந்து கொண்டே இருக்கின்றன. இருப்பினும் அடிப்படையான மண், பெண், பொன் என்னும் மூன்றுவித பேராசைகளால் அடையும் துன்பம் சொல்ல இயலாது. இவ்வாறான ஆசை உணர்வினை வெறுத்து, ஒதுக்கிவிட்டு, மனதில் திடம் கொண்டு வலிமையைப் பெருக்கிக்கொள்ள வேண்டும். அதுவே விவேகம் என்னும் அறிவாகும். அவ்வறிவே ஞானநிலைக்கு அடிப்படையாகும். ஞானத்திற்கு அடிப்படையான மன உறுதியைப்பெற வேண்டும் என்பதை

"பரப்பும் பலவித யோசனை எல்லாந்
சீயென்றொறுத்துத் திடங்கொள் விவேகம்"

(ப.சி.பெ.கோ.259) என கூடுவெளிச்சித்தர் குறிப்பிடுவார்.

மனம் திடங்கொண்டால், சித்தம் அறிந்து, தெளிந்து உயர்ந்திடலாம் என்பதை

"திடத்தி னால்மனஞ் சித்தா னாற்சித்தந்
தெளிந்து கொள்ளலாம் ஞானப்பெண்ணே"

(ப.சி.பெ.ஞா.589) என மதுரை வாலைசாமி வலியுறுத்துவர்.

உண்மையை உணராத மனிதன், துன்பம் அடைகின்றான். மனமாசு நீங்காவழி தூய்மையை அடைய முடியாது. ஞானத்தை அறிய அவன் தொடர்ந்து முயல்கிறான். மனம் சிறுகச் சிறுகத் தூய்மையடையும். ஆகவே முயற்சியும் உறுதியும் கொண்டு செயல் செய்யச் செய்ய நன்மைவிளையும். மனம் செம்மையான பின்னர் செயல் செய்ய வேண்டும் என்பதில்லை. இருக்கின்ற நிலையில் தொடர்ந்து செயல்பட வேண்டும். மன உறுதியே மனத்தூய்மைக்கு, அழைத்துச் செல்லும்; செய்யும் செயலுக்கு வெற்றியைத் தரும். இக்கருத்தினை,

"மனஞ்செவ்வை யாவதெப்போ தறிவதெப்போ"

(ப.சி.பெ.ஞா.702) என்றும்

"பாழான மாய்கை சென்றொழிவ தெப்போ
பரந்தமனஞ் செவ்வையாய் வருவதெப்போ"

(ப.சி.பெ.ஞா.702) என்றும் சட்டை முனிவர் வெளிப்படுத்துவர்.

பாழான சிந்தனைகளில் சிறப்புகளில்லை என்பதும் தூய மனமே நன்மையைத் தரும் என்பதும் மன உறுதி செயலில் வெற்றியை நல்கும் என்பதும் மனவுறுதியைப் பெற முயலவேண்டும் என்பதும் சித்தர்கள் கருத்தாகின்றன.

4.2 செய்யத்தகாதவை

மனிதர்கள் வாழ்க்கையில் எந்த உயிருக்கும் தீங்குதரும் செயல்களைச் செய்யக்கூடாது. அவ்வாறு செய்திடின், சமுதாயம் அழிந்துவிடும். வாழ்வியலில் செய்யத்தகாத செயல்களைச் சித்தர்கள் இனம் காட்டுவர். அவற்றை,

1. பாவம்,
2. பொய்,
3. வெகுளி,
4. கொலை,
5. கொள்ளை,
6. கோள்,
7. இகழ்தல்,
8. கஞ்சா,
9. மது,
10. செருக்கு,
11. தீய நட்பு,
12. குருவின்றி யோகம்,

என வகைப்படுத்தலாம். இனி ஒவ்வொன்றாகக் காணலாம்.

4.2.1 பாவம்

பிற உயிர்களுக்குக் கொடுமை செய்வது பாவம் எனக் கொள்ளப்படும். உயிர் போகும்படியான வறுமையே வந்தாலும், காயமே அழிந்தாலும் பாவங்கள் மிகும்படியான செயல்களைச் செய்யாதிருப்பது உயர்வு தரும் என்று பட்டினத்தார் கூறுவர். 'பாவி' என்று பிறர் விளிக்கும்படியான நிலை வேண்டாம் என அவர் சொல்லுவர். இதனை,

"ஆவியொடு காய மழிந்தாலும் மேதினியிற்
பாவியென்று நாமம் படையாதே"

(ப.சி.பெ.சோ.119) என்பதால் அறியலாம்.

உடம்பிற்கு மெய் என்று பெயர். மக்களுக்கு அது மெய் அன்று. பல ஆண்டுகள் வாழ்ந்தும் அது பொய்யாக விடுகிறது. பொய்யை நீக்கிக் கொள்ளும் வழியறிந்து, இறப்பிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும். அந்நிலையை அடைய பிறர்க்கு யாதொரு தீங்கினையும் நினையாதே என்று மக்களுக்கு அறிவுரை கூறுகின்றார் பட்டினத்தார். இதனை,

"இருப்பது பொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்குந் தீங்கினையுன் னாதே"

(ப.சி.பெ.சோ.121) என்னும் அடிகளால் அறியலாம்.

மக்கள் பாவம் செய்யாதிருக்க வேண்டும். பாவம் மிகுந்தால் யமன் கோபம் அடைவான் என்பதை

"பாபஞ்செய் யாதிரு மனமே நாளைக்
கோபஞ்செய் தேயமன்
கொண்டோடிப் போவான்
பாபஞ்செய் யாதிரு மனமே"

(ப.சி.பெ.கோ.225) என கடுவெளிச் சித்தர் புலப்படுத்துவர்.

மிக்க ஏழ்மையுடைய மக்களின் வயிற்றில் அடிப்பதும், தஞ்சம் என்று அடைக்கலம் கேட்பவரை மயக்கிக் கெடுப்பதும்; யாருக்கும் வஞ்சனை செய்ய நினைப்பதும் பாபச் செயல்கள். இதனைக் கொங்கணர்

"பஞ்சை பனாதி யடியாதே யந்தப்
பாபந் தொலைய முடியாதே
தஞ்சமென் றோரைக் கொடுக்காதே யாருக்கும்
வஞ்சனை செய்ய நினையாதே"

(ப.சி.பெ.கோ.335) எனத் தெரிவிப்பர்.

பிறர் பசிக்கு உணவு இடுகின்ற நல்லோரைக் கலைத்தல், ஞானியருக்குத் தொண்டு செய்பவரைத் தடுத்தல், நல்லோர்க்கு

அல்லல் செய்தல், மேலான தீட்சை பெற்று தவநெறியில் நிற்பவற்குக் கேடு விளைத்தல் ஆகியன பாவச் செயல்கள். இவ்வாறு பட்டியலிட்டு, சிவானந்தபோதம் எச்சரிக்கிறது (ப.சி.பெ.ஜோ.450).

தீமைகள் புரிபவரைப் பாவிகள் எனக் கூறுகின்ற சித்தர்கள், தீமை செய்வோர் தெளிவு பெற அறவுரையாக பாவம் செய்யாதே என உரைக்கின்றனர்.

உலக வாழ்க்கை நிலைபேறு உடையதன்று என்பதும் வாழுகின்ற காலம் வரையில் மற்றவர்க்குத் தீங்கு எண்ணாமலும் பாவம் செய்யாமலும் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதும் சித்தர்கள் உணர்த்தும் கருத்துகளாகின்றன.

## 4.2.2 பொய்

பொய் கூறுவது அறமற்ற செயல் என்பது ஆன்றோர் கருத்தாகும்.

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின், அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று"[5]

எனும் குறள் பலஅறங்களைச் செய்து அடையும் பயனைக் காட்டிலும் பொய்யாமையால் மேலான பயனை அடையலாம் எனக் கூறுவதன்வழி பொய் உரையாத நிலையின் சிறப்பை உணரலாம்.

பொய் உரையாத நிலை உண்மைப் பொருளை அறிந்திட வழிவகுக்கும் என்பதை

"பொய்யும் புலையுமிகப் பொருந்தியென் பேசலன்றி
ஐயோ வுனையுரைக்க அறிகிலேன் பூரணமே"

(ப.சி.பெ.சோ.152) என பட்டினத்தார் குறிப்பிடுவார்.

சொல்ல ஒண்ணாத அளவு சூதும், பொய்யும் கொண்டு வாழ்வில் வாழ்ந்து வருவது தவறு என்றும்; அச் செயல் அவருக்குச் சுற்றத்தினரே இல்லாமல் வெறுப்பை உண்டாக்கி முழுவதுமாய் குடும்ப வாழ்வை அழித்துவிடும் என்றும் கடுவெளிச்சித்தர் அறிவுறுத்துகின்றார். இதனை

"சொல்லருஞ் சூதுபொய் மோசம் செய்தாற்
சுற்றத்தை முற்றாய்த் துடைத்திடும் நாசம்..."

(ப.சி.பெ.சோ.225) என்பதால் அறியலாம்.

இந்த உலகமே பொய் கூறினாலும், பொய்கூறாத நிலையில் நிற்க வேண்டும் என்பதை,

"வைதோரைக் கூடவை யாதே - இந்த
வையம் முழுதும்பொய்த் தாலும்பொய் யாதே"

(ப.சி.பெ.சோ.258) என கடுவெளிச்சித்தர் உணர்த்துவர்.

வாழ்வில் பொய் உரைப்பது இழிவு என்பதும்; மெய்யை அறிய விரும்பவேண்டும் என்பதும்; பொய்மை இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் கேட்டினைத் தரும் என்பதும் சித்தர்கள் கருத்துகளாகின்றன.

4.2.3 வெகுளி

சினம் கொள்ளல் கூடாது, வெகுளி அடையாதிருப்பதே நன்மை பயக்கும். சித்தர்கள் இக்கருத்தை வலியுறுத்தி வெகுளியை நீக்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றனர்.

சினம் என்பதை மதங்கொண்ட யானையாக உருவகம் செய்வர். அவ்யானையின் மதத்தை அடக்க கூர்மையான உத்தி என்னும் அங்குசத்தால் குத்த வேண்டும். பின்னர் மதம் நீங்கிய யானையாக மனம் மாறும் என்பதை

"கோபமென்னும் மதயானை கொண்ட மதத்தைக்
கூர்கொள்யுத்தி அங்குசத்தாற் கொன்று விட்டேங்காண்..."

(ப.சி.பெ.கோ. 210) என பாம்பாட்டிச் சித்தர் சொல்லுவர்.

சினத்தைக் கொல்லாமல் விடுத்தால் அந்தச் சினம் தான் பற்றிக் கொண்டவரைக் கொன்றுவிடும் என்பது இதனால் புலப்படுகிறது.

சினம் என்ற பாம்பு இறந்துவிட்டால் ஞானநிலை கிட்டும் என்று இடைக்காட்டுச் சித்தர் இயம்புவார். இதனைச்

"சினமென்னும் பாம்பிறந்தாற் றாண்டவக்கோனே – யாவுஞ்
சித்தியென்றே நினையடா தாண்ட வக்கோனே"

(ப.சி.பெ.கோ.223) என்பதால் அறியலாம்.

இதனை மேலும் விளக்குவதாக

"அந்த பாம்பு எது தெரியுமோ? அது தான்
சினம்கோபம்-வெகுளி-ஆத்திரம் என்று சொல்லப்படும்
நச்சுப்பாம்பு, அதை நம் உள்ளத்திலே வாழ விடக்
கூடாது. அதை மாண்டு மடியச் செய்துவிட வேண்டும்.
அந்தப் பாம்பு மடிந்தால்தான் – செத்துப்
போனால்தான் – நாம் நினைப்பனவெல்லாம்
நிறைவேறும்; கைகூடும்; சித்தியாகும். ஆகையால்
அந்தச் சினமென்னும் பாம்பை அடித்துக் கொன்று
தூக்கி எறிந்துவிடு"[6]

என்னும் கூற்று அமைந்துள்ளமை இங்கு மனங்கொள்ளத்தக்கது.

தவம் மேற்கொள்ளும் தவசிகளுக்குச் சினம் அடங்கும் என்பதும் சினம் அடங்கியவழி ஞானம் சித்தியாகும் என்பதும் இவற்றால் புலப்படுகின்றன.

தீபம் எரிந்து கொண்டிருக்கையில் அதனை அழகிய மலர் என்று எண்ணிச் சென்றிடும் விட்டில் பூச்சியைப் போன்று, மனிதன் கோபத்தின் நெருப்பிலே வீழ்ந்து கொடியதோர் பிறவியை மேன்மேலும் அடைகின்றான். ஆதலின் கோபத்தை நீக்குமாறு கணபதிதாசர்

"தீபத்தை மலரென் றெண்ணிச் சென்றிடு விட்டில்போலக்
கோபத்தின் கனலில் வீழ்ந்து கொடியதோர் பிறவிபெற்றாய்
ஆபத்து வந்தா லன்னோ டியாவர்தாம் வருவார்அந்தக்
கோபத்தை மறந்து நாகை லிங்கரைத் தொழுவாய்நெஞ்சே"

(ப.சி.பெ.கோ.555) என வேண்டுவர். இதனையே

"காய்ச்சலுடன் கோபத்தைத் தள்ளிப் போடு"

(ப.சி.பெ.கோ.306) என அகத்தியர் அறிவுறுத்துவர்.

கோபம் கொள்ளல் தீது என்பதும் அது தெளிவிலாத் தன்மையின் வெளிப்பாடு என்பதும்; அதனை மறந்துவிடுவது உயர்வாகும் என்பதும் அதனால் தீயவை விளையும் என்பதும் ஆதலின் மேன்மையடைய விரும்புவோர் சினத்தைக் கைக்கொள்ளார் என்பதும் சினமிலா நிலையை எய்தவிரும்புவது நல்வழியாகும் என்பதும் சித்தர்கள் கருத்துகளாம்.

4.2.4 கொலை

ஒன்றின் உயிரை நீக்குதல் கொலையாகும். அத்தொழில் தீயது. அதனால் விளையும் இன்பம் நிலையில்லாதது. ஆதலின் அது செய்யத்தகாத ஒன்றாகும்.

பிற உயிரைக் கொல்லக்கூடாது என்பதைத் திருவள்ளுவர்

"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க; தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை."[7]

என மொழிவர்.

இச்செயலைச் செய்ய வேண்டாம் என சித்தர்களும் வலியுறுத்து கின்றனர். 'கொலை செய்யாதே' (ப.சி.பெ.கோ.306) என அகத்தியர் தெருட்டுவர். அச்செயலைப் 'பொல்லாக் கொலை' (ப.சி.பெ.கோ.336) என கொங்கணர் இழித்துரைப்பர்.

ஞானியர்களின் வழியான நல்வழியில் சென்றால் பதவி என்னும் பேரின்ப வீட்டை அடையலாம். மாறாக கொலை செய்தல் என்னும் தீயவழியில் சென்றால் மக்களின் வாழ்வும் குறுகி, அறிவும் சிதையும். இதனை

"நல்வழியிற் சென்று நம்பதவி யெய்தாமல்
கொல்வழியிற் சென்று குறுகுவதேன் புல்லறிவே"

(ப.சி.பெ.கோ.230) என இடைக்காட்டுச் சித்தர் அறிவுறுத்துவார்.

கொலைத் தொழில் கொடியது என்பதும், அதைச் செய்தல் அறிவுடைமையாகாது என்பதும், ஆதலின் அதனை வெறுத்து ஒதுக்க வேண்டும் என்பதும் சித்தர்கள் கருத்துகளாகின்றன.

4.2.5 கொள்ளை

கொள்ளை என்பது பொருளாசையால் நிகழ்வது. அதாவது ஒருவர் தமக்கு உரியதல்லாத வொன்றை பிறரைத் துன்புறுத்திப் பெறுவதாகும். இதனைக் களவு செய்தலின் வளர்நிலை எனக் கொள்ளலாம்.

சமுதாயத்தில் கொள்ளையால் ஏற்றத் தாழ்வுகள் விளையும். ஒழுக்கப் பண்புகள் மதிப்பிழக்கும்; அமைதி சீர் குலையும். பொருளாசை மிகுந்து வன்முறை வளர்ந்தோங்கும்.

பிறர் பொருளைக் கொள்ளையிட எண்ணக் கூடாது; அவ்வாறு பொருள் சேர்த்திடில் அது தீமையை மட்டுமே தரும் என்பதை

"கொள்ளை கொள் ளநினை யாதே..."

(ப.சி.பெ.கோ.260) என்று கடுவெளிச்சித்தர் வெளிப்படுத்துவர். இதனையே 'கொள்ளைக்குட் பட்டு...' (ப.சி.பெ.கோ.161) வாழ்தல் தெளிவற்ற வாழ்க்கை என பட்டினத்தார் இயம்புவார்.

கொள்ளையிடலை மனதால் எண்ணவும் கூடாது என்றும்; கொள்ளையிட்டு வாழும் வாழ்க்கை தெளிவற்ற வாழ்க்கை என்றும் சித்தர்கள் கருதினர் எனத் தெளியலாம்.

4.2.6 கோள்

கோள் என்பது ஒருவரைப்பற்றி மற்றொருவரிடத்தில் பொய்யாகச் சொல்வது. இதனைப் புறங்கூறுதல் என்பர். இச்செயல் இருவருக்கும் இடையே பகையை மூட்டித் தீமை உண்டாக்கும். இதனைப்

"பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்; நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்"[8]

எனும் குறள் தெளிவுபடுத்துகிறது.

புறங்கூற வேண்டாம் என்பதைக்

"கெட்ட பொய்ம்மொழிக் கோள்கள் பொருந்த விள்ளாதே"
(ப.சி.பெ.கோ 256) என கடுவெளிச்சித்தர் அறிவிப்பர்.

பிறரிடம் நட்பு கொண்டு பழகி, அவரைப் பற்றியும் அவர் செய்கை பற்றியும் எடுத்துக்கூறி, இருவருக்கும் சண்டை மூளச் செய்யும் கோள் மூட்டும் இழிச்செயலைச் செய்யாதே என்பதை

"...நட்புக் கொண்டு புரிந்து நீ கோள்முடை யாதே"
(ப.சி.பெ.கோ 260) என கடுவெளிச்சித்தர் நுவல்வர்.

புறங்கூறலைக் கண்டித்து அதனை நன்மனதில் இடம் பெறச் செயலாகாது என சித்தர்கள் அறிவுறுத்துவதை இதனால் அறியலாம்.

4.2.7 இகழ்தல்

சான்றோர்களையும், பெரியோர்களையும் இகழ்வது கீழ்மைக் குணமாகும். பிறரை இகழ்ந்துரைக்கும் தீயநெறியினை நீக்கி, வாழ்வது மக்களுக்கு நன்மை பயக்கும். பிறரை இகழ்ந்துரைப்பது பண்பட்ட செயல் அன்று.

ஆன்மீகத்துறையில் உள்ள அடியார்களையும் உண்மைத் துறவியர்களையும் சிறந்த ஞானியர்களையும் குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ இகழ்தல் கூடாது. மேலும் பெரியோர்களின் மனம் வருந்தும்படி செயலாற்றுதல் கூடாது என கொங்கணர் குறிப்பிடுவார். இக்கருத்தை

"சிவன்ற வடியாரை வேதிய ரைச்சில
சீர்புல ஞானப் பெரியோரை
மதன மாகவும் வையா தேயவர்
மனத்து நோகவும் செய்யாதே"

(ப.சி.பெ.கோ 336) என்னும் பாடலால் அறியலாம்.

பெரியோர்களை இகழ்ந்திடுவோர் அடையும் துன்பங்களைப் பற்றி,

"பெரியோரை இகழ்ந்தவர்கள் பெற்ற லாபம்
பேசக்கேள் நெஞ்சமே பெருமை யாகப்
பரியேறிப் போனவன்றான் தீயில் வீழ்ந்து
பதைத்துப்போய் அடிவயிற்றில் நெருப்பைக் கட்டி

நரிவாயில் பொருள்பறிக்கு மின்பம் போல
நகைத் திகழ்ந்தே எரிவாயின் நரகம்புக்கு
விரிவான எழுநரகில் விழுந்தி ளைத்து
மெலிந்திடுவா ரென்று மறைவீசுந் தாலே".

(ப.சி.பெ.கோ 421) என சிவானந்த போதம் தெரிவிக்கிறது.

பெரியோரை அவமதித்து ஒழுகாமை உயர்ந்தது. இதனை

"ஆற்றுவார் ஆற்றல் இகழாமை; போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை"[9]

என திருவள்ளுவர் வற்புறுத்துவர்.

பெரியோரைப் பகைத்து, பழித்தவர் பாழ்பட்டு நரகம் அடைவர் என்பதை

"உவந்தே பணிபுரி வார்மே லுலகவ ருண்மையதாய்
அவஞ்செய் தவரை யிகழ்வோ ரடைவர் அருநரகே"

(ப.சி.பெ.கோ 450) என சிவானந்த போதம் மொழியும்.

பிறரை இகழ்ந்துரைப்பது தீமையான செயல். அதனைச் செய்வது இழிவைத் தரும். ஆதலின் அவற்றைத் தவிர்க்க என சித்தர்கள் அறிவுறுத்துவது இதனால் புலனாகிறது.

4.2.8 கஞ்சா

செய்ய வேண்டாத செயல்களுள் ஒன்று கஞ்சா புகைப்பது. மனிதர்கள் கஞ்சா புகைத்து உடலையும் அறிவையும் கெடுத்துக் கொள்கின்றனர். இச்செயல் தீதாகும். உண்மையறியாதவர் அதைப் புகைத்து மயங்கி மகிழ்வர். சித்தர்கள் அவர்களைக் கடிந்துரைக்கின்றனர்.

கடுவெளிச்சித்தர்

"கஞ்சாப் புகைபிடி யாதே" (ப.சி.பெ.கோ 259)

என அறிவுரை பகர்கின்றார்.

கஞ்சா பிடிப்பவர் பற்றி,

"கற்ப நிலையறிந் தென்னா மல்வெறிக்

கஞ்சா வுண்டு விழிப்பார்கள்..."(ப.சி.பெ.கோ 593)

என மதுரைவாலைசாமி தெருட்டுவர்.

"கஞ்சா அபினியுடன் கள்ளுண்டு வாடாமற்..."

(ப.சி.பெ.கோ 176) என பத்திரகிரியார் கூறுவர். இவற்றால் வாட்டம் தான் மிஞ்சும் என்பது தெரியவருகிறது.

காயகற்பம் என்ற ஒருவகை மருந்து உண்பதாகவும், அதனால் மாயவித்தைகள் செய்வேன் எனக்கூறி மோசஞ் செய்பவர்கள் பலர். அவர்கள் தாம் தனித்திருக்கும் பொழுது கஞ்சா குடித்து, அபினியைத் தின்று, யோக வாழ்வில் இருப்பதாக ஏமாற்றுவர். அவ்வகையினர் வாந்தி எடுத்து, நாய்போல் நக்கி,

பின்னர் அதையே உண்டு அழிவது உறுதி. இதனை

"காயகாய முன்பதாகக் கட்டளைம திந்திட
மாயவித்தை செய்வதென்று மடிப்புமோசஞ் செய்பவர்
நேயமாக்கஞ் சாவடித்து நேரபினியைத் தின்பதால்
நாயதாக நக்குருக்கி நாட்டினில்ல லைவரே"
(ப.சி.பெ.கோ 81) எனச் சாற்றுவர்.

கஞ்சா அபினி முதலியவற்றை இன்ப மயக்கத்திற்காகப் பயன்படுத்தி மனிதர்கள் சீரழிவதைச் சித்தர்கள் கடிந்து கூறி அறிவுரை பகர்வதை இவற்றால் அறிய முடிகிறது.

4.2.9 மது

மது உண்டு மயங்குவர் சிலர். மதுவினால் சிறப்பெய்த முடியாது என்பது அறிந்ததே. கட்குடியர் உண்மைப் பொருள் அறியாது மயங்குவர்.

மது ஒருவனுடைய ஒழுக்கத்தையும் உணர்வையும் அழிக்கின்றது. கள் உண்ணாமை பற்றி திருவள்ளுவரும்

"உண்ணற்க கள்ளை; உணில் உண்க; சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்". [10]

எனக் கூறுவர்.

"...வெறிகாட்டி மயக்கியே கட்குடியாதே"
(ப.சி.பெ.கோ 259) என கடுவெளிச்சித்தர் குறிப்பிடுவார்.

"...கள்ளுண்டு வாடாமற்..." (ப.சி.பெ.கோ 176)
வாழ வேண்டும் என அறிவுரை பகர்வர் பத்திரகிரியார்.

"குடிகேட ரோயுருந்து" (ப.சி.பெ.கோ 161)
வாழ்வது சிறப்பில்லை என பட்டினத்தார் தெரிவிப்பர்.

நல்நிலையில் இருக்கும் மனிதனே தன்னை அறிய முடியாமல் அழிவதை அறிந்த சித்தர்கள், தன்னையே அழிக்கும் மதுவை உண்டவர்கள் உயர்வு அடைய இயலாது என்பதை எண்ணியே இச்செயல் தேவையில்லை என அருளினர்.

4.2.10 செருக்கு

தன்னை அறியாமல் சிலர் செருக்கு அடைவர். செருக்கடைவது அழிவைத் தரும். செருக்கு என்பது அறிவை மழுங்கச் செய்யும். அதை நீக்கித் தெளிவு அடைய விரும்புவது நல்லதாகும்.

அன்புடனும் அறத்துடனும் வாழ வேண்டிய மனிதன் நெறிமாறி, தற்பெருமையோடு தருக்கித் திரிந்து செருக்கடைவது இன்னலுக்கே வழி வகுக்கும். இதனை

"ஆங்கார முட்காட்டை அறவே மிதித்தே..."
(ப.சி.பெ.கோ 210) என பாம்பாட்டிச் சித்தர் உரைத்துவர்.

குருவின் கருத்துகளைக் கேட்டுத் தெளிந்து உயர்வடையாமல் செருக்கடைந்து, உண்மையை உணராமல் பலர் நழுவிப் போய் விடுகின்றனர். மனிதர் அடையும் இந்நிலையைச் சிவானந்த போதம்

"நாமென்ற அகங்கொண்டு நழுவிப் போறார்..."

(ப.சி.பெ.கோ 443) என வெளிப்படுத்தும்.

ஆசானிடம் நிலையாக இருந்து ஞானம் பெற விரும்பி வந்தவர்களில் சிலர், அறியாமையினால் 'நான்' என்ற அகந்தையுற்று, கற்ற கல்வியே போதும் என்று, தன்னையே பெருமைப் படுத்திக்கொண்டு உட்பொருள் அறியாமல் அழிவர். இதனை சிவானந்த போதம்

"முலைகருதிக் கைப்பிடித்துப் பாலுண் ணாமல்
முட்டியதால் நானென்னு மகந்தை யுற்றுக்
கலைகருதி நில்லாமல் சாதிக் காமல்
கற்றபொருள் போதுமென்றே பெருமை கொண்டு..."

(ப.சி.பெ.கோ 443) என விளக்கும்.

உண்மைப் பொருள் அறியாதவர்கள் மாயையினால் அழிகின்றவர் என்பதை

"மருவிய நானான் என்று மாயையில் அழிந்தாய் நீதான்"

(ப.சி.பெ.கோ 550) என கணபதிதாசர் உரைத்துவார்.

"உடலில், புலன்களில், பிராணவாயுக்களில்,
மனதில், அறிவில் போன்ற எல்லாவற்றிலுமே
'நான்' என நினைத்து அகந்தை கொள்ளுதல்
கூடாது"[11]

என்று ஸ்ரீ ராமானுஜர் குறிப்பிடுவது இங்கு மனங்கொள்ளத் தக்கது.

செருக்கடைவது தவறு என்பதும், அவ்வாறு நடவாமல் பண்போடு நடந்து உயர வேண்டும் என்பதும் சித்தர்களின் கருத்தாகின்றன.

4.2.11 தீய நட்பு

ஒருவன் சான்றோருடன் தொடர்பு கொண்டிருந்தாலும் தீயவரின் தொடர்பை விலக்கிக் கொள்ளாவிடில், அவன் அல்லல்களையே தொடர்ந்து அனுபவிப்பான். எனவே தீயவரின் தொடர்பை முற்றிலுமாக விலக்கிக் கொள்ள வேண்டும்.

"பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது."[12]

எனும் குறள் தீநட்பு வளர்வதை விட குறைவதே நல்லது எனக் கூறுகிறது.

இக்கருத்தினைச் சித்தர்கள் தங்கள் பாடல்களில் வலியுறுத்துகின்றனர். சான்றோரின் தொடர்பு உயர்வைத் தரும். தீயவரின் நட்பு துன்பமே தந்திடும். ஆதலால் அத்தகையோர்

தொடர்பினை ஏற்க வேண்டாம் என்பதை

"...துன் - மார்க்கர்கள் கூட்டத்தில் மகிழ்ந்துசேராதே"

(ப.சி.பெ.கோ 258) என கடுவெளிச்சித்தர் அறிவுறுத்துவார்.

பொய்க் கருத்துகளைக் கேட்டு மயங்குவதும் தீயோரின் தொடர்பை விரும்புவதும் கலக்கத்தைத் தரும். இதனை

"பாழாகப் பாவிகளின் சொற்கேளாதே
புதறாதே வயிற்றுக்கா மயங்கிடாதே
கேளாதே பேச்செல்லாங் கேட்டுக் கேட்டுக்
கலங்காதே..."

(ப.சி.பெ.கோ 304) என அகத்தியர் புலப்படுத்துவர்.

"மனம் ஒரு ஞானியுடன் சேர்ந்தால்
யோக முறையில் முன்னேறுகிறது. கீழ்மக்களுடன்
சேர்ந்தால் கீழானவற்றைச் செய்கிறது"[13]

என ஸ்ரீரங்கம் சித்தர் குறிப்பிடுவது இங்குக் கருதத் தக்கது.

தீயநட்பினால் வாழ்வு வீணாகிறது என்பதும் தீயநட்பு கொள்ள வேண்டாம் என்பதும் சித்தர்கள் உணர்த்தும் கருத்துகள்.

4.2.12 குருவின்றி யோகம்

குருவின்றி யோகக் கல்வி அமையாது. அவரே அக்கல்வியை நெறிப்படுத்துவர். குரு இல்லாமல் யோகம் செய்வது கேட்டை விளைவிக்கும். அவர் அருள் யோகத்தில் வெற்றியை நல்கும்.

ஆசான் அறிவுரையை ஏற்காமல், ஞானமெல்லாம் எய்தி விட்டோம் என இறுமாந்து அழிவோரை

"நாலேநா லென்றுவாய் மதங்கள் பேசி
உரியபொரு ளுள்ளதெல்லாஞ் சுட்டுச்சுட்டே
உட்பொருளைப் பாராம லழிந்திட்டாரே"

(ப.சி.பெ.கோ 353) என ஆரூரார் கூறுவர்.

ஆசான் அறிவுரையும், வழிகாட்டுதலும் யோக ஞான வாழ்வுக்கு அடிப்படைகளாகும். அவற்றால் தெளிவு பிறக்கும் என்பதை

"காமென்ற பீடமதிற் கண்டு தேறிக்
காட்டுகிறேன் மெய்ஞ்ஞானக் கருவைப்பாரே
பாரேநீ யோகமென்ற வழியைச் சொல்வேன்"

(ப.சி.பெ.கோ 761) என காகபுசுண்டர் மொழிவர்.

ஆசானின் அறிவுரை இல்லாமல் யோகம் செய்து கோடான கோடி மனிதர்கள் தோல்வி அடைந்து இறந்துவிட்டனர். இதனை

"ஓடியோடி யோடியோடி யுட்கலந்த சோதியை
நாடிநாடி நாடிநாடி நாட்களுங் கழிந்துபோய்
வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்கள்
கோடிகோடி கோடிகோடி எண்ணிறந்த கோடியே"

(ப.சி.பெ.கோ 3) என சிவவாக்கியர் தெரிவிப்பர்.

குருவின்றி தாமே யோகம் மேற்கொள்வதால் நோய்களுக்கு ஆளாக நேரிடும் எனக் கூறுவர்.[14]

இவற்றால் குருவின் துணையில்லாமல், அவரின் அருள் பெறாமல் யோகம் செய்வது சிறப்பில்லை என்பதும் குருவின்றி யோகம் செய்வது துன்பத்திற்கு ஏதுவாகும் என்பதும் புலனாகின்றன.

தொகுப்புரை

இதுகாறும் ஆராய்ந்தவற்றால் கீழ்க்கண்ட முடிவுகள் அடையப்பெற்றன.

சித்தர்கள், மக்கள் வாழ்வியலில் மேற்கொள்ள வேண்டிய அறநெறிகளைச் செய்யத் தக்கவை என்றும் செய்யத் தகாதவை என்றும் வகைப்படுத்திக் கூறுகின்றனர்.

அவர்கள் அன்பு நெறியை வலியுறுத்துவர். குறிப்பாக அவர்கள் குருவிடத்துக் காட்டும் அன்பைப் போற்றுவர்.

தலைவன் அறவாழி அந்தணனாக உள்ளான். பிற உயிர்கள் பால் இரக்கம் காட்டுகின்றவர்க்கு அவன் அருள் பாலிப்பான். அறம் செய்வோர் வாழ்க்கையில் மேன்மை எய்துவர்.

சிந்தை தெளிந்த ஞானப் பெரியோர்களைக் குருவாகக் கொள்ள வேண்டும். அவர்கள் தொடர்பால் உண்மையை உணரலாம்.

பாழ்ப்பட்ட சிந்தையில் சிறப்புகளில்லை. மனந்தூய்மை நன்மை பயக்கும். மனவுறுதி செயலில் வெற்றியை நல்கும். ஆதலின் மனவுறுதியைப் பெற முயல வேண்டும்.

உலகவாழ்க்கை நிலைபேறு உடையதன்று. வாழ்கின்ற காலத்தில் பிறருக்குத் தீங்கு எண்ணாமலும், பாவம் செய்யாமலும் இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

பொய் உரைத்தல் வாழ்க்கையில் இழிவைத் தரும். அது இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் கேட்டினை உண்டாக்கும்.

சினம் கொள்ளல் தீதாகும். அது மனத் தெளிவின்மையால் வெளிப்படுகிறது. மேன்மையடைய விரும்புவோர் அதனைக் கைக் கொள்ளக்கூடாது.

கொலை செய்தல் அறிவுடைமை ஆகாது. அதனை வெறுத்து ஒதுக்க வேண்டும். ஒருவர் கொள்ளையிடுதலை மனதால் எண்ணவும் கூடாது. கொள்ளையிட்டு வாழும் வாழ்க்கை தெளிவற்ற வாழ்க்கையாகும்.

புறங்கூறலை அவர்கள் கண்டிக்கின்றனர். அதனை மனதில் இடம் பெறச் செய்யலாகாது.

பிறரை இகழ்ந்துரைப்பது தீமையான செயலாகும். அதனால் ஒருவற்கு இழிவு ஏற்படும். ஆதலின் அதனைத் தவிர்க்க வேண்டும்.

கஞ்சா, அபினி ஆகியவற்றின் பயன்பாட்டைக் கடிந்துரைக்கின்றனர். மது உண்ணலை வெறுத்து விலக்குகின்றனர்.

குருவை அடைந்து முழுமையாகக் கற்காமல், கற்றதாக நினைந்து ஒருவர் குருவினின்றும் நீங்குவது செருக்கடைதலாகும். அச்செருக்கை ஒருவர் தவிர்த்தல் வேண்டும்.

மெய்ஞ்ஞானம் கைவரப் பெறாதவர்கள் தொடர்பு தீய நட்பாகும். வாழ்க்கை தீயநட்பினால் அழிகிறது. ஆதலின் அதனைத் தவிர்த்தல் வேண்டும்.

குருவின் அருள் இன்றியும், துணையின்றியும் ஒருவர் செய்யும் யோகத்தால் பயன் விளையாது. அவர் உதவியின்றி யோகம் செய்தல் துன்பத்திற்கு வழிகோலும்.

## சான்றெண் விளக்கம்

1. திருக்குறள், அன்புடைமை, 75

2. பரிமேலழகர்., திருக்குறள் ப. 46

3. அரவிந்தன், மு. வை., சித்தர்கள் ஓர் அறிமுகம் ப. (31)

4. பரிமேலழகர் திருக்குறள் ப. 30

5. திருக்குறள், வாய்மை 297

6. சிதம்பரனார், சாமி., சித்தர் கண்ட விஞ்ஞானம் தத்துவம், ப. 75

7. திருக்குறள், கொல்லாமை, 327

8. திருக்குறள், புறங்கூறாமை, 187

9. திருக்குறள், பெரியாரைப் பிழையாமை, 891

10. திருக்குறள், கள் உண்ணாமை, 922

11. ஸ்ரீராமானாத, யோகசூதாராவலி ப. 30

12. திருக்குறள், தீநட்பு, 811

13. ஸ்ரீரங்கம் சித்தர், வாழ்வின் திறவுகோல், ப. 42

14. கமலக்கண்ணன், பா., ஞானக்கனல், ப. 147

## இயல் - பொருளடக்கம்

## 5.0 முடிவுரை

இறையுணர்வையும் அறநெறிகளையும் பற்றிப் பேசும் சித்தர்கள் போலித்துறவு மேற்கொள்பவரையும் பொய்யான ஆன்மீகக் கருத்துக்களை ஏற்று ஏமாறுகின்றவர்களையும் இடித்துரைக்கின்றனர். அவர்கள் மக்கள் சமுதாயத்தில் மலிந்து நிற்கும் பொய்மைகளையும் போலிகளையும் எதிர்த்துச் சாடியவர்கள் எனலாம்.

சமுதாயப் பழக்க வழக்கங்களில் ஊறிப்போன மக்கள், அவற்றிலிருந்து எளிதில் விடுபட முடியாமல் மயங்கிய நிலையில் இருப்பதை அறிந்த சித்தர்கள், உண்மைப் பொருளை உணர்த்தும் பொருட்டு, மக்களை நிலை குலையச் செய்யும் போலித்துறவு பற்றிய கருத்துகளையும் உண்மைக்குப் புறம்பான ஆன்மீகச் செய்திகளையும் இனம் கண்டு விளக்குகின்றனர். அவற்றை

1. புனைவேடம்,
2. மந்திர மாய வித்தை,
3. பொருள் பறித்தல்,
4. உருவ வழிபாடு,
5. சடங்குகள்,
6. சிறுதெய்வ வழிபாடு,
7. அலைகின்ற மயக்கநிலை
8. தீர்த்தமாடும் நிலை

எனப் பகுத்துக் காணலாம்.

5.1 புனைகோலம்

தவநிலையை மேற்கொள்ளாமல் அதனை அடைந்தவர் போல வேடம் புனைவதைப் புனைகோலம் எனலாம். மனிதர்கள் தாங்கள் எய்த வேண்டிய உயர் ஞான நிலையை எய்த முயலாது, போலித்தனமான புனைகோலங்கள் மேற்கொண்டு உழல்கின்றனர். அவர்கள் மேற்கொள்ளும் இத்தகு நிலைகளைச் சித்தர்கள் தங்கள் பாடல்களில் சுடிந்துரைக்கின்றனர்.

மனிதர்கள் தங்களை மற்றவர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டிக் கொள்ள, உடம்பில் பலவகையான கோலத்தை ஏற்கின்றனர். மனிதன் பிறக்கும் போதே அவனுடன் சோவணம், மார்புநூல், குடுமி ஆகியவை இருப்பதில்லை. பிறந்த பிறகே பல்வேறு புனைகோலங்களைப் புனைகின்றான் என்பதைப்,

"பிறந்தபோது சோவண மிலங்குநூல் குடுமியும்
பிறந்துடன் பிறந்ததோ . . ."

(ப.சி.பெ.சோ.32) என வினவுவதன் வழி சிவவாக்கியர் உணர்த்துகின்றார்.

மனிதரில் சிலர் மெய்யெலாம் வெண்ணீறு பூசிய மேனியராய் காணப்படுவர். அவர்கள் மனமோ மிகவும் இழிவுடையதாய் இருக்கும். மனந்தூய்மையானதாக இல்லாமல் வேடதாரியாய் இருப்பதில் பயனில்லை என்பதை,

"வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமுந் தரிக்கிறீர்"

(ப.சி.பெ.கோ.36) என சிவவாக்கியர் உரைப்பர். இக்கருத்தையே கணபதிதாசர் தம் பாடலில் குறிப்பிடுவது எண்ணத்தக்கது. (ப.சி.பெ.கோ.553).

வேடமிட்டு வாழ்வதால் மெய்யான வாழ்வை அடைய முடியாது என்பதை

"நேசமுற்றுப் பூசைசெய்து நீறுபூசிச் சந்தனம்
வாசமோ டணிந்துநெற்றி மைதிலர்த மிட்டுமே..."

(ப.சி.பெ.கோ.81) என சிவவாக்கியர் கூறுவதன் வாயிலாக அறியலாம்.

வேடதாரிகள், பொருள் ஆசையால் பூசை செய்வது போல் நடித்துத் திருநீறு பூசியும், சந்தனம் தடவியும், வாசனை நீரைத் தெளித்தும், நெற்றியில் குங்குமப் பொட்டினை இட்டும் மக்களை ஏமாற்றுவர்; பொய் வார்த்தைகளால் நம்பச் செய்வர்; பிறர் பொருளைச் சுருட்டுவர். சிவவாக்கியர் இவற்றை முற்றிலும் வெறுத்து ஒதுக்குகிறார். அவர்களைக் கோவேறு கழுதைகள் என்றும், திருநீற்றுப் புழுதியில் புரண்டெழுந்த பொய்யான வேடதாரிகள் என்றும் கூறுவர். (ப.சி.பெ.கோ.81)

போலித்துறவிகள், காவியுடை அணிந்தும், சடாமுடி கட்டியும், கமண்டலத்தைக் கையில் தாங்கியும், ஆசனத்தில் அமர்ந்தும், கழுத்தில் உருத்திராக்கம் சூடியும், யோகத் தண்டினைப் பற்றியும், உட்பொருள் அறியாதவர்களாய் இருப்பர். அவர்களை மாடுகள் என்று சிவவாக்கியர் பழித்துரைப்பர். இக்கருத்தினைக்

"காவியுஞ் சடைமுடி கமண்டலங்க ளாசனம்
தாருருத்தி ராட்சம்யோகத் தண்டுகொண்ட மாடுகள்..."

(ப.சி.பெ.சோ.81) என்பது புலப்படுத்தும்.

தாடி வளர்த்துக் கொள்வதும், சடாமுடி வளர்த்துக் கொள்வதும், சந்நியாசியாக வேடம் பூண்டு கொள்வதும், தேசமெங்கும் நாடி ஓடி ஆடி வருவதும் வீணாகும். இச்செயலைச் சான்றோர்கள் ஒப்புக்கொள்ளார் என்பதை

"தாடி வளர்த்துச் சடைவளர்த் துநல்ல
சந்யாசி யென்றொரு வேடமிட்டே
ஓடித் திரிந்த விளையாட் டையிங்கே
ஒப்புவதா ரடியாலைப் பெண்ணே"

(ப.சி.பெ.சோ.590) எனும் பாடலில் மதுரை வாலைசாமி குறிப்பிடுவர். வேடம் பூண்டிட்ட இவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்கிறார்கள் என்பது இதன் உட்பொருளாகும்.

போலியான துறவுவேடமிட்டுப் பொருள் அறியாமல் இருப்போரை 'நாய்' என்று சாடுகின்றார் ஞானகுருக்கள்.
இதனை

"விரிவான வேடமிட்டுக் காவி பூண்டு
வெரும்பிலுக்காய் அலைந்திடுவான் நாயைப்போலே
பரியாச மாகவுந்தான் தண்டு மேந்திப்
பார்தனிலே குறடிட்டு நடப்பான் பாரே"

(ப.சி.பெ.ஞா.770) எனக் குறிப்பிடுவதால் அறியலாம்.

சிலர், துறவிபோல் வேடம் பூண்டு வாழ்வர். அவர்கள் தங்களின் வயிற்றுப் பிழைப்புக்காக, சில கருத்துக்களைப் பேசிவருவர். அப்பேச்சினாலேயே பிறரை ஏமாற்றி வாழ்வர். பிறர் இல்லம் தோறும் சென்று உணவுக்கும் உடைக்கும் கையேந்தி நிற்பர். இத்தன்மையுடையவரை 'மட்டை' என்றும் 'சண்டாளர்' என்றும் 'முழுமாடு' என்றும் பழிப்பர். இதனை

"வாழாம லுலகம் விட்டு வேடம்பூண்டு
வயிற்றுக்கா வாய்ஞானம் பேசிப்பேசித்
தாழ்வான குடிதோறு மிரப்பான் மட்டை
தலையறியாச் சண்டாளர் முழுமாடப்பா..."

(ப.சி.பெ.ஞா.304) என்னும் பாடலால் தெளியலாம்.
இதன்வழி, அகத்தியர் போலித்துறவிகளைத் தோலுரித்துக் காட்டுகின்றார்.

குருவிடம் முறையாகக் கற்றுத்தெளிந்து ஞானம் எய்திடாமல், தம்மையே ஞானியெனக் கூறிக்கொண்டு தருக்கித்திரியும் போலி வேடதாரிகளை,

"புலித்தோலைப் பசுவுரித்துப் போர்த்துக் கொண்டு
புலியென்றாற் புலியாமோ இன்னஞ் சொலாய்
பொலிப்பாகப் பெண்போலப் புருடன் வேடம்
புகட்டினால் அவனுருவம் பாவை யாமோ
சலிப்பான நரகத்தில் வீழு மாண்பர்
சற்குருவின் முன்னிடத்திற் கற்றுக் கொண்டு
நலிப்பாக புலிப்பாயு மியல்பு போல
நாவலத் தோர்வலங் கிதா ன்மைமாச்சே"

(ப.சி.பெ.சோ. 429, 430) என சிவானந்த போதம் விளக்குகிறது.

புலித்தோலைப் போர்த்திய பசு என்றும் புலியாகாது. பெண்வேடம் பூண்ட ஆடவன் உண்மைப் பெண்ணாக மாட்டான். தெளிவடையாத சிலகற்று அலையும் பேதையர் எவ்வளவு நடித்தாலும் 'குரு'வாக முடியாது. போலித் துறவிகளை நல்ல குரு என்று நினைத்து மக்கள் வணங்கி ஏமாறுகின்றனர். இந்நிலை சமுதாயச் சீரழிவுக்குக் காரணமாகும். இவ்வாறாக சிவானந்த போதம் புலப்படுத்துகிறது.

மரத்தால் செய்த பசுவின் சிலையில் பால் கறக்க முடியாது. மலடியினால் குழந்தைப் பேற்றின் மகிழ்ச்சியை அறிய முடியாது.

மரத்தறியாத் தக்கீர் பாம்பின் தலையில் இரத்தினம் தோன்றிடாது. அவற்றைப் போல் மோனநிலையை அறிந்திடாத மூடனைக் 'குரு' எனப் பணிந்து வணங்குவதால் வெறுமையே கிட்டும்; மெய்ஞ்ஞானம் கிட்டாது. இதனை

"மரப்பசுவின் முலையதனிற் பாலுண் டாமோ
மலடிக்குச் சுதனுடைய மகிழ்ச்சி யுண்டோ
மரத்தறியாத் தக்கீர்ப்பாம் பதன்த லையில்
துலங்குமணி யிரத்தினமுந் தோன்று மோசொல்
பரத்தினுடைய நிலையதனைக் குருவின் பாதப்
பதியாத மூடனையே பணிந்த தாலே
விருத்தமே யல்லாம லுதவி செய்ய
மெய்ஞ்ஞான முண்டாமோ விளம்பு நெஞ்சே"

(ப.சி.பெ.கோ. 430) என்று மனத்திற்குக் கூறும் போக்கில் சிவானந்தபோதம் அறிவுறுத்துகிறது.

உண்மைப் பொருள் உணர்ந்த ஞானிகள் காமத்தை வெல்லுவர். பொருளறியாத வேடதாரிகள் பெண்ணாசை நீக்கிவிட்டேன் எனக்கூறி நடிப்பர். போலித்துறவிகள் பெண்கள் தனிப்பட்டால் அவருடன் சுகம் காண்பர்; சரணம் செய்து அடிபணிவர். இது பொய் நெறி என்பதை

"மாறான பெண்ணாசை விட்டே னென்பார்
மருவியவள் தனிப்பட்டால் சரணஞ் செய்வார்"

(ப.சி.பெ.கோ. 725) என சட்டை முனிவர் இயம்புவர்.

"காலனை வென்ற அருத்தறி வாளர்க்குக்
கோலங்க ளேதுக்கடி — குதம்பாய்
கோலங்க ளேதுக்கடி"

(ப.சி.பெ.சா.254) எனும் பாடலின் வழி வெற்றான புனைகோலத்திற்கு மனதைச் செலுத்த வேண்டியதில்லை என குதம்பைச் சித்தர் அறிவுரை பகர்வர்.

பொய் வேடதாரிகள் மக்கட்கு யோகம் சொல்லித் தருகிறேன் எனக் கூறி ஏமாற்றுகிறார்கள். இதனை,

"வேடதாரர்கள், அறியாத பாமர மக்களுக்கு
குண்டலினி யோகத்தை சொல்லிக் கொடுக்கிறேன்
அதற்கு தட்சணை கொடு என்று கேட்டு, கண்டதே
காட்சி கொண்டதே கோலம் என்பதைப் போல
மக்களுக்கு எதை எதையோ சொல்லி பாழும்
குழியில் தள்ளிவிடுகிறார்கள்"[1]

எனும் கூற்று தெளிவாக்கும்.

புனைகோலம் பூண்ட போலித் துறவிகள் தீய ஒழுக்கமுடையவராய் வாழ்கின்றனர். அதனால், சித்தர்கள் போலித்துறவிகளை இடித்துரைக்கின்றனர். உலகியல் இச்சை, உடல் இச்சை ஆகியவற்றைத் துறவாது, வெறும் வேடம் பூண்டு வாழ்வது மேன்மையானதன்று என்பதையும் அவர்கள் உணர்த்துகின்றனர். மக்களை ஏய்க்கும் போலிச் செயல்களையும் உண்மைக்

ஜாலம் என்று நம்பும் மக்களை ஏமாற்றும் போலியடியார்களையும் சாடுகின்றவர் என்பதை மேற்கூறியவற்றால் அறிய முடிகின்றது.

5.2 மந்திர மாயவித்தை

மக்கள் பலர் மந்திரம் கற்பது/கூறுவது உயர்நிலை என என்னுவர்; அதில் மயங்குவர்; பற்பல மந்திரம் கற்பர். சிலர் மாயவித்தை செய்து பிறரை ஏமாற்றுவர். இச்செய்கையை மந்திர மாயவித்தை எனலாம்.

இறையருள் பெற்றிட மக்கள் மந்திரம் சொல்லுவர். மந்திரத்தில் மதிமயங்கி வாழ்வை வீணாக்குவர்.

மந்திரங்கள் என்பவை [illegible] அல்ல; அது மனிதனின் உடலில் இயங்கும் தசவாயுவின் இரகசியம்; அதன் மகத்துவம். காற்றைப் பிடிக்கும் கலைக்கற்றறிந்தவர்களுக்கு மந்திரம் கற்றவர் என்று பொருள். சித்தர்கள் வாசியை வசப்படுத்தியவர்கள். மறைந்து கிடக்கும் இம்மறைபொருளை அறியாது, வெறும் சொற்களை மட்டும் உச்சரிக்கும் எந்த மந்திரத்திற்கும் ஆற்றல் இல்லை. தவநிலையில் வெற்றி கண்டவர்கள் மரணமிலாது இருப்பர். இவற்றை உணராது மந்திரத்தைக் கற்று வாழ்வது மயக்கமுற்ற செயல் என்பதை சிவவாக்கியர்

"மந்திரங்க ளுண்டுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்க ளாவதும் மரத்திலூற லென்றுகாண்
மந்திரங்க ளாவது மதித்தெழுந்த வாயுவை
மந்திரத்தை யுண்டவர்க்கு மரணமேது மில்லையே"

(ப.சி.பெ.கோ.57) என அறிவுறுத்துவர்.

இறப்பு நிகழ்ந்தபின் மந்திரம் சொல்ல இயலாது. ஆதலால் மந்திரம் கற்று மயங்கிட வேண்டாம் என்பதை,

"மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்கள் கற்றநீர் மரித்தபோது சொல்விரோ"
(ப.சி.பெ.கோ.57)

என உணர்த்துவர்.

ஆன்மீகத்தின் உண்மை அறிதல் அவ்வளவு எளிதன்று. எளிய செயலான திருநீறு புனைதல், தினமும் நீராடல் எல்லாம் ஞானத் துறைக்கு உதவுவன அல்ல. மூச்சுக் காற்றின் இயக்கத்தினை மாற்றி எழுப்பத் தெரியாமல், மந்திரத்தால் என்ன உயர்வு காண முடியும் என்றும், நீர் நிறைந்த ஆற்றில் இறங்கி, நீராடி, அதன் போக்கில் மயங்கி, வெளிப்போந்திட வழி தெரியாமல் அலைகின்ற நிலையே கிட்டும் என்பதைப்பட்டினத்தார்

"நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திரமென் னகண்டாய்
ஆற்றிற் கிடந்தும் துறையறி யாமல் அலைகின்றையே"
(ப.சி.பெ.கோ.111) என உணர்த்துவார்.

மந்திரம் சொல்பவர்கள் தம்மையும் தம்செயலையும் உணர்ந்து அறிவதில்லை. அவர்கள் மெய்ப்பொருளை அறிய முடியாமலிருப்பர். அத்தகையோர் வீட்டின் மதிலைச் சுற்றிச் சுற்றி வருவரே அன்றி வாயிலைக் காணாது வாழ்வர் என்பதை

"மந்திரஞ் சொல்லுவார் தம்மை யறியார்
தனிமந்திரஞ் சொல்லுவார் பொருளை யறியார்
மந்திரஞ் செபிப்பார்கள் வட்ட வீட்டினுள்
மதிலினைச் சுற்றுவார் வாயில் காணார்..."

(ப.சி.பெ.கோ.214) என பாம்பாட்டிச் சித்தர் புலப்படுத்துவர்.

இவற்றால் மெய்ப்பொருளைத் தலைவனின் உருவால் உணராதவர் மந்திரம் சொல்லியும் பயனில்லை என்பது பெறப்படுகிறது.

"பெரும்பாலோர் இருமொழிகளிலும் மந்திரங்களைச்
சொல்வது, மனப்பாடம் செய்து செய்யுளைப்பள்ளி
மாணவன் ஒருவன் ஒப்புவித்தால் எப்படி
இருக்குமோ அப்படித்தான் இருக்கும். ஆகவே
அவற்றினால் பலன் இல்லை"[2]

என்று ஸ்ரீரங்கம் சித்தர் குறிப்பிடுவது சித்தர்களின் கருத்துக்கு ஏற்புடையதாகிறது.

> "சித்தி அடைந்தவர்களெல்லாம் சித்தர்கள் ஆனால் இற்றை நிலையில் மந்திர, தந்திர யந்திர, ஜாலவித்தை, கண்கட்டு, செப்படி வித்தை, மோடிவித்தை போன்றன செய்து, சித்தர்கள் எனச் சொல்லிக்கொண்டு தருக்கித் திரிகின்றனர். அன்னாரெல்லாம் சித்தர்கள் அல்லர். பித்தர்கள் - பதர்கள் - ஏச்சுப் பிழைக்கும் எத்தர்கள்"[3]

என்னும் கூற்றால் ஏமாற்றுதல் உயர்வல்ல என்பதைத் தெளியலாம்.

இவற்றிலிருந்து போலித் துறவிகள் மாயவித்தைகள் செய்து ஏமாற்றுவர் என்பது புலனாகிறது.

போலித் துறவிகள், மாயவித்தைகளால் மக்களை மயக்கிப் பிழைப்பு நடத்துவர். முடிவில் பேய் பிடித்தவர் போல் உலகில் செத்துமடிவர் என்று போலித்துறவிகளைச் சித்தர்கள் அடையாளம் காட்டுகின்றனர். மேலும், அவர்கள் மந்திரத்தில் மயங்கி காலத்தை வீணாக்க வேண்டாம் என்றும், மாயவித்தைகளைக் கண்டு ஏமாற வேண்டாம் என்றும் அறிவுரை பகர்கின்றனர்.

## 5.3 பொருள் பறித்தல்

போலியான தவசிகள் பொருள் நாட்டமுடையவர்கள். பிறரை ஏமாற்றி, பொருள் சேர்த்து வாழ்வது அவர்தம் செயல்

பொருள் பறித்தலே அவர் தம் நோக்கமும். ஆசைக்கு அளவே இல்லை என்பது உலகவழக்கு. பொருளாசை கொண்ட மனிதர்கள் பிறர் பொருளைக் கவர்ந்து இன்பமாய் வாழ்வர்.

போலித்துறவிகள் சித்தாடல், காரியமாக்கல் இரசவாதம் முதலிய வழிகளைக் கையாண்டு பொருள் பறித்தலை இப்பகுதி விளக்குகிறது.

போலித்துறவிகள் பிறர் பொருள் பறித்தலை,

"ஆசைகொண்ட அறிவுடும் அவ்வியர் பொருளினை
மோசஞ்செய்த பணிக்கு முந்தியம்ம லைபவர்"

(ப.சி.பெ.கோ 80) என சிவவாக்கியர் சொல்வர்.

5.3.1 சித்தாடல்

சித்தர்கள் தமது தவத்தின் ஆற்றலால் செய்யும் செயற்கரிய செயல்கள் / அற்புதங்கள் சித்தாடல் எனப்படுகின்றன. சித்தாடுவது மக்களை நம்பவைக்கும் ஒரு நிலை. சித்தர்கள் செய்யும் சிறப்பான இந்நிலையைப் போலித்துறவிகள் தாமும் எய்தியதாக மக்களை நம்ப வைக்கும் பொய் நிலை இப்பிரிவில் விளக்கப்படுகிறது.

எல்லாச் சித்துகளும் அடைந்துவிட்டேன்; யாருக்கு என்ன என்ன தேவையோ அவற்றைச் சொல்லித் தருவேன்; உடனே சித்தியளிக்கச் செய்வேன் என்று சத்தியம் பேசி; சாமிவேடம் பூண்டு அலைவர் சிலர். அவர்களுடைய சொற்கள் நித்தமும் மெய்யு வளர்க்கவும்,

பிறர் பொருளைப் பக்தியின் வழி கவர்ந்து கொள்ளவும் பயன்படுமேயன்றி பிறிதில்லை. வாய்ஞானம் பேசி, சித்துகள் செய்வதாய் ஏமாற்றும் நீதிநெறி நில்லாத தீயோரெல்லாம் அழிவது உறுதி என்பதை

"முத்திசேறச் சித்திக்கு முன்னளிப்பேன் பாரெனச்
சத்தியங்கள் சொல்லியெங்குஞ் சாமிவேடம் பூண்டவர்
நித்தமும்வ யிறுவளர்க்க நீதிஞானம் பேசியே
பத்தியாய்ப் பணம்பறித்துப் பாழ்நரகில் வீழ்வரே"

(ப.சி.பெ.கோ.81) என சிவவாக்கியர் வெளிப்படுத்துவார்.

போலித்துறவிகள் தாம் ஞானம் பெற்றுள்ளதாகக் கூறி பிறரை ஏமாற்றுவர். அவர்கள் சித்துகள் செய்ய வல்லவர் என பிறரை நம்பச் செய்து புரட்டும் பேசுவர். இதனை,

"மயங்குவான் பொன்தேடப் புரட்டும் பேசி
மகத்தான ஞானமெல்லாம் வந்த தென்பான்"

(ப.சி.பெ.கோ. 727) என சட்டைமுனிவர் புலப்படுத்துவர்.
சிவவாக்கியர்

"சீரிலிங்கு ளக்குளான சித்திசெய்வேன் பாரென
நேரினிற்பி றர்பொருளை நினைவுங்கைப் பற்றுவர்"

(ப.சி.பெ.கோ.81) எனக் கூறி போலித் துறவிகள் மக்களை ஏமாற்றிப் பொருள் பறித்தலை வெளிப்படுத்துவர்.

கொங்கணர்

"எல்லா மறிந்தவ ரென்றுசொல் லிமிந்தப்
பூமியி லேமுழு ஞானி யென்று
உல்லாச மாக வயிறு பிழைக்கவே
ஓடித் திரிகிறார் வாலைப் பெண்ணே"

(ப.சி.பெ.கோ.338) எனக் கூறுவர். இதன்வழி, சித்துகள் கைவரப் பெற்றவன் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு மக்களிடம் பொருள் பறித்திடும் போலியாளர்களைக் கொங்கணர் இனங்காட்டுகிறார்.

சித்தாடல் செய்து பொருள் பறிப்பவர் பற்றி,

"சிலருக்குப் பூர்வ ஜென்ம புண்ணியத்தால் சில
சித்துகள் கைகூடி விடுகின்றன. அவர்களுக்கே
இது எப்படிக் கிடைத்தது என்பது தெரியாது.
இச்சித்துக்களைப் பயன்படுத்தி மக்களிடம் பெரும்
பொருளையும் செல்வாக்கையும் சம்பாதித்து
விடுகிறார்கள். சிலகாலம் இச்சித்துகள்
இருந்தபின்பு தானே விலகிப் போய்விடும். இதை
என் அனுபவத்தில் பலரிடம் கண்டிருக்கிறேன்"[4]

என்று ஸ்ரீரங்கம் சித்தர் கூறுவது குறிப்பிடத்தக்கது.

மேற்கூறியவற்றால் சித்துவேலை செய்வது நிலையானதன்று என்பது உணர்த்தப்படுகிறது. போலித் துறவிகள் செய்யும் சிறு செயல்களைக் கண்டு ஏமாந்து விடக்கூடாது. இத்தகையோரை அணுகினால் பணமும் காலமும் வீணாகும் என்பது தெளிவாகின்றது.

## 5.3.2 காரியமாக்கல்

போலித்துறவிகள், பிறரிடம் இன்னது செய்து தருகிறேன்; அக்காரியத்தை முடித்துத் தருகிறேன்; அதைச் செய்யும் வல்லமை தமக்கு உண்டு எனக் கூறுவதையே 'காரியமாக்கல்' என்னும் தொடர் சுட்டுகிறது. ஞானம் எய்தாத போலித்துறவிகள் தம்முடைய காரியத்தை முடித்துக் கொள்ளவே விரும்புவர்.

போலித்துறவிகள், பிறரிடம் பொய்க் கருத்துகளைக் கூறி ஏமாற்றுவர்; கோடிக்கணக்கான மந்திரங்கள் சொல்லிப் பிதற்றுவர்; பிறர் பொருள் பறிப்பர்; தம் வயிறு வளர்ப்பர்; இதனை

"பூரண நிற்கும் நிலையறி யான்வெகு
பொய்சொல்வான் கோடிமந் திரஞ்சொல்வான்
காரண குருஅ வனுமல் லவன்
காரிய குருபொ ருள்பறிப்பான்"

(ப.சி.பெ.கோ.338) என்னும் பாடலின் மூலம் கொங்கணர் உணர்த்துவர். இதிலிருந்து தன் காரியத்தையே நிறைவேற்றிக் கொள்ளும் தன்மையுடைய போலித் துறவிகள் 'காரிய குரு' எனவும், பிறர் நலம் பேணி, உயர் ஞானக் கருத்துகளை உணர்த்தும் நல்லவர்கள் 'காரண குரு' எனவும் கொங்கணர் குறிப்பிடுவதை அறியலாம்.

பல காரியங்கள் செய்து தருகிறேன் என்று கூறி, பொருள் பறிப்பவர்களைப் 'பொய்க்குரு' என்று மதுரை வாலைசாமி கூறுகிறார் (ப.சி.பெ.கோ.592). இதனால் காரியகுருவின் வார்த்தைகளால் முன்னேற முடியாது. அவற்றால் அல்லல் தான் கிட்டும் என்பது பெறப்படுகிறது.

உபதேசம் பண்ணுவதாகக்கூறி பொருள் பறித்திடும் நிலையை,

"பாரப்பா சீடர்களை அழைப்பான் பாவி
பணம் பறிக்க வுபதேசம் பண்ணுவோ மென்பான்"

(ப.சி.பெ.கோ.771) எனும் அடிகளில் காகபுசுண்டர் உணர்த்துகிறார். ஆசை பொய்களையும் அவன் சொல்வான் என்றும்; அப்படிப்பட்டவர்களைப் 'பாவி' என்றும் அவர் குறிப்பிடுவர்.

தன்னலத்துடன் பொருள் பறிப்பதிலே நாட்டங்கொண்ட போலித்துறவிகள் வஞ்சனை செய்து பணம் பிடுங்கும் தன்மையைச் சித்தர்கள் உணர்த்தி மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டுகின்றனர்.

5.3.3 இரசவாதம்

இரும்பைத் தங்கமாக்குதல் இரசவாதம் என வழங்கப்படுகிறது. போலித் துறவிகள் இரசவாதம் செய்வேன் என்பர்; அதன் மூலம் மக்களிடமிருந்து பொருள் பறிப்பர்.

போலித் துறவிகள் தாம் இரசவாதம் செய்வேன் எனக்கூறி, அதற்கு நிறைய பொருள் வேண்டும் என்றும், அச்சாதனையைச் செய்ய சில நாட்கள் ஆகும் என்றும் கூறி, கொடுத்தப் பொருட்களை எடுத்துக் கொண்டு ஓடிவிடுவர். அவரைத் தேடிக் காண்பது அரிது என்று சிவவாக்கியர் கூறுகிறார். இச்செய்தியை

"வாதஞ்செய்வேன் வெள்ளியும் பொன்மாற்றுயர்ந்த தங்கமும்
போதவே குருமுடிக்கப் பொன்பணங்கள் தாவெனச்
சாதனைசெய் தெத்திச்சொத்துத் தந்தைக்க வர்ந்துமே
காதனூர மோடிச்செல்வர் காண்பதும்ம ருமையே"

(ப.சி.பெ.ஞா.81) என்னும் பாடலில் அவர் உணர்த்துகிறார்.

போலித்துறவிகள், இரும்பை வைத்துப் புடம்போட்டுத் தங்கமாக்கிட முனைவர். பொருட்பற்றால் மெய்ப் பொருளறியா நிலையில் அலமருவர் என்பதை,

"வாதஞ் செய்ய அறியா மன்ரச
வாதஞ் செய்கிறோ மென்று சொல்லி..."

(ப.சி.பெ.ஞா.591) என்றும்,

"ஏதுக்குக் கண்புகைந் தூதுகின் றாரிதை
ஏதென்று கேளடி ஞானப்பெண்ணே"

(ப.சி.பெ.ஞா.592) என்றும் மதுரை வாலைசாமி குறிப்பிடுவார்.

போலித் துறவிகளின் பொருள் பறித்தல் செய்கையைச் சித்தர்கள் தம் பாடல்களில் குறிப்பிடுகின்றனர். போலித்துறவிகளின் பொருள் பறிக்கும் இழிசெயல்கள் சித்தர்களின் காலத்தில் இருந்துள்ளன என்பதும், இக்காலத்தும் இவை இருந்து வருகின்றன என்பதும் தெளிவாகின்றன.

## 5.4 உருவ வழிபாடு

இறைவழிபாடு செய்கின்ற மக்கள் உருவத்தை நிலைப்படுத்தி வணங்குகின்றனர். உருவ வழிபாடு அவர்களுக்குத் தேவையாகிறது. மக்கள் பல சமயக் கருத்துகளை ஏற்று வழிபாடு செய்கின்றனர். சித்தர்கள் உண்மை நெறியை உலகுக்குச் சொல்லுகின்றனர். உருவ வழிபாட்டினை இடித்துரைத்து அன்பு கொண்ட அகவழிபாட்டினை எடுத்துரைக்கின்றனர்.

இறைவனைக் கற்சிலையில் கண்டு மகிழ்வர் மக்கள். சிறந்த மெய்ப் பொருளை அழிவிலா மணியைக் கல்லில் காண முற்படுவது அறிவின் ஏழ்மையையுணர்த்தும். ஒவ்வொரு சிலையும் கல்லால் ஆனதுதான். ஆயினும் அவற்றை வெவ்வேறு பெயர்களில் அழைத்து மகிழ்கின்ற மக்களைக் கண்டு வருந்துகின்ற சிவவாக்கியர்,

> "பண்ணிவைத்த கல்லையும் பழம்பொருள தென்றுநீர்
> எண்ணமுற்று மென்னபே றுரைக்கிறீர்க ளேழைகாள்"

(ப.சி.பெ.கோ.38) என்று உணர்த்துவர்.

நட்டு வைத்த கற்சிலையைத் தெய்வமென்று நினைத்து அதற்குப் பலவகையான பூமாலைகளைச் சாற்றிச் சுற்றிவந்து மந்திரம் ஓதுவர் சிலர். அந்த நட்டகல் பேசுமா என்றால் பேசாது. தலைவனைக் கல்லில் என நினைப்பதும் கண்டேன் என்றுரைப்பதும் ஏற்புடையதாகாது என்று கூறுவர். மேலும் தூய நெஞ்சினில் தலைவன் எப்பொழுதும் தங்கி அருளுவான் என்ற உண்மை இறை வழிபாட்டை

"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து முணுமுணென்று சொல்லுமந்த்ர மேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளி ருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவைய றியுமோ"

(ப.சி.பெ.சோ.78) என சிவவாக்கியர் வெளிப்படுத்துவார். இதன்வழி சுவையான காய்கறி சமைத்திட்டால் அதன் சுவையைச் சமைக்கப் பயன்படுத்தப்படும் பாத்திரமான சட்டி அறியாது; அதுபோல, சிலையைச் சமைத்துத் தலைவனின் அருளை அதில் தேடுதல் இயலாது என்றும், மெய்யுணர்வுள்ள மனிதன், தவசியாகிய பின் தலைவனின் மாண்புகளை அவனே வந்து தங்கியருள்வதன் வழி உணர்கிறான் என்பதையும் சிவவாக்கியர் உணர்த்துகிறார்.

நல்ல ஓசையுள்ள உயர்ந்த கற்களை உடைத்து இரண்டாக்கி, ஒரு கல்லில் கடவுள் உருவம் செய்து கடவுளைக் கல்லில் காண்பர் பலர்.

மற்றொரு கல்லில் படிக்கட்டுகள் செய்து காலால் நடந்து மிதிப்பர். முதலொன்றுக்கு உயர்வையும், மற்றொன்றுக்கு உயர்வின்மையையும் செய்கின்ற மக்களைப் பார்த்து, மனதில்தான் வேறுபாடு உள்ளதே தவிர கல்லில் இல்லை என்பதை உணர்த்துவர். இதனை

"ஓசை யுள்ள கல்லை நீர் உடைத்திரண்டு செய்துமே
வாசலிற் பதித்த கல்லை மழுங்கவே மிதிக்கிறீர்
பூசனைக்கு வைத்த கல்லில் பூவும் நீரும் சாத்துறீர்
ஈசனுக் குகந்த கல் எந்தக்கல்லு சொல்லுமே"

(ப.சி.பெ.கோ.66) என சிவவாக்கியர் உணர்த்துவர். இக்கருத்தை மேலும் அவர் விளக்குவர். மக்கள் ஒரு மரத்தில் சிலைகள் செய்து வணங்குவர். அவர்களே அம்மரத்தின் கிளைகளில் பாதகுறடு செய்து மிதிக்கின்றனர். இவற்றிலுள்ள உயர்வையும் தாழ்வையும் உணர வேண்டும் என்பர் (ப.சி.பெ.கோ.82)

சிவவாக்கியர் பின்வரும் அடிகளில் சிலவினாக்களை எழுப்பி உருவ வழிபாடு செய்வோருக்குத் தெளிவை உண்டாக்குவர்.

"தேவர் கல்லு மாவரோ சிரிப்பதன்றி என்செய்வேன்"

(ப.சி.பெ.கோ.23) எனவும்,

"செங்கல்செம்பு கல்லெலாஞ் சிறந்துபார்க்கு மூடரே"

(ப.சி.பெ.கோ.72) எனவும்,

"கல்லுவெள்ளி செம்பிரும்பு வாய்ச்சிறந்த ராங்களில்
வல்லதேவ ரூபபேத மங்கமைத்துப் போற்றிடின்
தொல்லையற்றி டப்பெருஞ் சுகந்தருமோ சொல்லுவீர்
இல்லைஇல்லை இல்லைஇல்லை ஈசனாணை இல்லையே"

(ப.சி.பெ.கோ.82) எனவும் அவர் விளம்புகின்றார்.

இக்கருத்தினைப் பட்டினத்தார்

"கல்லிலுஞ் செம்பிலு மோவிருப்பா னெங்கள் கண்ணுதலே"

(ப.சி.பெ.கோ.106) எனத் தெரிவிப்பார். தலைவன், கற்சிலையிலும் செம்புச் சிலையிலும் இருப்பான் என எண்ணுவது உண்மையாகாது. அவன் அவற்றில் தங்கும் இயல்புடையவனும் அல்லன் என்பது புலனாகும்.

பாம்பாட்டிச் சித்தர்

"உளியிட்ட கற்சிலையில் உண்டோ வுணர்ச்சி..."

(ப.சி.பெ.கோ.212) என விளைவுதன்வழி கற்சிலையில் கடவுள் இல்லை என்பதை தெளிவுபடுத்துவார்.

கோயில்கட்டி வழிபாடு செய்வதால் தலைவனைக் காண இயலாது என்பதை,

"நாட்டுக்கொரு கோயிற்கட்டி நாளும் பூசித்தே
நாதன்பாதங் காணார்களென் றாடாய் பாம்பே"

(ப.சி.பெ.கோ.212) என பாம்பாட்டிச் சித்தர் உணர்த்துவர்.

சிலைகளைக் கடவுள் என்று வழிபடுவோரால் கடவுளைக் காண முடியாது. அத்தகையோர் மூடர் என்பதை,

"...... ...... ...... ......
வையகத்திற் கற்செம்பைத் தெய்வ மென்றும்
நாடுவார் பூரணத்தை யறியா மூடர்
நாய்போல குரைத்தல்லோ வொழிவார் காணே"

(ப.சி.பெ.கோ.302) என அகத்தியர் மொழிவார்.

மேற்கூறியவற்றால் உருவ வழிபாட்டினால் கடவுளைக் காண இயலாது என்பதையும் உருவ வழிபாடு செய்வோர் மூடர்கள் என்பதையும் இத்தகைய வழிபாட்டினால் எத்தகைய பயனும் கிட்டாது என்பதையும் சித்தர்கள் தெளிவு படுத்துவதை அறியலாம். இக்கருத்துகளை அறம் செய்வதாக

"உருவச் சிலையிலே தெய்வம் இருப்பதாக
நினைப்பது வணங்குவது அறிவீனம்; உருவ வணக்கம்
அறிவை வளர்க்காது; மூடத்தனத்தையே
வளர்க்கும். மூடர்களே உருவங்களை வைத்து
வணங்குவார்கள்"[5]

என்னும் கூற்று அமைந்துள்ளது. உருவ வழிபாட்டை சித்தர்கள் எதிர்த்தனராயினும் கடவுள் இருப்பை அவர்கள் மறுக்கவில்லை என்பர்.[6]

உருவ வழிபாடு என்பது ஒரு வகையில் பொய்யானது. மெய்மை அறிந்திட அவ்வழியில் முடியாது. ஆதலால் சித்தர்கள் உருவ வழிபாட்டைக் கடிந்தனர் எனக் கூறலாம்.

5.5 சடங்குகள்

மக்கள் இறையுணர்வு பெற, சடங்குகளைக் கைக்கொள்கின்றனர். சடங்குகளாவது சில பழக்க வழக்கமான செயல்களாம். அச் செயல்களால் உண்மையை அறிய முடியாது.

ஆன்மீகம் என்ற பெயரில் சமுதாய மக்கள் இறையுணர்வை வளர்க்க சடங்குகளை மேற்கொள்கின்றனர். சடங்குகளைச் செய்கின்ற அவர்கள் முன்னோர் செய்ததை அப்படியே தொடர்கின்றனர்.

சடங்குகளைச் செய்யச் சொல்லி சித்தர்கள் கூறவில்லை. மாறாக, உண்மை நெறியை விட்டு மாறான செயல்களில் ஈடுபடுகின்றவரை நல்வழிப்படுத்த வேண்டும் என்ற உள்ளுணர்வில், சடங்குகளையும் அதைச் செய்வோரையும் அவர்கள் இழித்துரைக்கின்றனர்.

'சடங்குகள்' எனும் இப்பகுதியில் திருநீராட்டல், தேர்த்திருவிழா, வேதம் ஓதுதல், வேள்வி செய்தல், கதைகளாகிய இதிகாச புராணங்கள் பற்றிய செய்திகள் விளக்கப் பெறுகின்றன.

5.5.1 திருநீராட்டல்

கோயில் கட்டி வழிபடுவதும் பெரியவும்; உயிரோ உருவச் சிலைகளுக்குத் திருநீராட்டுவதும் ஒருவகைச் சடங்காகும். அச்சடங்குகளால் விளையும் பயனை

"மாறுபட்டு மணிதுலக்கி வண்டியெச்சில் கொண்டுபோய்
ஊறுபட்ட கல்லின்மீதே யூற்றுகின்ற மூடரே"

(ப.சி.பெ.கோ.8) என சிவவாக்கியர் கூறுவர்.

உருவ வழிபாட்டின் ஒரு பகுதி, சிலையின் மீது திருநீராட்டலாகும். வண்டின் எச்சிலாகிய தேனை ஊற்றி நீராட்டுச் செய்வோரைச் சிவவாக்கியர் மூடர் என அழைப்பர்.

உணவுப் பொருட்களாகிய பால், தயிர், இளநீர் போன்றவற்றைக் கல்லின்மீது ஊற்றி வழிபடுகின்றனர். இச்செயல்கள் ஆன்மீகத்திற்கு உகந்தவை அல்ல என்பது சிவவாக்கியரின் கருத்தாகும். (ப.சி.பெ.கோ.66)

கோவிலில் உள்ள சிலைகளுக்கு நீராட்டி, மலரிட்டு, வழிபாடு செய்வதைச் சித்தர்கள் ஏற்கவில்லை என்பதும்; அவற்றை அவர்கள் கடிந்துரைப்பர் என்பதும் புலனாகின்றன.

## 5.5.2 தேர்த் திருவிழா

ஆண்டுக்கொரு முறை கோவிலில் பெருவிழா நடைபெறும். அப்போது இறைவன் திருவுருவம் தேரில் உலா வரும். அதனைத் தேர்த்திருவிழா என அழைப்பர்.

கோவிலில் உள்ள தெய்வம் கல் என்பதை அறிவோம். உலாவும் தெய்வமான செப்புச்சிலையை வைத்து, தேரில் அலங்காரம் செய்து, வடத்தைப் பிடித்து, பலமக்களும் இழுத்துச் செல்வர். தேர் புறப்பட்ட இடத்திற்கு வந்தபின் பெரிய ஆன்மீகக் காரியம் முடிந்தது என நினைப்பர். இச்செயல்களை சிவவாக்கியர் ஏற்கவில்லை. அவர்களைப் 'பேதை' என்றும் அச்செயலுக்கு 'புரளி' என்றும் அவர் பெயரிடுவர். இதனை

"ஊரிலுள்ள மனிதர்கா ளொருமனதாய்க் கூடியே
தேரிலே வடத்தையிட்டு செம்பைவைத் திழுக்கிறீர்
ஆரினாலு மறியொணாத வாதிசித்த நாதரை
பேதையான மனிதர்பண்ணும் புரளிபாரும் பாருமே"

(ப.சி.பெ.கோ.39) என அவர் புலப்படுத்துவர்.

இச்செயலை வீண்[7] என்றும் அறிவற்றது[8] என்றும் கூறுவர்.

மக்கள் நல்லுணர்வு அடையாமல் விளையாட்டுச் செயல்களில் ஈடுபட்டு, ஆன்மீகச் செயல் எனக்கருதி ஏமாறுகின்றனர் என்பது இவற்றால் புலனாகிறது.

5.5.3 வேதம் ஓதுதல்

இறைவழி பாட்டில் உள்ள ஒருமுறை வேதம் ஓதுதல் ஆகும். வேதம் அறிந்தவர் இவ்வேலையைச் செய்வர். கோவிலில் வேதம் ஓதி வாழ்வர். சாத்திரம் வேதம் போன்ற நூல்களைக் கற்று ஆன்மீக வழிபாட்டினைப் புகட்டுவர். இதனைச் சித்தர்கள் விளக்கமாகக் கூறி விளையும் பயனை விளக்குவர்.

சிவவாக்கியர்,

"சாத்திரங்க ளோதுகின்ற சட்டநாத பட்டரே
வேர்த்திரைப்பு வந்தபோது வேதம்வந் துதவுமோ"

(ப.சி.பெ.கோ.5) என வினவுவர். இதன் வழி சாத்திரம் ஒன்றே முடிவெனக் கருதி வேதம் ஓதுகின்ற சட்டநாத பட்டரே என

விளித்து, இறப்பு நிகழ்கின்ற நிலையில் வேர்த்து இரைப்பு வந்தபோது ஓதிய வேதம் வந்து உதவி செய்யுமோ என வினவி, இதனால் பயனில்லை என அழுத்தமாக வலியுறுத்துகிறார். ஞான நிலைக்கு இச் செயலால் யாதொரு பயனுமில்லை என்பதே அவருடைய கருத்தாகிறது.

நான்கு வேதங்களையும், அனைத்து சாத்திரங்களையும் ஓதினாலும் சிவனை அறிந்து கொள்ள முடியாது என்பதை, 'சாமம் நாலு வேதமும் சகலசாத் திரங்களும்/ சேமமாக வோதிலும் சிவனைநீ ரறிகிலீர்' (ப.சி.பெ.கோ.6) என சிவவாக்கியர் உணர்த்துவார்.

நான்கு வேதங்களை ஓதினாலும் காணமுடியாதவன்/ உணர முடியாதவன் இறைவன். வேதங்களுக்கெல்லாம் அப்பாற்-பட்டவன். அத்தகையவனை வேதங்களை ஓதி அடைய முயல்வது வீண் முயற்சியாகும். வேதம் ஓதுவதும் ஒருவகைச் சடங்கேயன்றி. இறையுணர்வு ஒன்றிட அது ஒருபோதும் உதவாது என்பது சித்தர்களின் கருத்தாகிறது. இக்கருத்தை அரன் செய்வதாக

> "வேத விற்பன்னர்கள், வேதாந்தத்தைக் கரைத்துக் குடித்தவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள் இவர்களையெல்லாம் இறைவனை உணர்ந்தவர்களாக ஏற்றுக்கொள்ள முடியாது. இவற்றைப் படிப்பது பாண்டித்தியம் பெற உதவலாமே தவிர இறைவனை உணர்கின்ற மார்க்கங்கள் ஆகிவிடாது"[9]

என்னும் கூற்று உள்ளது.

வேதம் ஓதுதல் பயனற்றது என்பது இவற்றால் புலனாகிறது.

5.5.4 வேள்வி செய்தல்

இறைவழிபாட்டில் வேள்வி செய்தலை மக்கள் ஒருவகைச் சடங்காக மேற்கொண்டு வருகின்றனர். நெருப்பை உண்டாக்கி, நெய்யை விட்டு, தானியங்களைப் போட்டு, வேதம் ஓதி மகிழ்வர்.

இத்தகைய வேள்வியால் அருட்சோதியை எய்த இயலாது என்பதை,

> "நெருப்பைமூட்டி நெய்யைவிட்டு நித்தநித்த நீரிலே
> விருப்பமொடு நீர்குளிக்கும் வேதவாக்கியம் கேளுமின்"

(ப.சி.பெ.சோ.8) என சிவவாக்கியர் குறிப்பிடுவர்.

இறைவனின் அருள் வேண்டி, பள்ளம் அமைத்து அதில் தீமூட்டி சுற்றிலும் அமர்ந்து இருக்கு வேதத்தை ஓதி மகிழ்வர். கட்டமட்கலத்தில் நூலைச் சுற்றிவைத்து சுகம் காண்பர். உடம்பின் மூலாதாரச் சக்தியை உணர்ந்து எழுப்பி, சோதியைக் காண, வழிகாட்ட இயலாத வேள்விகளைச் செய்தலால் யாதொரு பயனுமில்லை என்பதை,

"இட்டகுண்ட மேதடா இருக்குவேத மேதடா
கட்டமட்க லத்திலே சுற்றுநூல்கள் ஏதடா
முட்டிநின்ற தூணிலே முளைத்தெழுந்த சோதியைப்
பற்றிநின்ற தேதடா பட்டநாத பட்டனே"

(ப.சி.பெ.சோ.49) என சிவவாக்கியர் புலப்படுத்துவர்.

வேள்விகளைச் செய்வதால் இறையருளைப் பெற இயலாது என்பதையும், உயர் ஞானம் பெற இத்தகு செய்கைகள் உதவாதென்பதையும் சித்தர்கள் உணர்த்துவர் என்பது இவற்றால் புலனாகின்றன.

5.5.5 கதை, காவிய, இதிகாச, புராணங்கள்

மனிதர்கள் தம் வாழ்நாளில் சான்றோர்களின் நூலைக் கற்று நன்னிலை அடைய வேண்டும். ஆனால், இதற்கு மாறாக பலர் மெய்ப்பொருளை உணர்த்தாத நூல்களைக் கற்று அறிவு மயங்குகின்றனர்.

நல்வழியறிந்த சான்றோர்கள் மயக்கும் நன்மையுடைய நூல்களை வெறுத்து, ஞானியரின் ஞானநூல்களையே விரும்பிக்கற்று, அதற்கேற்ப செயல்பட்டு மேன்மையடைவர்.

மனுதர்மம் என்னும் நூல் உயர்வானது எனும் கருத்து மக்களிடையே காலங்காலமாய் நிலவி வருகிறது. அதைக் கற்பதும் உரைப்பதும் மயக்கத்தைத் தரும் என்று கூறுகின்றார் சிவவாக்கியர். இக்கருத்து புதுமையானதாக விளங்குகிறது. இந்நூலைப் படித்து மக்கள் மயங்கிய நிலையினை அவர்

'மனுப்பிறந் தோதிவைத்த நூலிலே மயங்குறீர்...'

(ப.சி.பெ.ஞா.35) என உணர்த்துவர்.

தலைவனைப் பலவகையான கதைகளின் வழி புகழ்வர். அவற்றுள் ஒன்று இறைவன் சுடுகாட்டில் வாழ்பவன்; சாம்பல் பூசியிருப்பவன், பேய்கள் உறையும் இடத்தில் இருப்பவன் என விளக்குவது நாய்கள் சுற்றும் அவ்விடத்தில் தலைவன் இலான். கதைகள் பேசி உண்மையை உணராதோரை சிவவாக்கியர்,

"பேய்கள் கூடிப்பிணங்கள் தின்னும்பிரிய மில்லாக் காட்டிலே
நாய்கள் சுற்ற நடமாடு நம்பன்வாழ்க் கையேதடா"

என இடித்துரைப்பார். இதன்வழி, சுடுகாட்டிற்குச் செல்லாது வீடுபேறுபெற்ற தலைவனை மனதில் வைத்து மகிழாமல் காட்டில் தேடு வாடுவது அறியாமையின் பாற்படும் என்று அவர் உணர்த்துவர்.

நான்கு வேதங்களும், அறுவகைச்சாத்திரங்களும், பலதந்திரங்களும், புராணங்களும், கலைகளும், ஆகமங்களும் வீணான நூல்கள் என்பதையும் அந்நூல்களால் மெய்யுணர்வை உணர இயலாது என்பதையும்

"சதுர்வேதம் ஆறுவகைச் சாத்தி ரம்பல
தந்திரம் புராணங் கலை சாற்று மாகமம்
விதம்வித மானவான வேறு நூல்களும்
வீணான நூல்களே யென்றாடாய் பாம்பே"

(ப.சி.பெ.கோ.213) என பாம்பாட்டிச்சித்தர் அறிவிப்பார்.

பொய்மையுடையோர், வேதம், புராணம், காவியங்கள், மந்திரங்கள் கற்றவல்லவர் போல் ஏமாற்றுவர். அத்தகையோரை 'மட்டை' என்று காகபுசுண்டர் குறிப்பிடுவார் (ப.சி.பெ.கோ.767)

மயக்கங்கள் தந்திடும் அருத்தங்களை கதை என்றும், காவியம் என்றும், புராணம் என்றும் முன்னோர் எழுதினர். அவற்றில், தேனில் ஈவிழுந்ததைப்போல பலரும் மயங்கி விழுந்தனர். இவ்வாறு எழுதியது வியாசமுனிவர்; அவரும் தன் தலைவன் சிவனார் உத்தரவுப் படியே எழுதினார். இவ்வாறு புராணங்கள் எழுதியதால் பாரதம் முதலிய கதைகளை உண்டாக்கியதால் மனிதர்கள் உண்மையை உணர

இயலாமற் போயிற்று என அகத்தியர் கூறுவதை,

"நயங்காமற் பிழைப்பதற்கே இந்த ஞானம்
சார்வாகப் பாராட்டும் ஞானம் வேறே
மயங்குதற்கு ஞானம்பார் முன்னோர் கூடி
மாட்டினார் கதைகாவ்ய புராண மென்றும்
இயலான ரசந்தனிற் புகுந்தாற் போலும்
இசைத்திட்டார் சாத்திரங்க ளாறென் றேதான்
வயலான பயன்பெறவே வியாசர் தாமும்
மாட்டினார் சிவனாருத் தரவி னாலே"

(ப.சி.பெ.ஞா.299) என்னும் பாடலின் மூலமும்

"உத்தார மிப்படியே புராணங் காட்டி
உலகத்தில் பாரதம்போல் கதையுண் டாக்கிக்
கர்த்தாவை தானென்று தோன வொட்டாக்
கபடநா டகமாக மேதஞ் சேர்த்து..."

(ப.சி.பெ.ஞா.300) என்னும் பாடலடியின் மூலமும் அறிந்துகொள்ள முடிகிறது.

காவிய, புராணங்களால் மக்களிடத்தில் ஏற்பட்ட மயக்க நிலையைப்பற்றி இராமலிங்க அடிகள் கூறும் கருத்தும் இங்கு சிந்திக்கத்தக்கது.

"நாம் நாமும் முன் பார்த்தும் கேட்டும் லகசியம் வைத்துக் கொண்டிருந்த வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய கலைகள் எதனிலும் லகசியம் வைக்கவேண்டாம். ஏனென்றால், அவைகளில் ஒன்றிலாவது குழூஉக்குறி யன்றித் தெய்வத்தை இன்னபடி என்றும், தெய்வத்தினுடைய உண்மை இன்ன தென்றும், கொஞ்சமேனும் புறங்கவியச் சொல்லாமல், மண்ணைப் போட்டு மறைத்து விட்டார்கள். அனு மாத்திரமேனுந் தெரிவிக்காமல், பிண்டலகக்ஷணத்தை அண்டத்தில் காட்டினார்கள். யாதெனில், கைலாசபதி என்றும் வைகுண்டபதிஎன்றும் சத்திய லோகாபதியென்றும் பெயரிட்டு, இடம் வாகனம் ஆயுதம் வடிவம் ரூபம் முதலியவையும் ஒரு மனுஷ்யனுக்கு அமைப்பதுபோல் அமைத்து, உண்மையாக இருப்பதாகச் சொல்லியிருக்கின்றார்கள். "தெய்வத்துக்கு கைகால் முதலியன இருக்குமா?" என்று கேட்பவர்க்குப் பதில் சொல்லத் தெரியாது விழிக்கின் றார்கள். இஃது உண்மையாக இருப்பதாகவே முன்னும் பின்னும் உள்ள பெரியவர்களென்று

பெயரிட்டுக் கொண்டிருந்தவர்களும் உண்மையை அறியாது, அப்படியே கண்ணை மூடிக்கொண்டு இருக்கிறார்கள். ஆனால், ஆதியிலே இதை மறைத்தவன் ஓர் வல்லவன், அவன் மறைத்ததை இதுவரைக்கும் ஒருவரும் கண்டபாடில்லை. அவன் பூட்டிய அந்தப் பூட்டை ஒருவரும் திறக்கவில்லை, இதுவரைக்கும் அப்படிப்பட்டவன் பூட்டிய பூட்டை உடைக்க ஒருவரும் வரவில்லை"[10]

இதனால், கதை, காவிய, இதிகாச, புராணங்கள் உண்மையை மூடி மறைத்தன என்பதை உணரலாம்.

மேலும், இக்கருத்தை வலியுறுத்துவதாக வியாச முனிவரின் கூற்று ஒன்று உள்ளது என்பர்.[11]

கதை காவிய புராணங்கள் மக்களை உண்மைநிலையை உணர ஒட்டாமல் மயக்கநிலைக்கு அழைத்துச் சென்று மூடிமறைக்கின்றன. சித்தர்கள் இத்தன்மையைத் தங்கள் பாடல்களில் சுட்டிக்காட்டி மயக்கத்தைத்தரும் அந்நூல்களைக் கற்க வேண்டாம் என்று அறிவுறுத்துகின்றனர்.

5.6 சிறுதெய்வ வழிபாடு

பண்டைக் காலத்தில் போரில் ஈடுபட்டு வீரமரணம் எய்தியவர்களைத் தெய்வமாகக் கருதி வழிபடும் நிலை இருந்து வந்தது.

ஓர் இனத்தில்/குடும்பத்தில் நல்லோர் ஒருவர் இறந்திருந்தால் அவரை தெய்வமாகக்கருதி வழிபாடு செய்யும் நிலையும் வளர்ந்து வந்தது. இவ்வழிபாடுகள் தொடர்ந்து, இன்றைய நிலையில் சிறுதெய்வ வழிபாடு என்னும் நிலைக்கு வளர்ந்தமைந்திருக்கிறது.

இச்சிறுதெய்வ வழிபாடு பிடாரிபூசை, வீரர்வழிபாடு, சமாதிவழிபாடு, நடுகல்வழிபாடு, குலதெய்வ வழிபாடு முதலிய பலகிளைகளாகக் கிளைத்திருக்கிறது.

இத்தகைய சிறுதெய்வவழிபாடுகளை அருளில்லாத வழிபாடு என்று சிவவாக்கியர் உணர்த்துகின்றார். மக்களின் பூசையை ஏற்று அருள் செய்யும் ஆற்றல் இச்சிறுதெய்வங்களுக்கு இல்லை என்பதை, 'பேய்கள் பூசை கொள்ளுமோ பிடாரிபூசை கொள்ளுமோ' (ப.சி.பெ.கோ. 40) என சிவவாக்கியர் வினாவுவர்.

ஆசையின் காரணமாக, குலதெய்வவழிபாடு செய்கின்றனர் என்பதை, '...குல தெய்வ முன்னிடும்பழும் ஆசையடி...' (ப.சி.பெ.கோ. 594) என மதுரைவாலைசாமி குறிப்பிடுவர்.

மனிதர்கள் தங்களுக்கு நோய் ஏற்படின் இறைவனை எண்ணுவர். நோய் நீங்கிட இறைவனிடம் முறையிட்டு வேண்டிக்கொள்வர். இது மனித இயல்பு. நோய் நீங்கின் இன்னது செய்வேன் என்று உறுதி படுத்துவர். அதற்கேற்ப ஆடு, கோழி ஆகியவற்றை பலியிடுவர்.

அவ்வாறு பலியிட்டால் பயன்விளையும் என்று அவர்கள் நம்புவர். ஆனால் அப்படிச் செய்பவர்களின் உடல் நாளுக்கு நாள் தேய்ந்து முஞ்சுறுபோல வாடி அழியும் என்பதை சிவவாக்கியர்

"தங்கள்தேகம் நோய்பெறின் தனைப்பிடாரி கோயிலிற்
பொங்கல் வைத்தும் ஆடுகோழிப் பூசைப்பலியை இட்டிட
நங்கச்சொல்லு நலமிகுந்து நாளுந்தேய்ந்து முஞ்சுராய்
உங்கள்குலத் தெய்வமுங்க ளுங்குலைப்ப தன்மையே"

(ப.சி.பெ.கோ.80) என விளக்குவர். இவற்றால் சிறுதெய்வ வழிபாடு தேவையற்றது என்பது புலப்படுகிறது.

சிறுதெய்வ வழிபாட்டின் இழிநிலையைப் பற்றி மறைமலையடிகள்

"சிறுதேவதை வணக்கத்தைச் செலுத்தும்
வரையில் அறிவற்ற கீழ்மக்கள் உயிர்க்
கொலையும் ஊனுணவுமாகிய கொடுந்
தீவினைகளைக் கைவிடமாட்டார்.
ஆதலாற் தமிழரில் மேன்மக்களாயிருப்
பாரெல்லாம் அறிவும் பண்பும் உடையராய்
முயன்று சிறுதேவதை வணக்கத்தையும் உயிர்க்
கொலை ஊனுணவையும் அறவே யொழித்து
விடல் வேண்டும். இதனினுஞ் சிறந்த அறமுஞ்
சிறந்த தெய்வக்கொள்கையும் வேறில்லை"[12]

எனக்கூறுவது இங்கு மனங்கொள்ளத்தக்கது.

சிறுதெய்வவழிபாடும், அவற்றிற்குப் பலியிடலும் தேவையற்றன என்பதும், அவற்றை தடுத்து நிறுத்த வேண்டும் என்பதும் சித்தர்களின் கருத்துகளாகும்.

## 5.7 அலைகின்ற மயக்கநிலை

ஒவ்வொருவர் அகத்திலும் உள்ள இறைவனை உணராமல் இருப்பது மயக்கநிலையாகும். மக்கள் பலர் இறைவனைத் தேடி காடு, மலை, ஊர் ஆகிய இடங்களில் அலைகின்றனர். இது மயக்கநிலையின் வெளிப்பாடாகும். இந்நிலையினால் மெய்ப்பொருள் அறிய இயலாமல் மக்கள் இடர்படுகின்றனர் என்பதை சித்தர்கள் தமது பாடல்களில் உணர்த்துகின்றனர்.

உலகில் பலகோடி மக்கள் வாழ்கின்றனர் ஆதியாகிய தலைவனை நாடவேண்டும் என்று ஆர்வம் கொண்டவர்கள் அனைவரும் வாழ்நாட்கள் முழுவதும் அலைகின்றனர். ஆனாலும் நாடி அடையவில்லை. அங்குளான், இங்குளான் என்று அவர்கள் அலைந்து தேடுவர். இறுதியில் அவர்கள் உடல்கள் வாடுகின்றன. தனித்தனியே தேடுவர் பலர். பலர் கூடித் தேடுவர், ஆயினும் பயன் ஒன்றும் காணார் என்பதை சிவவாக்கியர்,

"கோடிகோடி கோடிகோடி குவலயத்தோ ராதியை
நாடிநாடி நாடிநாடி நாளகன்று வீணதாய்த்
தேடித்தேடித் தேடித்தேடித் தேகமுங் கசங்கியே
கூடிக்கூடிக் கூடிக்கூடி நிற்பர்கோடி கோடியே".

(ப.சி.பெ.கோ.51) எனக் குறிப்பிடுவர்.

அவர் தலைவனை நாடி அலைபவர்களை வீணர்கள் என்பார். இதனை 'ஆடுகின்ற எம்பிரானை யங்குமிங்கு நின்றுநீர்/ தேடுகின்ற வீணர்காள் தெளிவதொன்றை ஓர்கிலீர்...' (ப.சி.பெ.கோ.63) எனச்சொல்வதால் அறியலாம்.

தலைவனை அறியாத மக்கள் சிலர், அத்தலைவனைத் தேடி காடுதோறும் செல்வர்; மலைதோறும் ஏறுவர்; குன்றுதோறும் சென்றுவருவர்; பள்ளம் தோறும் தள்ளாடித்தள்ளாடி நடப்பர்; நாடுதோறும் அலைவர்; உலகமே சுற்றுவர்; முடிவில் ஒன்றும் காணாது அலமருவர். இந்நிலையை '

"காடுமேடு குன்றுபள்ளம் காவிளாறு சுற்றியும்
நாடுதேசம் விட்டலைவர் நாதன்பாதங் காண்பரோ..."

(ப.சி.பெ.கோ.80) என சிவவாக்கியர் விளக்குவார்.

கானல்நீரை பாலைப்பகுதியில் நீர் என்று நினைத்து மான் ஏமாற்றமடைவதைப் போல உலகில் சிலர் பொய்நிலையைக் கண்டு ஏமாறுவர். இதனைக்

"கானலைமான் நீரெனவே கண்டு செல்லல்போல்
காசினிவாழ் வினைமடர் கண்டு களிப்பார்..."

(ப.சி.பெ.கோ.206) என பாம்பாட்டிச்சித்தர் இயம்புவார்.

பொய்யை மெய்யென நம்பி ஏமாற்றம் அடைபவரை 'விழைமூடர்' என்று அவர் கூறுவது கருதத்தக்கது.

யாத்திரை எனும் பெயரில் காடு, மலை, நதி, பதி, காசி ஆகிய இடங்களுக்குச் சென்று இறைவனைத் தேடி, கால்கடுக்க ஒடுதல் பயனற்றது. இக்கருத்தைக்

''காடுமலை நதிபதி காசி முதலாய்க்
கால்கடுக்க ஓடிற்பயன் யாதலாகுமோ..."

(ப.சி.பெ.கோ.211) என அவர் கூறுவதிலிருந்து அறியலாம்.

இக்கருத்திற்கு வலிமை சேர்ப்பது போல் அகப்பேய்ச்சித்தர் கூறுவர் (ப.சி.பெ.கோ.244)

உண்மையை அறியாது அலைந்து மயக்க நிலையில் காலம் கழிப்பர் பலகோடி பேர் என்பதை

"காணாமல் அலைந்தோர்கள் கோடாகோடி..."

(ப.சி.பெ.கோ.302) என்றும் 'திரிவார்கள் திருடரப்பா கோடாகோடி' (ப.சி.பெ.கோ.307) என்றும் அகத்தியர் சுட்டுவர்.

சித்தர்கள் யாவரும் ஞானம் பெற்றவர்கள். அவர்கள் உண்மையை உணர்ந்தவர்கள். கடவுள் பக்தியெனும் பெயரில் ஊர்தோறும் சுற்றி, காடு மலை தோறும் அலைதல் நன்னெறியாகாது என்பர். இச்செயல்களால் துன்பமே விளையும், உண்மையறிய முயலுபவர் பொய்யான செயல்களில் ஈடுபடலாகாது என அறிவுறுத்துகின்றனர்.

5.8 தீர்த்தமாடும் நிலை

மக்கள் கங்கை முதலிய நதிகளிலும் திருக்குளங்களிலும் நீராடுவதைப் புனிதமாகக் கருதுகின்றனர். நாள்தோறும் நீராடி இறைவழிபாடு செய்வர். நீராடல் என்பது ஒரு செயல். அதனால் மேன்மை அடைய முடியாது என சித்தர்கள் கூறுவர்.

தீர்த்தம் தேடி அலைபவரை 'தீர்த்தமாட வேணுமென்று தேடுகின்ற தீனர்காள்" (ப.சி.பெ.கோ.13) என சிவவாக்கியர் குறிப்பிடுவார்.

நாற்றமுடைய மீனைப் பலமுறை தூய நீரால் கழுவினாலும், அதனுடைய நாற்றம் போகாது. அதுபோல, பலநதியாடி மகிழ்வதால் உடல் பெற்ற மும்மலக்கசடுகள் நீங்கா என்பதை

"நாறுமீனைப் பலதரம் நல்ல தண்ணீரால்
நாளுங்கழு விலுமதன் நாற்றம் போமோ
கூறுமுடல் பலநதி யாடிக் கொண்டால்
கொண்டமலம் நீங்காதென் றாடாய் பாம்பே"

(ப.சி.பெ.கோ.208) என பாம்பாட்டிச்சித்தர் உரைத்துவர்.

பாவங்களைப் போக்கிக் கொள்ள தீர்த்த மாடும் நிலையைப் பற்றி,

"வாழ்க்கையில் மனிதர்கள் பல
பாவங்களைச் செய்கிறார்கள்.
இவற்றைச் செய்துவிட்டு,
கங்கையில் குளித்தால் பாவம்
தீரும், காவிரியில் குளித்தால்
பாவம்தீரும், கோயில் குளங்களில்
குளித்தால் பாவம்தீரும் என்றெல்லாம்
எண்ணி தீர்த்தங்களில் மூழ்குகிறார்கள்.
இம்மாதிரியான சடங்குகளால் மனிதன்
தான் செய்த பாவங்களை கழுவிக்
கொண்டுவிட முடியாது"[13]

என அமையும் கூற்று இங்குக் கருதத்தக்கது.

தீர்த்தமாடுவதால் உயர்வடைய முடியாது என்பதை சித்தர்கள் அழுத்தமாகக் குறிப்பிடுகின்றனர். இச்செயலால் இறையருள் பெற இயலாது என்பதையும் அவர்கள் உறுதிப்படுத்துகின்றனர்.

தொகுப்புரை :

இதுகாறும் ஆராய்ந்தவற்றால் கீழ்க்கண்ட முடிவுகள் கிடைக்கப்பெற்றன.

போலித்துறவிகளான வேடதாரிகள் தீய ஒழுக்கமுடையோர். அவர்கள் மக்களை ஏய்ப்பர். சித்தர்கள் அத்தகையோர்களை இனம் காட்டிச் சாடுகின்றனர். அவ்வாறு வேடம் பூண்டு வாழ்வது மேன்மையாகாது என்றும் அவர்கள் அறிவுறுத்துகின்றனர்.

போலித்துறவிகள் மந்திரமாய வித்தைகள் செய்து மக்களை மயக்குகின்றனர். அவர்களின் தந்திர செயல்களில் மயங்கி காலத்தை வீணாக்கவேண்டாம் என்றும் அவற்றால் ஏமாற வேண்டாம் என்றும் சித்தர்கள் தெருட்டுவர்.

போலித்துறவிகள் செய்யும் சித்து வேலைகள் நிலையற்றவை. அவர்கள் பொருள் பறித்தலுக்காகவே அவற்றைச் செய்கின்றனர்.

உருவ வழிபாட்டினால் கடவுளைக் காண இயலாது. அதனைச் செய்வோர் மூடர்கள்; அதனால் எத்தகையப் பயனும் விளையாது. ஆயினும் கடவுள் இருப்பை அவர்கள் மறுக்கவில்லை.

சடங்குகள் என்னும் பெயரில் சிலைகளுக்கு நீராட்டி, மணியிட்டு வழிபடுவதை அவர்கள் ஏற்கவில்லை. தேர்த்திருவிழா முதலியவற்றை அவர்கள் பயனற்றவை எனக் கருதினர். வேதம் ஓதலைப் பயனற்றது எனக் கொள்வர். வேள்வி செய்தலால் உயர்ஞானம் பெற இயலாது என அவர்கள் எண்ணினர். கதைகள், காவியங்கள், இதிகாசங்கள், புராணங்கள் ஆகியன மக்களுக்கு மயக்கத்தை விளைவித்து உண்மையை மறைக்கின்றன. ஆதலின் அவற்றை அவர்கள் கற்க வேண்டாம் என அறிவுறுத்துகின்றனர்.

அவர்கள் சிறுதெய்வ வழிபாட்டையும் பலியிடலையும் கண்டிக்கின்றனர்.

இறைவனைத் தேடி, பல இடங்களுக்குச் செல்லத் தேவையில்லை. அவ்வாறு செல்லுதல் துன்பமாகும். அவற்றால் மெய்ப்பொருளை அறிய இயலாது.

தீர்த்தமாடுதல், நதியாடல் ஆகியவற்றால் இறையருளைப் பெற இயலாது என்பது அவர்கள் கருத்தாகும்.

*******
*****
***

## சான்றெண் விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | தங்கவேல்சுவாமிகள். எம். பி., | குண்டலினியோகம் | ப. 3 |
| 2. | ஸ்ரீரங்கம் சித்தர் | வாழ்வின்திறவுகோல் | ப. 36 |
| 3. | விமலானந்தம் மது. ச., | தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் (முதல் தொகுதி) | ப. 310 |
| 4. | ஸ்ரீரங்கம் சித்தர் | வாழ்வின் திறவுகோல் | பக். 34, 35 |
| 5. | சிதம்பரனார். சாமி., | சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம். | ப. 70 |
| 6. | வேலுச்சாமி. கி., | திருமந்திரம் – ஒரு திறனாய்வு | ப. 97 |
| 7. | இளங்குமரன். இரா., | சித்தர் பாடல்கள் – சிவவாக்கியர் | ப. 38 |
| 8. | சிதம்பரனார். சாமி., | சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம் | ப. 48 |
| 9. | கணேசன். பி. சி., | சித்தர்கள் கண்ட தத்துவங்கள் | ப. 35 |
| 10. | இராமலிங்க அடிகள் | திருவருட்பா, திருவமுதத்திரட்டு | பக். 296, 297 |
| 11. | முருகேசன் சி. எஸ்., | சித்தர்கள் கண்ட இறைமை | பக். 31, 32 |
| 12. | மறைமலையடிகள் | தமிழர்மதம் | ப. 246 |
| 13. | கணேசன். பி. சி., | சித்தர்கள் கண்ட தத்துவங்கள் | பக். 57, 58 |

இதுவரையும் ஆராய்ந்தவற்றால் பின்கண்ட முடிவுகள் கிடைக்கப் பெற்றன.

'சித்து' எனும் சொல் முதறிவுடைமையையும், மெய்யுணர்வுடை-மையையும் குறிக்கும்.

'சித்தர்' எனும் சொல் அறிவர், நிறைமொழி மாந்தர், மெய்யுணர்வினையுடைய முதறிவு பெற்றோர், சோதிநிலையினையுடையோர் ஆகிய பொருள்களை வழங்கும்.

சித்தர்கள் பலராவர் மக்கள் அவர்களைப் பதினெண் சித்தர்கள் என, தொகைப்படுத்திப் போற்றி வருகின்றனர். அவர்களின் சிறப்புப் பெயர்கள் இயற்பெயர்களாக நிலைத்துவிட்டன.

சித்தர் பாடல்கள் கிடைத்துள்ளன. ஆயினும் அவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் கிடைத்தில. அவர்களைப் பற்றிய செவிவழிச் செய்திகள் பல மக்களிடையே நிலவுகின்றன.

அவர்கள் தவமியற்றிய இடங்களும், அவர்களைக் குறிப்பால் உணர்த்தும் ஊர்ப்பெயர்களும் தமிழ்நாட்டில் உள்ளன.

சித்தர்கள் பழங்காலத்திலிருந்தே குரு-சீடர் மரபில் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் காலங்களை வரையறுக்கப்போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. ஆயினும் சிலர் காலங்களை ஓரளவிற்கு வரையறுக்கலாம்.

வழிகாட்டல், வேறுபாடு கருதாமை, ஞானநிலை அடைதல், மரணமிலாப் பெருவாழ்வு எய்துதல் ஆகியன அவர்கள் குறிக்கோள்களாகும்.

அவர்களின் பெருமைகளைச் சான்றோர்கள் போற்றுவர்.

அவர்களின் பாடல்கள் எளியநடையில், நாட்டுப்புறப் பாடற் சந்தத்தில் உள்ளன. அவற்றில் உவமைகள் [illegible] ஆகிய உத்திகள் கையாளப்பட்டுள்ளன.

அவர்கள் இல்லறத்தை வெறுத்துத் துறவை மேற்கொள்ள விரும்பவில்லை. இல்லறத்திலிருந்து நல்வாய்ப்பு எய்தியபோது துறவை ஏற்பது அவர்கள் கொள்கையாகும்.

விருந்தோம்பலை வாழ்க்கையின் முதன்மைப் பண்பாக அவர்கள் கருதினர். அவர்கள் புலால் உண்பவரை இழிவு செய்யவில்லை. பசியற்ற உண்ணா நிலை எய்துதலை அவர்கள் உயர்வாக எண்ணினர்.

அவர்கள் சாதி–சமய வேறுபாடுகளை ஏற்கவில்லை. இறப்பைத் தவிர்த்தல் சால்பாகும் எனக் கருதினர்.

சித்தர்கள், பசித்தோர்க்கு உணவளிக்கும் ஈகைப் பண்பை முதன்மையாகக் கொண்டனர்.

பொருள் வேட்கையும், காமமயக்கமும், அறிவு மயக்கமும் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டு வாழ்க்கை முறைகளுக்கும் தீமை பயக்கும்.

சமுதாயத்தில் குலமகளிரை அவர்கள் இழிவுபடுத்திலர்; விலை மகளிரின் செயல்களை இழித்துரைப்பர். மேலும் அவர்களை நாடிச்செல்லும் ஆடவர்களைக் கடிந்துரைப்பர். அவர்கள் பெண்டிர் 'தூய்மை'யை ஓர் உயர் பொருளாகக் கருதினர்.

அவர்கள் தம்மை இகழ்வாரிடத்தும் அன்பு காட்டும் பெருந்தகையாளர்கள்.

சித்தர்கள் நூலறிவு ஒன்றினாலேயே இறையுணர்வையும் ஞானத்தையும் முழுமையாக எய்திட இயலாது எனக் கருதினர். ஆசானாகிய குருவின் வழிகாட்டலின்றி, ஒருவர் சித்தி பெற இயலாது.

பொறாமையும் சீடன் அகற்றிருந்து அன்புடன் குருவின் திருவடிக்கு காணிக்கை ஆக்குதல் பக்தியாகும். சற்குருவிற்கும், சொற்குருவிற்கும் பூசனை இயற்றல் வேண்டும். அவர்கள் அகவழிபாட்டு நெறியை வலியுறுத்துகின்றனர்.

குருவின் அறிவுரை சீடனுக்குப் பெருந்துணையாய் அமைகிறது. அவ்வறவுரை மெய்யுணர்வை நல்கும்.

பஞ்ச பூதங்களின் இயல்புகளை உணர்ந்து, தலைவனை அறிந்து, தன்னையறிந்து, ஒழுகுதல் மெய்யுணர்தலாகும்.

வினை தடையாக வரும், அதனை வெல்லல் சிறப்பாகும். ஒருவர் தன்பிழை உணர்ந்து, தன்னை அறியும்போது, அவருக்கு மெய்யுணர்வு உண்டாகும்.

ஞானப்பாதையில் செல்லும் ஒருவர் விரும்பும் பெண்ணின்பம், அவர் மேற்கொண்டிருக்கும் உயர் தவத்திற்குத் தடையாகும். அஃது உடல் அழிவுக்கு வழிவகுக்கும்.

பற்றறுத்தலே துறவாகும். தவமில்லையேல் பேரின்பநிலை வாய்க்காது. அவர்கள் காயத்தை வலுப்படுத்தி, உடலுயிர் ஒன்றச் செய்து ஞான ஒளியில் திகழ்ந்தனர்.

அவர்கள் விந்துவின் சிறப்பை அறிந்து, வாசி நெறிபயின்று, சுழுமுனையறிவு பெற்று, மூலக்கனல் எழுப்பி, தசநாத ஓசை கேட்டு, சும்மா இருக்கும் நிலை எய்தி, காயசித்தி செய்து, குண்டலினி சக்தியை அடைந்து சோதியைக் கண்ணுற்று, ஞான அமிழ்தலைப் பாலை உண்டு மகிழ்வர்.

அவர்கள் பிறப்பு எனும் தளையிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வர்.

ஒளியுடம்பில் ஞான வாழ்வு வாழ்பவர் சற்குரு ஆவார்.

அவரவர் தம் அனுபவத்தால் பேரின்பத்தை அடைதலே சிறப்பாகும்.

சீடன், ஆசானுக்கு இயற்றும் தொண்டால் இறையனுபவத்தைப் பெறலாம்.

சித்தர்கள் நெறி சன்மார்க்கமாகும். அது சமய நெறிகளைக் கடந்தது. அதுவே உலகை உய்விக்கும்.

சித்தர்கள் வாழ்வியலில் மக்கள் மேற்கொள்ள வேண்டிய அறநெறிகளைச் செய்யத்தக்கவை என்றும் செய்யத் தகாதவை என்றும் வகைப்படுத்திக் கூறுகின்றனர்.

அவர்கள் குருவிடத்துக் காட்டும் அன்பைப் போற்றுவர். அறம் செய்வோர் வாழ்க்கையில் மேன்மையுறுவர் எனக் கருதினர்.

ஞானியரின் தொடர்பினால் உண்மையை உணரலாம். மனவுறுதி செயலில் வெற்றியை நல்கும்.

உலக வாழ்க்கை நிலைபேறு உடையதன்று. ஆதலின் பாவம், பொய், வெகுளி, கொலை, கொள்ளை, களவு, இகழ்தல், கஞ்சா, மது, செருக்கு, தீயநட்பு குருவின்றி யோகம் ஆகியவற்றைச் செய்தல் கூடா.

சித்தர்கள் போலித்துறவிகளை இனம்காட்டி, அவ்வகையான வாழ்க்கை மேன்மையாகாது என்று அறிவுறுத்துகின்றனர். அவர்கள் போலித் துறவிகளின் தந்திர மந்திர செயல்களில் ஏமாற வேண்டாம் என்று மக்களுக்கு எச்சரிக்கை செய்வர்.

போலித் துறவிகள் செய்யும் சித்து வேலைகள் நிலையற்றவை. அவர்கள் பொருள் பறித்தலுக்காகவே அவற்றைச் செய்கின்றனர்.

அவர்கள் கடவுள் இருப்பை ஏற்பர் ஆயினும் உருவழிபாட்டை ஏற்கவில்லை.

அவர்கள் திருநீராட்டல், தேர்த்திருவிழா, வேதம் ஓதுதல், வேள்விசெய்தல், கதை, காவியஇதிகாச புராணங்களைப் படித்தல், ஆகிய சடங்குகள் செய்வதைப் பொய் ஆன்மீகம் எனக் கூறினர்.

அவர்கள் சிறுதெய்வ வழிபாட்டையும், பலியிடலையும் கண்டிக்கின்றனர். இறைவனைத்தேடி பல இடங்களுக்குச் செல்லத் தேவையில்லை

என்பதும் அவ்வாறு செல்லுதல் துன்பமாகும் என்பதும் அவற்றால் மெய்ப்பொருள் கிட்டாது என்பதும் அவர்கள் கருத்துக்களாகும் தீர்த்தமாடுதல், நதியாடல் ஆகியவற்றால் இறையருளைப் பெற இயலாது என்று அவர்கள் கருதினர்.

**முதல் நூல்**

சரவணமுத்துப்பிள்ளை, வா., (தொ.ஆ.)
பதினெண் சித்தர்கள் பெரிய ஞானக் கோவை
பி. இரத்தினநாயகர் அன் சன்ஸ்,
26, வெங்கட்ராமய்யர் தெரு,
கொண்டித்தோப்பு,
சென்னை - 79.
சுத்தப் பதிப்பு, 1986.

**துணை நூல்கள்**

1. தொல்காப்பியம் பொருளதிகாரம் (நச்சினார்க்கினியர் உரை)
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி - 6,
சென்னை - 1.
1961.

2. புறநானூறு
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 1.
1973.

3. குறுந்தொகை
திருநெல்வேலி, தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
79, பிரகாசம் சாலை,
சென்னை - 1.
மறு பதிப்புகள் செப். 1978.

4. சிலப்பதிகாரம் — தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு,
தஞ்சாவூர்.
பத்தாம் பதிப்பு, நவம்பர், 1985.

5. திருக்குறள் — பாரதி பதிப்பகம்,
தியாகராய நகரம்,
சென்னை - 17.
ஆறாம் பதிப்பு, 1966.

6. திருமந்திரம் — திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனம்,
1987.

7. திருவருட்பா
ஆறாவது திருமுறை — அருட்பெருஞ்ஜோதி அச்சகம்,
110 அம்மன் கோவில் தெரு,
[illegible] சமீபம்,
சென்னை - 600 001.
1942.

8. திருவருட்பா
ஆறாவது திருமுறை — திருவருட்பா பதிப்பகம்,
வடலூர் - 607 303.
முதற்பதிப்பு 5.10.1991.

9. திருவருட்பா
திருவமுதத்திரட்டு — சென்னை இராமலிங்கம் பணி மன்றம்,
முதற்பதிப்பு, 30.1.1991.

10. மதுரைக் கலம்பகம் — திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
1/140 பிரகாசம் சாலை,
சென்னை - 1.
நவம்பர், 1972.

11. அரவிந்தன், மு.வை., — சித்தர்கள் ஓர் அறிமுகம்,
மணிவாசகர் பதிப்பகம்,
12-பி, மேலசன்னதி,
சிதம்பரம்-608 001.
முதற்பதிப்பு, 1987.

12. இளங்குமரன், இரா., — சித்தர் பாடல்கள் சிவவாக்கியர்
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
79, பிரகாசம் சாலை,
சென்னை - 108.
முதற்பதிப்பு, 1984.

13. இளமதி சானகிராமன், ச., — 1. சித்தர்களின் சிந்தனைகள்
(பாகம் 1 தத்துவம் இலக்கியம்)
குறிஞ்சி பதிப்பகம்,
ஆசிரியர் குடியிருப்பு,
டி-9 பல்கலைக் கழக வளாகம்,
ஆர்.வி.நகர்,
சின்ன காலாப்பட்டு,
புதுச்சேரி - 605 104.
முதற்பதிப்பு, டிசம்பர் 1991.

2. சித்தர்களும் சமூகப் பார்வையும்
குறிஞ்சி பதிப்பகம்,
ஆசிரியர் குடியிருப்பு,
டி–9 பல்கலைக் கழக வளாகம்,
ஆர்.வி.நகர்,
சின்ன காலாப்பட்டு,
புதுச்சேரி 605 104.
முதற்பதிப்பு, டிசம்பர் 1990.

3. பேரின்ப வாழ்வு
குறிஞ்சி பதிப்பகம்,
மரக்காணம் சாலை,
சின்ன காலாப்பட்டு,
புதுச்சேரி.
முதற்பதிப்பு, அக்டோபர் 1984.

14. இராமநாதன், அரு., (ப.ஆ.)
சித்தர் பெரிய ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள்,
பிரேமா பிரசுரம்,
சென்னை – 24.
மூன்றாம் பதிப்பு, செப். 1968.

15. கணேசன், பி.சி.,
சித்தர் கண்ட தத்துவங்கள்
ஸ்ரீஇந்து பப்ளிகேஷன்ஸ்,
2, முத்துக்கிருஷ்ணன் தெரு,
த.பெ.எண். 1040,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை 600 017.
முதற்பதிப்பு, ஜூலை 1992.

16. கமலக்கண்ணன், பா., ஞானக்கனல்
வானதி பதிப்பகம்,
13, தீனதயாளு தெரு,
தி.நகர்,
சென்னை - 17.
முதற்பதிப்பு, அக்டோபர் 1989.

17. சிதம்பரனார், சாமி., சித்தர்கள் கண்ட விஞ்ஞானத் தத்துவம்
இலக்கிய நிலையம்,
9, சௌராஷ்டிரா நகர்,
7வது தெரு,
சென்னை 24.
இரண்டாம் பதிப்பு, 1963.

18. சிவஞானம், ம.பொ., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு
இன்ப நிலையம்,
34, கச்சேரி ரோடு,
மயிலாப்பூர்,
சென்னை - 4.
மறு பதிப்பு, ஜூன் 1967.

19. சுப்பிரமணிய பாரதியார், சி., தத்துவம்
கன்னித் தமிழ்ப் பதிப்பகம்,
மதுரை.
முதற்பதிப்பு, ஜனவரி 1956.

20. சுப்பிரமணிய பிள்ளை, கா., சைவ சித்தாந்த வரலாறு
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
70, பிரகாசம் சாலை,
சென்னை 108.
முதற்பதிப்பு, ஜூன் 1984.

21. சோமு, மீ.ப., சித்தரிலக்கியம்
அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு,
அண்ணாமலை நகர்-608 002.
முதற்பதிப்பு, 1988.

22. ஸ்ரீரங்கம் சித்தர், வாழ்வின் திறவுகோல்
மே/பா. பிரம்ம ஸ்ரீநாராயணமூர்த்தி,
சி3-33 டவுன்ஷிப்,
பி.எச்.இ.எல்.,
திருச்சி.
மூன்றாம் பதிப்பு, ஜனவரி 1992.

23. ஸ்ரீராமானந்த, யோகதாராவலி
ஸாதனா நிகேதன்,
கீழ்க்கோட்டையூர்,
கும்பகோணம் 612 001.
முதற்பதிப்பு, 1989.

24. ஜெகவீரபாண்டியனார், அகத்திய முனிவர்
மதறாஸ் சி.வரதராஜுலு நாயுடு பிரஸில்,
(பதிப்பிக்கப்பட்டது)
மதுரை.
இரண்டாம் பதிப்பு, 1940.

25. தங்கவேல் சுவாமிகள், எம்.பி., குண்டலினி யோகம்
இயற்கை இல்லம்,
36, இலட்சுமிபுரம்,
பழநி 624 502.
முதற்பதிப்பு, 1987.

26. துரைக்கண்ணதாஸ் பதினெண் சித்தர்கள் இயற்றிய நாடி சாஸ்திரம்
பூங்கொடி பதிப்பகம்,
14, சித்திரைக்குளம்,
மேற்கு வீதி,
மயிலாப்பூர்,
சென்னை 600 004.
முதற்பதிப்பு, 1990.

27. [illegible] சித்தர் சிந்தனைகள்
993, அரிக்காரத் தெரு,
கரந்தை அஞ்சல்,
தஞ்சை 613 002.
1979.

28. நாராயணன், க., சித்தர் தத்துவம்
தமிழ்ப் புத்தகாலயம்,
58, டி.பி.கோயில் தெரு,
என்.கே.டி.பெண்கள் பள்ளி எதிரில்,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005.
இரண்டாம் பதிப்பு, ஆகஸ்டு 1990.

29. பசுபதி, கே.ஆர்.,

சித்தர்கள்

புதுப்புனல் பதிப்பகம்,
தேரடிக்கடைத் தெரு,
திருச்சி - 2.
முதற்பதிப்பு, 1963.

30. மறைமலையடிகள்,

தமிழர் மதம்

திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
1/140 பிரகாசம் சாலை,
சென்னை - 1.
ஜூலை 1974.

31. மாடசாமி, ச.,

பாம்பாட்டிச் சித்தர்

ஓ வெளியீடு,
3 சங்கையா கோவில் தெரு,
பழைய குயவர்பாளையம் சாலை,
மதுரை.
முதற்பதிப்பு, டிசம்பர் 1980.

32. மாணிக்கவாசகம், இரா.,

1. திருமந்திர ஆராய்ச்சி
   அன்னை அபிராமி அருள்,
   சென்னை - 30.
   முதற்பதிப்பு, 1982.

2. சித்தர்கள் பரிபாஷைத் அகராதி
   திருமகள் நிலையம்,
   55, வெங்கட்நாராயண ரோடு,
   தி. நகர்,
   சென்னை - 600 017.
   இரண்டாம் பதிப்பு, செப். 1988.

33. முருகேசன், சி.எஸ்., சித்தர்கள் கண்ட இறைமை
பூம்புகார் இலக்கிய மன்றம்,
28, சாலை மாரியம்மன் கோவில்வீதி,
முத்தியால்பேட்டை,
புதுவை 605 003.
முதற்பதிப்பு, 1988.

34. மெய்யப்பன், ச., (ப.ஆ.) சித்தர் பாடல்கள்
மணிவாசகர் பதிப்பகம்,
12-பி, மேலசந்நிதி,
சிதம்பரம் 608 001.
முதற்பதிப்பு, 1987.

35. யோகேஷ் யத்ரா, சித்தர்களின் சிறந்த மந்திரங்கள்
யமுனா பிரசுரம்,
10, ரங்கய்யா கார்டன் தெரு,
மயிலாப்பூர்,
சென்னை 600 004.

36. ரெங்கராஜ், பி., சித்தர்கள் அருளிய ஞானநூல்
அகத்தியர் அறநெறி திருச்சபை,
துறையூர்.
நவம்பர் 1980.

37. தவத்திரு.ரெங்கராஜ தேசிக சுவாமிகள், 1. சித்தர் வழிபாடும் உண்மை ஆன்மீகமும்
ஸ்ரீஅகத்தியர் சன்மார்க்க சங்கம்,
ஓங்காரக் குடில்,
துறையூர் 621 010,
திருச்சி மாவட்டம்.
முதற்பதிப்பு, ஏப்ரல் 1986.

2. சித்தர்கள் போற்றித் தொகுப்பும்
அகத்தியர் தத்துவ புகழுரையும்
முதற்பதிப்பு, பிப்ரவரி 1988.

3. அருள்ஞான அறன் சிறப்பு
அகத்தியரின் அருள் முப்பு
முதற்பதிப்பு, மே 1990.

4. போற்றினால் உலகு வினை
அகவுமப்பா
முதற்பதிப்பு, செப். 1992.

38. வளர்மதி, (தொ.ஆ.), சித்தர் பாடல்கள்
மதி நிலையம்,
52, வி.என்.தாஸ் ரோடு,
சென்னை – 2.
முதற்பதிப்பு, மார்ச்சு 1989.

39. வடிவேலு முதலியார், மா., பெரிய சிவவாக்கியர் பாடல்
(மூலமும் உரையும்)
பி.இரத்தினநாயகர் லைன்ஸ்,
41, வெங்கட்ராமய்யர் தெரு,
ஜி.டி.,
சென்னை.
1933.

**அகராதி — களஞ்சியம்**

1. தமிழ்மொழியகராதி — ஏசியன் எஜுகேசனல் சர்வீஸ்,<br>புதுதில்லி - சென்னை.<br>ஆறாம் பதிப்பு, 1990.

2. அபிதான சிந்தாமணி — ஏசியன் எஜுகேசனல் சர்வீஸ்,<br>புதுதில்லி - சென்னை.<br>இரண்டாம் பதிப்பு, 1988.

3. கலைக்களஞ்சியம் (தொகுதி நான்கு) — தமிழ் வளர்ச்சிக் கழகம்,<br>சென்னை.<br>முதற்பதிப்பு, 1956.

4. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி ஒன்று) — தமிழ்ப் பல்கலைக் கழகம்,<br>தஞ்சாவூர்.<br>முதற்பதிப்பு, ஏப்ரல் 1986.

5. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி எட்டு) — தமிழ்ப் பல்கலைக் கழகம்,<br>தஞ்சாவூர்.<br>1991.

6. தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம். (முதல் தொகுதி) — ஐந்திணைப் பதிப்பகம்,<br>282, பாரதி சாலை,<br>திருவல்லிக்கேணி,<br>சென்னை - 600 005.<br>முதற்பதிப்பு, டிசம்பர் 1987.

## மலர்கள் — ஆய்வேடுகள்


1. இரண்டாவது உலகத்தமிழ் மாநாட்டு மலர் — சென்னை. 1968.

2. ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு விழா மலர் — மதுரை. 1987.

3. பாண்டியன், கி., — சித்தர் சிவவாக்கியர் பாடல்கள் ஓர் ஆய்வு (எம் ஃபில்) பாரதிதாசன் பல்கலைக் கழகம், சனவரி 1989.

4. மாடசாமி, ச., — பாம்பாட்டிச் சித்தர் (எம் ஃபில்) தமிழ் உயர் ஆராய்ச்சி மையம், அழகப்பா கல்லூரி, காரைக்குடி. ஜுன் 1980.

5. வேலுச்சாமி, கி., — திருமந்திரம் ஒரு திறனாய்வு (பிஎச்.டி.) தமிழ் உயர் ஆராய்ச்சி மையம், அழகப்பா கலைக் கல்லூரி, காரைக்குடி. செப்டம்பர் 1984.

**ஆய்வுக்கோவை**

1. இரண்டாம் கருத்தரங்கு தமிழ் இலக்கிய ஆய்வுக்கோவை (தொகுதி ஒன்று) — அனைத்திந்தியத் தமிழ் இலக்கியக் கழகம் தஞ்சாவூர் 613 005. 1988.

2. ஏழாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை (தொகுதி ஒன்று) — இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், நாகர்கோவில் தென்திருவிதாங்கூர் இந்துக் கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு, 1975.

3. இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை (தொகுதி மூன்று) — இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர். 1988.

4. ஆய்வுக்கோவை (எண். தெரியவில்லை) — கட்டுரை 'சாணாக்கலை' இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர்.

**ஆங்கில நூல்**

Subramania Iyer, A.V., *The Poetry and the philosophy of the Tamil Siddhars,* Manivasakar Noolakam, Chidambaram. April 1969.

## பின்னிணைப்பு

அ. சித்தர்களின் அகரவரிசை பெயர் பட்டியல்

ஆ. சித்தர்களின் படங்கள்

இ. அருஞ்சொற்கள்

ஈ. சித்தர் பாடல்கள் - பதிப்புகள்.

அ. <u>சித்தர்களின் அகரவரிசை பெயர் பட்டியல்</u>

<u>ஸ்ரீஅகத்தியர் சன்மார்க்க சங்கம், துறையூர் வெளியிட்டுள்ள</u>

<u>சித்தர்கள் போற்றித் தொகுப்பில் உள்ள சித்தர்களின் பெயர்கள்.</u>

அகத்தியர்
அகப்பேய்ச் சித்தர்
அசுவினித் தேவர்
அத்திரிமகரிஷி
அநுமான்
அம்பிகானந்தர்
அருணகிரிநாதர்
அருள்நந்தி சிவாச்சாரியார்
அல்லமா பிரபு
அழுகண்ணிச் சித்தர் 10
இடைக்காடர்
இராமலிங்க சுவாமிகள்
இராமதேவர்
இராமானந்தர்
உமாபதி சிவாச்சாரியார்
ஔவையார்
கஞ்சமலைச் சித்தர்
கடைப்பிள்ளைச் சித்தர்
கடுவெளிச் சித்தர்
கஞ்ஞானந்தர் 20
கண்ணிச்சித்தர்
கணநாதர்
கணபதிதாசர்
கதம்பமகரிஷி
கபிலர்
கமலமுனிவர்
கருவூர் தேவர்
கல்லுளிச்சித்தர்
கலைக்கோட்டு முனியர்
கவுபாலச்சித்தர் 30

கைராமர்
காகபுஜண்டர்
காசிபர்
காலாங்கிநாதர்
குகைநமச்சிவாயர்
குதம்பைச் சித்தர்
குமரகுருபரர்
குருதட்சணாமூர்த்தி
குருராஜர்
குறும்பைச் சித்தர் 40
கூர்மானந்தர்
கொங்கணேஸ்வரர்
கோரக்கர்
கௌசிகர்
கௌதமர்
சங்குமுனிச் சித்தர்
சங்கரமஹரிஷி
சங்கிலிச் சித்தர்
சச்சிதானந்தர்
சட்டநாதர் 50
சண்டிகேசர்
சத்யானந்தர்
சிவயோகமாமுனிவர்
சிவவாக்கியர்
சிவானந்தர்
சுகப்பிரமர்
சுந்தரானந்தர்
சுந்தரமூர்த்தி
சூதமுனிவர்
சூரியானந்தர் 60

ருவமுனிவர்
ப்ப ஞமுனிவர்
சொருபானந்தர்
ஜம்புமகரிஷி
ஜமதக்னி
ஜனகர்
ஜனந்தனர்
ஜனக்குமாரர்
ஜெகநாதர் 70
ஜெயமுனிவர்
ஞானசித்தர்
டமாரனந்தர்
தன்வந்திரி
தாயுமான சுவாமிகள்
தானந்தர்
திருகோணசித்தர்
திருஞானசம்பந்தர்
திருநாவுக்கரசர்
திருமாளிகைதேவர் 80
திருமூலதேவர்
திருவள்ளுவர்
துர்வாச முனிவர்
தேரையர்
நந்தனார்
நந்தீஸ்வரர்
நாதாந்த சித்தர்
நாரதர்
நொண்டிச்சித்தர்
பட்டினத்தார் 90

பத்ரகிரியார்
பதஞ்சலியார்
பரத்துவாசர்
பரமானந்தர்
பராசரிஷி
பாம்பாட்டிச் சித்தர்
பிங்களமுனிவர்
பிடிநாகீசர்
பிருகு மகரிஷி
பிரும்ம முனிவர் 100
பீர்முகமது
புண்ணாக்கீசர்
புலத்தீசர்
புலிப்பாணிச்சித்தர்
பூனைக்கண்ணார்
போகமகரிஷி
மச்சமுனிவர்
மஸ்தான்
மயூரேசர்
மாணிக்கவாசகர் 110
மார்க்கண்டேயர்
மாலாங்கன்
மிருகண்டரிஷி
முத்தானந்தர்
மெய்கண்டதேவர்
மௌனச்சித்தர்
யாகோபு
யூகிமுனிவர்
யோகச்சித்தர்
யோகானந்தர் 120

********
******
****
**



குரு முனிவர் என்னும் அகத்தீசர்



பட்டினத்தார்

## இ.உ. அருஞ்சொற்கள்

| | | |
|---|---|---|
| அகப்பேய் | - | மனம் எனும் பேய் |
| அட்டசித்தி | - | 1. அணிமா 2. கரிமா<br>3. இலகிமா 4. மகிமா<br>5. பிராப்தி 6. வசித்துவம்<br>7. பிராகாமியம் 8. ஈசத்துவம் |
| அத்தன் | - | தலைவன், இறைவன், தந்தை |
| அத்தம் | - | பொருள் |
| அப்பு | - | நீர் |
| அரன் | - | தலைவன் |
| அவம் | - | வீண் |
| அநுபூதி | - | மெய்யறிவு |
| ஆகம் | - | உடம்பு |
| இடைகலை | - | சந்திர கலை இடமூக்கு மூச்சு |
| உருவுடம்பு | - | தூலசரீரம் |
| ஓங்காரம் | - | பிரணவநாதம், ஓம் |
| கரணம் | - | மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனும் நான்கு. |
| குண்டலி கடுத்தல் | - | கோணலை நிமிர்த்துதல் |
| கும்பி | - | ஒரு [illegible] |
| கும்பகம் | - | காற்றினை உள்ளே அடக்குதல் |
| குலாமர் | - | கீழோர் |
| சரியை | - | கடவுளைக் கோவிலில் வைத்து வழிபடுதல், சிவாலயத்திற்கும் சிவனடியார்களுக்கும் தொண்டு புரிவது. |

சீவன்முத்தி – உயிரோடும் வாழும்போதே பற்றறுத்து ஞானம் எய்தி இறவாமல் சோதியாகி மறைவது.

தசநாடி – 1. இடைகலை 2. பிங்கலை
3. சுழுமுனை 4. சிகுவை
5. பூஷணி 6. காந்தாரி
7. அத்தி 8. அலம்புடை
9. சங்கினி 10. குரு

தசவாயு – 1. பிராணன் 2. அபானன்
3. உதானன் 4. வியானன்
5. சமானன் 6. நாகன்
7. கூர்மன் 8. கிருகரன்
9. தேவதத்தன் 10. தனஞ்செயன்

தற்பதம் – சுழுமுனை

நடலை – வருத்தம், வஞ்சனை

நடுவர் – யமன்

நிமலன் – இறைவன்

பிங்கலை – சூரியகலை – வலமூக்கு மூச்சு

பூரகம் – மூச்சை உள்ளிழுத்தல்

மதியப்பால் – அமிழ்து

மேலைவாசல் – சுழுமுனை

பேழி – மேரு, மலை

வன்னி – ஒளி, நெருப்பு

விருத்தர் – முதியவர்

| | | | |
|---|---|---|---|
| வாசி | — | மூச்சுக்காற்று | |
| வாயில் | — | ஒன்பது | |
| | | கண் | 2 |
| | | காது | 2 |
| | | மூக்குத் துவாரம் | 2 |
| | | வாய் | 1 |
| | | நீர் கழிக்கும் வாயில் | 1 |
| | | மலங் கழிக்கும் வாயில் | 1 |

~~~~~
~~~~~

## ஈ. சித்தர் பாடல்கள் பதிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | நூல் | - | சித்தர் பெரிய ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள். |
| | பதிப்பாசிரியர் | - | அரு. ராமநாதன். |
| | வெளியீடு | - | பிரேமா பிரசுரம்<br>சென்னை - 24. |
| | ஆண்டு | - | செப்டம்பர் 1968 |
| | பதிப்பு | - | மூன்றாம் பதிப்பு |
| 2. | நூல் | - | சித்தர் பாடல்கள் |
| | தொகுப்பாசிரியர் | - | வளர்மதி |
| | வெளியீடு | - | மதிநிலையம்,<br>52, வி.என்.தாஸ் ரோடு,<br>சென்னை - 2. |
| | ஆண்டு | - | மார்ச்சு 1989 |
| | பதிப்பு | - | முதற்பதிப்பு |
| 3. | நூல் | - | சித்தர் பாடல்கள் |
| | பதிப்பாசிரியர் | - | ச. மெய்யப்பன் |
| | வெளியீடு | - | மணிவாசகர் பதிப்பகம்,<br>12-பி, மேலசன்னதி,<br>சிதம்பரம் 608 001. |
| | ஆண்டு | - | 1987 |
| | பதிப்பு | - | முதற்பதிப்பு |

| | | | |
|---|---|---|---|
| 4. | நூல் | - | சித்தர் பாடல்கள் |
| | பதிப்பாசிரியர் | - | த. கோவிந்தன் |
| | வெளியீடு | - | பூம்புகார் பதிப்பகம் |
| | | | 63, பிராட்வே |
| | | | சென்னை - 600 108. |
| | ஆண்டு | - | மே 1992 |
| | பதிப்பு | - | ஐந்தாம் பதிப்பு |

ஃஃஃஃ